# நன்னூல் உரைவளம்

2

## பாயிரம் - II

இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

நன்னூல் உரைவளம் (தொகுதி-2)

# பாயிரம் - 2

பதிப்பாசிரியர்

முனைவர் இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

இரண்டாம் முதன்மைச் சாலை,

தரமணி, சென்னை-600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Nannūl uraivaḷam (Vol. 2) Pāyiram -2** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 692 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | 176 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 75/- (Rupees Seventy five only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 113

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றி யிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக் கிடக்கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மை யுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவினை உடையது. காலமும் கடும்புனலும் கொண்டது போக எஞ்சியன சிலவே யாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந் தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந்நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி இன்றளவும் தனிச் சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரைவிளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறுபலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரை வளத்தினைஎம் நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர்,சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலா சாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர், வ.குமார சாமிப் புலவர், வை.மு.சடகோபராமானுசாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார், பவானந்தம் பிள்ளை, கொ.இராமலிங்கத் தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசசு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவார் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழி பெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல் லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரை வளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின் TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U.போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ்வுரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான முனைவர் இரா.கண்ணன், சென்னை மாநிலக்கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ்வுரைவளத்தின் பதிப்புப் பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனப் பணிகளில் எம்முடன் இணைந்து பணியாற்றும் துணை இயக்குநர், பேராசிரியப் பெருமக்கள் மற்றும் அலுவலக ஊழியர்கள் ஆகிய அனைவர்க்கும் எம் நன்றி உரித்தாகுக.

கரு.அழ.குணசேகரன்

சென்னை – 113.

12.01.2011.

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன.பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக் கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப் படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண் டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப்பட்டது. நன்னூல் ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக் கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும் சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சம காலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்று வரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமை யானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகியுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலைநாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளையேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் ***கரு.அழ.குணசேகரன்*** அவர்களும், துணை இயக்குநர் **திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன்** அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை **முனைவர் ந.கலைவாணி** அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

10.11.2010<br>சென்னை–55

**இரா.கண்ணன்.**

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| *அவி* | – | *அவிநயம்* |
| *இ-ள்* | – | *இதன் பொருள்* |
| *இல, விள* | – | *இலக்கண விளக்கம்* |
| *உ-ம்* | – | *உதாரணம்* |
| *உணர்-ற்று* | – | *உணர்த்துதல் நுதலிற்று* |
| *எ-டு* | – | *எடுத்க்காட்டு* |
| *எ-று* | – | *என்றவாறு* |
| *எ-னின்* | – | *என் நுதலிற்றோ எனின்* |
| *சுவாமி* | – | *சுவாமிநாதம்* |
| *சூ-ம்* | – | *சூத்திரம்* |
| *தொல், எழு* | – | *தொல்காப்பியம் எழுத்ததிகாரம்* |
| *தொல், சொல்* | – | *தொல்காப்பியம் சொல்லதிகாரம்* |
| *தொல், பொருள்* | – | *தொல்காப்பியம் பொருளதிகாரம்* |
| *தொன்* | – | *தொன்னூல் விளக்கம்* |
| *நச்* | – | *நச்சினார்க்கினியர்* |
| *ந.பா* | – | *நவநீதப் பாட்டியல்* |
| *நேமி* | – | *நேமிநாதம்* |
| *பா-டு* | – | *பாட வேறுபாடு* |
| *பொ-ரை* | – | *பொழிப்புரை* |
| *மா.அலங்* | – | *மாறனலங்காரம்* |
| *மு.வீ* | – | *முத்துவீரியம்* |
| *வீர* | – | *வீரசோழியம்* |
| *வெண், பாட்* | – | *வெண்பாப் பாட்டியல்* |

**அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ,ஒ, ஓ, ஔ, ஃ – இவ்வெழுத்துக்கள் முறையே** a , ā , i , ī ,u ,ū ,e, ē ,ai ,o, ō, au, kh **எனவும்,**

**க், ங் , ச், ஞ் , ட் ,ண், த், ந் , ப், ம், ய், ர் , ல் , வ், ழ், ள், ற் , ன் – வ்வெழுத்துக்கள் முறையே** k, ṅ , s, ñ , t , ṇ, ṭ , n , p , m , y , r , l , v ,ḻ ,ḷ, ṟ , ṉ, kh

**எனவும் ஆங்கில எழுத்துப்பெயர்ப்பில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.**

# பாயிரம் – 2

## ஆசிரியரியல்பு

### நல்லாசிரியர்

25. * குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ னூலுரை யாசிரி யன்னே.

குலன் அருள் தெய்வம் கொள்கை மேன்மை
கலை பயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலம் மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும்
உலகு இயல் அறிவு ஓடு உயர் குணம் இனையவும்
அமைபவன் நூல் உரை ஆசிரியன் அன்னே.

kulan̲ arul̲ ṭeyvam kol̲kai mēn̲mai
kalai payil ṭel̲ivu katturai van̲mai
nilam malai niṛaikōl malar nikar mātsiyum
ulaku iyal aṛivu ōtu uyar kuṇam in̲aiyavum
amaipavan̲ nūl urai āsiriyan̲ an̲n̲ē.

---

* மயிலை நாதர் இந் நூற்பா முதல் அடுத்து வரும் நான்கு நூற்பாக்களுக்கும், ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை பாயிரப் பகுதி முழுமைக்கும் விளக்கம் கூறவில்லை.

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

## The qualities of a teacher

The character and qualifications of a teachers are: he must be of high or good caste; benevolent or affable; a believer and worshipper of God; respectable; having practical knowledge of the different branches of learning; possessing teaching powers; bearing comparison with (a) the earth, (b) a mountain (c) a balance, and (d) a flower; having a knowledge of the world (common sense) and of a good disposition.

## ஒப்புமைப் பகுதி

......பூமியெனப் பொறை முயற்சி அளவு பயன்
வன்மை
நதிக்குளிர்ச்சி தூய்து ஒழுக்கம் தெளிவூற்று நிறை
போல்
நடுஜயந் தீர்த்தல் மலைபோல் தோற்ற நிலைமை
மதிப்பரிய பொருள்மாறா வளங்கடல்
போல்நிறைவும்
மழையுண்டும் வற்றாமை விரிவாழ மலர்போல்
இதக்கடி மங்கல மலர்ச்சி இன்றியமையாமை
யிரணியம்போற் குலம்பிறவும் உள்ளவன்
மெய்க்குருவே
(சுவாமி.:4)

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், நிறுத்தமுறையானே ஆசிரியனது வரலாறு உணர் – ற்று.

இ – ள்.: இவ்வியல்பினை யுடையார் கற்பிக்கும் ஆசிரியர் ஆவர், எ – று.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், கற்கப்படுவோராகிய ஆசிரியர் இலக்கணம் கூறுகின்றது.

இ–ள்.: **குலன்** – உயர்ந்த குலத்தோனாகியும், **அருள்** – உயிர்களிடத்துத் தயவிரக்கம் உடையோனாகியும், **தெய்வங் கொள்கை** – நானே பிரமம் என்பது இல்லாமல் யாதொரு தெய்வமேனும் கொண்டவனாகியும், **மேன்மை** – யாவருடையவஃதிவையும் தனது நூலின்

வழி இழுக்கும் மேம்பாடுள்ளவனாகியும், **கலைபயி றெளிவு** – தலைநூற் பயிற்சியிலே தெளிந்த அறிவைக் கொளுத்துவானாகியும், **கட்டுரை** – யாதொரு சொல்லேனும் உறுதி பயக்கும் சொல் லன்றிக் கூறானாகியும், **வன்மை** – எதிர்வாதிகளால் வெல்ல ஒண்ணாத வலியுடையனாகியும், **நிலம்** – நிலத்தினது தன்மை யுள்ளவனாகியும், **மலை** – மலையினது தன்மையுள்ள வனாகியும், **நிறை கோல்** – தராசினது தன்மையுள்ளவனாகியும், **மலர்நிகர் மாட்சியும்** – மலரினது தன்மை யொத்த மாட்சிமை உடையவனாகியும், **உலகியல் அறிவோடு உயர்குணம்** – உலகவொழுக்கம் வழுவாததனோடு மிக்கான அறிவுடையோ னாகவும், **இனையவும் அமைபவன்** – இவை போல்வன பிறவுமாகிய மாட்சிமை எல்லாவற்றையும் பொருந்தினவன், **நூலுரை ஆசிரியன்னே** – நூல் கற்பிக்கப்பட்ட ஆசிரியன், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

இது, நிறுத்த முறையானே ஆசிரியனது வரலாற்றைச் சொல்லுகின்றது.

**இ–ள்.: குலன்**–நல்ல சாதியும், **அருள்**–கருணையும், **தெய்வங் கொள்கை**–கடவுள் வழிபாடும், **மேன்மை**–மேன்பாடும், **கலைபயி றெளிவு**– நூல்களிலே பழகிய தெளிவும், **கட்டுரை வன்மை**–தொடுத்துச் சொல்லுகின்ற உரைவலிமை யும், **நில மலை நிறைகோன் மலர் நிகர்** – நிலத்தையு மலையையுந் துலாக்கோலையும் மலரையும் நிகர்க்கின்ற, **மாட்சியும்**– குணங்களும், **உலகியல்** – உலக நடையை, **அறிவு**–அறியுமறிவும், **உயர்குணம்**–உயர்வாகிய குணங்கள், **இனையவும்**–இவை போல்வன பிறவும், **அமைபவன்**–நிறைந்திருப்பவன், **நூலுரையாசிரியன்** –நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான், **எ – று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே ஆசிரியனது வரலாறு உணர்த்துகின்றது.

**இ–ள்.: குலனரு டெய்வங் கொள்கை மேன்மை** –மேன்மையாகிய குலமும் மேன்மையாகிய கருணையும் மேன்மையாகிய கடவுள் வழிபாடும், **கலைபயி றெளிவு** – பல நூல்களிற் பழகிய தேற்றமும், **கட்டுரை வன்மை**– நூற் பொருளை மாணாக்கர்க்கு எளிதினுணர்த்தும் உரை வலியும், **நில மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும்** – நிலத்தையும் மலையையும் துலாக்கோலையும் பூவையு மொத்த மேன்மை யும், **உலகிய லறிவோடு** – உலகநடையை யறிகின்ற அறிவுடனே, **உயர்குணம்** – உயர்ந்த குணமும், **இனையவும்**– இவை போல்வனவும், **அமைபவன்**– பொருந்தி யிருப்பவன், **நூலுரையாசிரியன்** – நூலைக் கற்பிக்க வல்ல ஆசிரியனாம், **எ–று.**

இதனுள், மேன்மை யென்றதைக் குலனரு டெய்வங் கொள்கை யென்பனவற்றிற்கு விசேடணமாக்குக. பின்னர்க் கலை பயிறெளிவு கட்டுரை வன்மை மலர் நிகர் மாட்சி யென வரைந்தோதியதனால், முன்னர்க் குலனு மருளுந் தெய்வங் கொள்கையு மேன்மை யென வரைந் தோதல் வேண்டிற்று.

இவ்வாறன்றிக் குலனு மருளுந் தெய்வங் கொள்கையு மேன்மையும் அமைபவனெனின் மயங்க வைத்த லென்னுங் குற்றமாம்; அன்றியும் உயர்குண மினையவு மமைபவ னென்றதில் மேன்மை யடங்குதலால், கூறியது கூறலுமாம்.

இனி ,

**'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்**
**வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு**
**பன்னருஞ் சிறப்பி னல்லா சிரியர்'**

என இக் குற்றந் தீர்தற் பொருட்டு வரைந்தோதியது காண்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :- குலன்** – நற்குலப் பிறப்பும், **அருள்** – கருணையும், **தெய்வம் கொள்கை** – தெய்வபக்தியும், **மேன்மை** – (இவற்றால் வந்த) பெருமையும், **கலைபயில் தெளிவு** – நூல்களில் பழகிய தேர்ச்சியும், **கட்டு உரைவன்மை** – மாணாக்கர்க்கு நூற்பொருளைப் போதிக்கும் வல்லமையும், **நிலம் மலை நிறைகோல் மலர்நிகர்** – பூமியையும் மலையையும் தராசுக் கோலையும் பூவையும் ஒத்த, **மாட்சியும்** – பெருமையும், **உலகு இயல் அறிவோடு** – உலக நடையை அறியும் ஞானமும், **உயர்குணம் இனையவும்** – இவை போன்ற வேறு பல நற்குணங்களும், **அமைபவன்** – பொருந்தப் பெற்றவனே, **நூல் உரை ஆசிரியன்** – நூலைப் போதிக்கும் ஆசிரியனாவான்.

குறிப்பு :-

நிலம், மலை, நிறைகோல், மலர் இவற்றின் மாட்சியை வருஞ் சூத்திரங்களிற் காண்க. மேன்மை என்பதை, குலன் அருள் தெய்வங்கொள்கை என்பனவற்றிற்கும் அடைமொழி யாக்கலாம்.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: குலன் அருள் தெய்வங் கொள்கை மேன்மை** – உயர்குடிப் பிறப்புஞ் சீவ காருண்ணியமுங் கடவுள் வழிபாடுமாகிய

இவைகளால் எய்திய மேன்மையும், **கலை பயில் தெளிவு** – பல நூல்களிலே பழகிய தேற்றமும், **கட்டுரை வன்மை** – நூற்பொருளை மாணாக்கர் எளிதின் உணரும்படி தொடுத்துச் சொல்லும் வன்மையும், **நிலம் மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும்** – நிலத்தையும் மலையையுந் துலாக்கோலையும் பூவையு மொத்த குணங்களும், **உலகு இயல் அறிவு** – உலக நடையை அறியுமறிவும், **உயர்குணம் இனையவும் அமைபவன்** – உயர்வாகிய குணங்கள் இவை போல்வன பிறவும் நிறையப் பெற்றவன், **நூல் உரை ஆசிரியன்** –நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான், **எ – று.**

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **குலன் அருள் தெய்வங்கொள்கை மேன்மை** – குலமேன்மையும் கருணை மேன்மையும் கடவுள் வழிபாட்டு மேன்மையும், **கலைபயில் தெளிவு** – பலநூல்களிலே பழகிய தேற்றமும், **கட்டுரை வன்மை** – நூற்பொருளை மாணாக்கர் எளிதின் உணரும்படி விளங்கத் தொடுத்துச் சொல்லும் வன்மையும், **நிலம் மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்** – நிலத்தையும் மலையையும் துலாக்கோலையும் பூவையுமொத்த குணங்களும், **உலகு இயல் அறிவு** – உலகநடையை அறிவு மறிவும், உயர்குணம் உயர்வாகிய குணமும், **இனையவும்** – இவைபோல்வன பிறவும், **அமைபவன்** – பொருந்தப்பெற்றவன், **நூல் உரை ஆசிரியன்** – நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான், **எ–று.**

> உயர்வான குலமும், உயர்வான கருணையும், உயர்வான தெய்வத்தை வழிபடுதலுமென்பது கருத்து. இதனுள் மேன்மை என்பது குலன் அருள் தெய்வங்கொள்கை என்ப வற்றிற்கு விசேடணமாக்கப்பட்டது. பின்னர்க் கலைபயிறெளிவு கட்டுரைவன்மை....மலர்நிகர் மாட்சி யென வரைந்தோதி யதனால், முன்னர்க் குலனும் அருளும் தெய்வங்கொள்கையு மேன்மையென வரைந் தோதல் வேண்டிற்று. இவ்வாறன்றிக் குலனு மருளுந் தெய்வங் கொள்கையு மேன்மையும் அமைபவ னெனின் உயர்குண மென்று பின்னும் வருதலால் அம்மேன்மை தான் வேறெது பற்றியது என்று மயங்க வைத்த லென்னுங் குற்றமாம். அன்றியும், உயர்குணம் இனையவும் அமைபவன் என்றதில் மேன்மை அடங்குதலால், கூறியது கூறுலென்னுங் குற்றமுமாம்.
>
> இனி,
>
> **“வலம்புரிமுத்திற் குலம்புரி பிறப்பும்,**
> **வான்யாறன்ன தூய்மையும் வான்யாறு.....**

**—பன்னுருஞ் சிறப்பி னல்லாசிரியர்"**

என இக் குற்றந் தீர்தற் பொருட்டு (ஆத்திரையன் பேராசிரியன்) வரைந்தோதியது காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: குலன்** – உயர்குடிப்பிறப்பும், **அருள்** – ஜீவகாருண்யமும், **தெய்வம் கொள்கை** – கடவுள் வழிபாடும், **மேன்மை** – பெருந்தகைமையும், **கலைபயில் தெளிவு** – (பல) நூல்களிற் பழகிய தேர்ச்சியும், **கட்டு உரை வன்மை** –(நூற்பொருள்களை மாணாக்கர் எளிதில் உணரும்படி) தொடுத்துச் சொல்லுகின்ற சொல்வன்மை (போதநாசக்தி) யும், **நிலம் மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்** – பூமியையும் மலையையும் தராசுகோலையும் பூவையும் ஒக்கின்ற குணங்களும், **உலகு இயல் அறிவொடு** – உலகநடையை யறிகிற அறிவும், **உயர் குணம் இனையவும்** – இவை போல்வன பிற உயர்ந்த குணங்களும், **அமைபவனே** – பொருந்தியிருக்கப் பெற்றவனே. **நூல் உரை ஆசிரியன்** –நூலைக் கற்பிக்கும் ஆசிரியனாவன்; **எ – று.**

நிலம் மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியை, அடுத்த நான்கு சூத்திரங்களால் முறையே கூறுவர். ஈற்றிலுள்ள பிரிநிலை யேகாரம், பிரித்துக் கூட்டப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள். குலன் அருள் தெய்வங் கொள்கை மேன்மை** – மேன்மையாகிய குடிப் பிறப்பும் மேன்மையாகிய சீவ காருண்ணியமும் மேன்மையாகிய கடவுள் வழிபாடும், **கலை பயில் தெளிவு** – பல நூல்களிலே பழகிய தேற்றமும், **கட்டுரை வன்மை** – நூற்பொருளை மாணாக்கர்களிதின் உணரும்படி தொடுத்துச் சொல்லும் வன்மையும், **நிலம்மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும்** – நிலத்தையும் மலையையும் துலாக்கோலையும் பூவையு மொத்த குணங்களும், **உலகு இயல் அறிவு** – உலக நடையை அறியுமறிவும், **உயர் குணம் இனையவும் அமைபவன்** – உயர்வாகிய குணங்கள் இவைபோல்வன பிறவும் நிறையப் பெற்றவன், நூல் உரை ஆசிரியன் – நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான். **எ–று.**

'மேன்மை' என்றதைக் குலனருள் தெய்வங்கொள்கை என்பவற்றுக்கு அடையாக்குக. பின்னர்க் கலைபயில் தெளிவு, கட்டுரை வன்மை, மலர் நிகர் மாட்சி, என வரைந்தோதலால் முன்னர்க் குலன் முதன்மூன்றும் மேன்மை என வரைந்தோதவேண்டிற்று. அன்றிவும்

'உயர்குணமினையவும்' என்பதில் மேன்மை என்பது அடங்கலால் குலனாதியவற்றால் எய்தியமேன்மை என்றலும் கொள்கையும் மேன்மையும் என்றலும் வேண்டா.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** நல்ல சாதியும், கருணையும், கடவுள் வழிபாடும், மேன்பாடும், நூல்களிலே பழகிய தெளிவும், தொகுத்துச் சொல்லுகின்ற உரை வலிமையும், நிலத்தையும், மலையையும், துலாக்கோலையும், மலரையும் நிகர்க்கின்ற குணங்களும், உலக நடையை (அறியும்) அறிவும், இவைபோல்வன பிறவுமாகிய உயர்ந்த குணங்கள் நிறைந்திருப்பவன் நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான். **எ—று.**

ஈற்றிலுள்ள பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்து அமைபவன் என்பதனோடு கூட்டிப் பொருள் கூறுதலுமாம்.

## கா.நமச்சிவாய முதலியார்

**குலன்** – நல்ல குலமும், **அருள்** – கருணையும், **தெய்வம் கொள்கை** – கடவுள் வழிபாடும், **மேன்மை** – மேம்பாடும், **கலைபயில் தெளிவு** – நூல்களிலே பழகிய தெளிவும், **கட்டுரை வன்மை** – உறுதியாகச் சொல்லுகின்ற உரை வலிமையும், **நிலம் மலை நிறைகோல் மலர்** – நிலத்தையும் மலையையும் துலாக்கோலையும் மலரையும், **நிகர்** – ஒத்த, **மாட்சியும்** – குணங்களும், **உலகு இயல்** – உலகநடையை, **அறிவோடு** – (உணரும்) அறிவுடன், **உயர் குணம்** – உயர்வாகிய குணங்கள், **இனையவும்** – இவை போல்வன பிறவும், **அமைபவன்** – நிறைந்திருப்பவன், **நூல் உரை ஆசிரியன்** – நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான்.

## மோசசு பொன்னையா

நற்குடிப்பிறப்பும், அருளுடைமையும், தெய்வ வழிபாடும், மேம்பட்ட கொள்கை யுடைமையும், கலைபயின்ற தெளிவும், சொல்வன்மையும், நிலம் மலை துலாக்கோல் பூ இவற்றை ஒத்த குணங்களும், உலக நடை அறிவும், இவை போன்ற பிற உயர் பண்புகளும் குணங்களும் பெற்று விளங்குபவன் நூல் கற்பிக்கும் ஆசிரியனாவான், **எ—று.**

26. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

தெரி வரும் பெருமையும் திண்மையும் பொறையும்
பருவம் முயற்சி அளவின் பயத்தலும்
மருவிய நல் நிலம் மாண்பு ஆகுமே

ṭeri varum perumaiyum ṭiṇmaiyum poṟaiyum
paruvam muyaṟsi aḷaviṉ payaṭṭalum
maruviya nal nilam māṇpu ākumē

என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**How a teacher must resemble the earth, greatness, power, patience, productiveness.**

A teacher is compared to the earth, because of the imperceptible magnitude, unflinching firmness, interminable patience, and multifarious productions of the earth.

ஒப்புமைப் பகுதி

மெய்தவிருங் கழற்குடம்போல் முறையன்றிப்
பிறழ்தல்
மிகும் முடத் தெங்காய் முயன்றோர்க்கு அன்றி
அல்லோர்க் கீதல்
செய்பருத்திக் குண்டிகைபோற் கோளல்கொடை
முட்டுறுதல்
செறியுமடற் பனைஎனத் தானேகொடுத்தல்
அன்றி
எய்து அடுத்தோர்க்கு ஈயாமை உடைத்தாகி
எவைக்கும்
இச்சித்தல் அழுக்காறு மனவஞ்சம் கொடுமை
ஐயுறல் வீண் படிப்போதன்ற குருவுக்குள
தாமக்குணங்கள்
இன்மையுமே உள்ளவன் நற்குருவே

(சுவாமி.:5)

## சங்கர நமச்சிவாயர்

**எ – னின்**, மேற்கூறிய உவமையை விரித்து **உணர் – ற்று.**

**இ – ள்.:** நிலத்தினது மாட்சிமை இது ஆதலின், இஃது உவமையாயிற்று, **எ – று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** நிலத்தினது தன்மை இவையெனக் கூறுகின்றது.

**இ–ள்.: தெரிவரும் பெருமையும்** – அகலமும் ஆழமும் இவ்வளவு என்று அளத்தற்கு அரிய பெருமையும், **திண்மையும்** – கடல் மலை முதலாக யானை எறும்பு ஈறாக உள்ளவற்றைத் தாங்கும் திண்மையும், **பொறையும்–** பொச்சாந்தாரைத் தாங்கும் பொறையுடைமையும், **பருவ முயற்சி அளவிற் பயத்தலும்** – பருவ காலத்து முயற்சி செய்து தொழிற்பாங்கு அமைந்த பின்பு அளவில்லாத விளைவு பலன்களைக் கொடுத்தலும், **மருவிய நன்னில மாண்பாகும்மே** – பொருந்திய மாட்சிமை யுள்ள நல்ல நிலத்தினது தன்மை இதுவாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன்சொன்ன உபமானத்தின் குணத்தை விரித்துச் சொல்லுகின்றது.

**இ–ள்.: தெரிவரும் பெருமையும்** – பிறராலறியப்படாத உருவத்தின் பெருமையும், **திண்மையும்** – பெரியபாரஞ் செய்து தன்மேலே நெருங்கினவை களாற் கலங்காத வலிமையும், **பொறையும்** – தன்னை யடுத்த மனிதர் தோண்டுதலாதி யாகிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கின்ற பொறுமையும், **பருவ முயற்சியளவிற் பயத்தலும்** – பருவத்திலே உழவர் செய்கிற முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும், **நன்னிலம்** – நல்ல நிலத்தி னிடத்து, **மருவிய** – பொருந்திய, **மாண்பாகும்** – குணங்களாகும், **எ – று.**

> பிறராலறியப்படாத கல்வி யறிவின் பெருமையும், பெரியவாதஞ் செய்து தன்மேலே நெருங்கினவராற் கலங்காத வலிமையையுந், தன்னை யடுத்த மாணாக்கர் இகழ்தலாதி யாகிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கின்ற பொறுமையும், பருவத்திலே மாணாக்கர் செய்கிற முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும் ஆசிரியனிடத்துப் பொருந்திய குணங்களா தலால் நிலம் அவனுக்கு உபமானமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மேற்சொல்லிய உவமையை விரித்துணர்த்து கின்றது.

**இ–ள்.: தெரிவரும் பெருமையும்** – (நின்றவிடத்து நின்று) காணுதற் கரிய வுருவப் பரப்பின் பெருமையும், **தெரிவருந் திண்மையும்** – இவ்வளவென்று காணக்கூடாத உள்வலியும், **தெரிவரும் பொறையும்** – அவ்வாறு காணக்கூடாத கனமும், **பருவ முயற்சி யளவிற் பயத்தலும்** – காலத்தொடு பொருந்தச் செய்யு முயற்சி யளவிற்குத் தக்கபடி பயனைத் தருதலும், **மருவிய நன்னில மாண்பாகும்** – நல்ல நிலந் தழுவிய மாட்சிமையாம், எ – று.

> மாட்சிமை – நற்குணம், இது உவமை யாதலால் தெரிவருங் கல்வியின் பெருமையும், தெரிவரிய கல்வியினுள் வலியும், தெரிவரிய கல்வியின் கனமும், மாணாக்கர் செய்கின்ற கல்வி முயற்சிக்குத் தக்கபடி, அவர்க்கு நூற் பயனளித்தலும் ஆசிரியனது மாட்சியெனப் பொருளுரைத்துக் கொள்க. நன்னில மாண்பு பயத்தலுமாமென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– தெரிவு அரு** – (எவரும்) பார்ப்பதற்கு அரிய, **பெருமையும்** – (உருவத்தின்) பெருமையும், **திண்மையும்** – வலிமையும், **பொறையும்** – பொறுமையும், **பருவம் முயற்சி அளவில் பயத்தலும்** – தக்ககாலத்தில் (உழவர் செய்கின்ற) முயற்சியளவுக்குத் தக்கபடி பயன் கொடுத்தலும், நல் **நிலம்** – நல்ல நிலத்தினிடத்து, **மருவிய** – பொருந்திய, **மாண்பு ஆகும்** – நற்குணங்களாகும்.

**குறிப்பு :–**

> நிலத்துக்குக்கூறிய இக்குணங்களால், ஆசிரியரிடத்துப் பிறர் அறியவொண்ணாத கல்விப்பெருக்கமும், வாதத்தில் கலங்காத வல்லமையும், பிறர் செய்யும் இகழ்ச்சி முதலிய குற்றங்களைப் பொறுக்கும் பொறுமையும், மாணாக்கரது முயற்சிக்கும் திறமைக்கும் தக்கபடி பயன் தருதலும் உளவாதல் உணர்க.
>
> **'தெரிவரு'** என்பதைத் திண்மை பொறைகளுக்கும் அடைமொழியாக்குக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– தெரிவு அரும் பெருமையும்** – பிறரால் அறியப்படாத

உருவத்தின் பெருமையும், **திண்மையும்** – பெரிய பாரஞ் செய்து தன்மேலே நெருங்கினவைகளாற் கலங்காத வலிமையும், **பொறையும்** – தன்னை யடுத்த மனிதர் தோண்டுதன் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், **பருவ முயற்சி அளவில் பயத்தலும்** – பருவத்திலே உழவர் செய்யு முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும், **நல் நிலம் மருவிய மாண்பு ஆகும்** – நல்ல நிலத்தினிடத்துப் பொருந்திய குணங்களாகும், **எ – று.**

> பிறராலறியப்படாத கல்வி யறிவின் பெருமையும், பெரிய வாதஞ் செய்து தன்மேலே நெருங்கினவராற் கலங்காத வலிமையும், தன்னை யடுத்த மாணாக்கர் இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், பருவத்திலே மாணாக்கர் செய்யு முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும் ஆசிரியனிடத்துப் பொருந்திய குணங்களாதலால், நிலம் அவனுக்கு உவமானமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– தெரிவு அரும் பெருமையும்** – (ஓரிடத்து நின்று முழுவதும் அறியப்படாத உருவப்பரப்பின்) பெருமையும், **திண்மையும்** – பெரிய பாரஞ்செய்து தன்மேலே நெருங்கினவை களாற் கலங்காத வலிமையும், **பொறையும்** – தன்னையடுத்த மனிதர் தோண்டுதன் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், **பருவ முயற்சி அளவில் பயத்தலும்,** – பருவத்திலே உழவர் செய்யு முயற்சியளவிற்குத் தக அவர்க்குப் பயனைத்தருதலும், **நல் நிலம் மருவிய மாண்பு ஆகும்** – நல்ல நிலத்தினிடத்துப் பொருந்திய குணங்களாகும். **எ–று.**

> பிறரால் வகுத்தறியப்படாத கல்வியறிவின் பெருமையும், பெரியவாதஞ் செய்து தன்மேலே நெருங்கினவாரற் கலங்காத வலிமையும், தன்னையடுத்தமாணாக்கர் இகழ்தன் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், பருவத்திலே மாணாக்கர் செய்யு முயற்சியளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும் ஆசிரியனிடத்துப் பொருந்திய குணங்களாதலால், நிலம் அவனுக்கு உவமானமாயிற்று. பொறை என்பதற்குக் கனமென்றும் பொருள் கூறுவர்.

## வை.மு. சடகோபாராமானுசாசாரியார்
## சே.கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– தெரிவு அரு** – (ஓரிடத்தில் நின்று முழுவதும்) காணுதற்கு அரிய, **பெருமையும்** – (உருவப் பரப்பின்) பெருமையும், **திண்மையும்**– (பெரிய பாரஞ் செய்து தன்மேல் நெருங்கியவைகளாற் கலங்காத) வலிமையும், **பொறையும்** – (தன்னை யடுத்த மனிதர் தோண்டுதல் முதலிய குற்றங்களைச் செய்தாலும் பொறுக்கின்ற) பொறுமையும், **பருவம் முயற்சி அளவின் பயத்தலும்** – தக்க பருவத்திலே (உழவர் செய்கின்ற) முயற்சியளவுக்குத் தகுதியாக (அவர்க்கு)ப் பயன் கொடுத்தலும், **நல் நிலம் மருவிய மாண்பு ஆகும்** – நல்ல நிலத்தினிடத்துப் பொருந்திய நற்குணங்களாம்; **எ – று.**

> பிறரால் வகுத்தறியப்படாத கல்வி யறிவின் பெருமையும், பெரிய வாதஞ் செய்து தன்மேல் நெருங்கினவராற் கலங்காத வல்லமையும், தன்னை யடுத்தவர் இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், மாணாக்கர் செய்யும் முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும் ஆசிரியனிடத்துப் பொருந்துங் குணங்களாதலால், நிலம் அவனுக்கு உவமையாமென அறிக.
>
> **'தெரிவரு'** என்பதைத் திண்மை பொறைகளோடும் கூட்டுக.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– தெரிவு அரும் பெருமையும்** – பிறரால் அறியப்படாத உருவத்தின் பெருமையும், **திண்மையும்** – பெரிய பாரஞ் செய்து தன்மேலே நெருங்கினவைகளாற் கலங்காத வலிமையும், **பொறையும்** – தன்னையடுத்த மனிதர் தோண்டுதன் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், **பருவ முயற்சி அளவில் பயத்தலும்** – பருவத்திலே உழவர் செய்யு முயற்சியளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும், **நல் நிலம் மருவிய மாண்பு ஆகும்** – நல்ல நிலத்தினிடத்துப் பொருந்திய குணங்களாகும். **எ–று.**

> பிறராலறியப்படாத கல்வியறிவின் பெருமையும், பெரிய வாதஞ் செய்து தன்மேலே நெருங்கினவராற் கலங்காத வலிமையும், தன்னையடுத்த மாணாக்கர் இகழ்தல் முதலிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கும் பொறுமையும், பருவத்திலே மாணாக்கர் செய்யும் முயற்சியளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும் ஆசிரியனிடத்துப் பொருந்திய குணங்களாதலால், நிலம் அவனுக்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**தெரிவு அரு பெருமையும்** – பிறரால் அறியப்படாத (உருவத்தின்) பெருமையும், **திண்மையும்** – (மேலே நெருங்கினவைகளாற் கலங்காத) வன்மையும், **பொறையும்** – (தோண்டுதல் ஆதியாகிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கின்ற) பொறுமையும், **பருவமுயற்சி அளவில் பயத்தலும்** – பருவத்திலே (உழவர் செய்கிற) முயற்சி யளவிற்குத் தகப் பயனை அவருக்குத் தருதலும், **நல் நிலம்** – நல்ல நிலத்தினிடத்து, **மருவிய** – பொருந்திய, **மாண்பு ஆகும்** – குணங்களாகும்.

> பிறரா லறியப்படாத கல்வி யறிவின் பெருமையும், பெரிய வாதஞ்செய்து தன்மேலே நெருங்கினவரால் கலங்காத வலிமையும், தன்னை யடுத்த மாணாக்கர் இகழ்தலாதியாகிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கின்ற பொறுமையும், பருவத்திலே மாணாக்கர் செய்கிற முயற்சியளவிற்குத்தக அவர்கட்குப் பயனைத் தருதலும், ஆசிரியனிடத்துப் பொருந்திய குணங்களாதலால், நிலம் அவனுக்கு உவமானமாயிற்று.

## மோசசு பொன்னையா

காணுதற்கு அரிய உருவப் பெருமையும், நெருக்கத்தால் கலங்காத வலிமையும், குற்றம் பொறுக்கும் பொறுமையும், காலநிலைக்கும் உழவன் முயற்சிக்கும் ஏற்ற அளவில் பயனைத் தருதலும் நல்ல நிலத்தினிடத்தில் பொருந்திய குணநலங் களாகும், எ–று.

**(26)**

**27. அளக்க லாகா வளவும் பொருளும்**
**துளக்க லாகா நிலையுந் தோற்றமும்**
**வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே**

**அளக்கல் ஆகா அளவும் பொருளும்**
**துளக்கல் ஆகா நிலையும் தோற்றமும்**
**வறப்பினும் வளம் தரும் வண்மையும் மலைக்கே**

alakkal ākā alavum porulum
ṭulakkal ākā nilaiyum ṭōṛṛamum
vaṛappiṉum valam ṭarum vaṇmaiyum malaikkē

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**How the teacher must resemble a mountain, greatness, resource, firmness, reputation, disinterestedness.**

A teachers is compared to a mountain, because of the unsearchableness or undefinableness of its solid contents; of its immeasurable riches; of its immovcable stability; of its lofty prominence; and because of its naturally affording refreshing streams even in the driest seasons.

## சங்கர நமச்சிவாயர்

**எ – னின்,** இதுவும் அது.

**இ–ள்:** மலையினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமையாயிற்று, **எ – று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** மலையினது தன்மை இதுவெனக் கூறுகின்றது.

**இ–ள்.: அளக்கலாகா அளவும்** – இத்துணைத்தென்று அளத்தற்கு அரியவாய் ஏறற்கரிய உயரமும், **பொருளும்** – இவ்வளவென்று அளத்தற்கரிய பொருள்களும், **துளக்கலாகா நிலையும்** – யாவராலும் அசைக்கக் கூடாத நிலையும், **தோற்றமும்** – நாடெல்லாம் காணும் படிக்கு உயர்ந்த தோற்றமும், **வறப்பினும்** – மழையின்றி உலகம் வற்கடமான காலத்தும், **வளந்தரும் வண்மையும்** – தனது வளம் குறையாமல் தரும் மாட்சிமையும், **மலைக்கே** – இத்திறத் தன்மையுடையது மலையாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: அளக்கலாகா வளவும்** – அளவு செய்யப்படாத தன் வடிவத்தினளவும், (அளக்கலாகாகப்) **பொருளும்** – அளவு செய்யப்படாத பலவகைப் பொருளும், **துளக்கலாகா நிலையும்** – எப்படிப்பட்ட

---

குறிப்பு.:–

**கொ.இராமலிங்கத் தம்பிரான் நன்னூல் முழுமைக்கும் உரை செய்யவில்லை.தெரிவு செய்த நூற்பாக்களுக்கு மட்டுமே உரை வரைந்து நன்னூல் சுருக்கம் எனப் பெயரிட்டு வெளியிட்டார். ஆதலின் இவர் உரை எல்லா நூற்பாக்களுக்கும் அமையாது.**

வலிமையுடையவராலும் அசைக்கப்படாத உருவத்தினிலையும், **தோற்றமும்** – நெடுந் தூரத்திலுள்ளாராலுங் காணப்படும் உயர்ச்சியும், **வறப்பினும் வளந்தரும்** – வண்மையும் மழைபெய்யாமல் வறந்த காலத்திலுந் தன்னைச் சேர்ந்த உயிர்களுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்கிற கொடையும், **மலைக்கு** – மலைக்குள்ள குணங்களாகும், எ – று.

அளவு செய்யப்படாத தன்கல்வியி னளவும், அளவு செய்யப்படாத பலவகை நூற்பொருளும், எப்படிப்பட்ட புலமையை யுடையோராலும் அசைக்கப்படாத கல்வி யறிவினிலையும் நெடுந்தூரத்தி லுள்ளாராலும் அறியப்படு முயர்ச்சியும், பொருள் வருவழி வறந்த காலத்திலுந் தன்னைச் சேர்ந்த மாணாக்கருக்குக் கல்விப் பொருளைக் கொடுக்கின்ற கொடையும், ஆசிரியனுக்குள்ள குணங் களாதலால் மலை அவனுக்கு உபமானமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: அளக்கலாகா வளவும்** – மதிக்கக் கூடாத நிறையளவைக் கொண்டிருந்தலும், **அளக்கலாகாப் பொருளும்** – எண்ணக் கூடாத பல்வகைப் பொருள்களை யுடைத்தா யிருந்தலும், **துளக்கலாகா நிலையும்** – அசைக்கப்படாத நிலையும், **தோற்றமும்** – நெடுந்தூரந் தோன்றுகின்ற வுயரமும், **வறப்பினும் வளந்தரும் வண்மையும்** – மழை பெய்யாது உலர்ந்துவிடினுந் தன்னிடத்துள்ள உயிர்களுக்கு நீர்வளத்தைத் தருகின்ற வள்ளன்மையும், **மலைக்கு** – மலைக்குப் பெருந்திய மாட்சியாம், எ – று.

இது உவமை யாதலால், மதிக்கக் கூடாத கல்வி யளவும், மதிக்கக் கூடாத பலநூற் பொருளுடைமையும், பிறரால் தள்ளி யுரைக்கக் கூடாத கல்வியினுறுதி நிலையும், நெடுந்தூரத்திலும் விளங்குகின்ற கல்வியி னுயர் புகழும், பொருள் வருவாய் சுருங்கினு மனங்கோணாமலே மாணாக்கர்க்கு நூற்பொருள் அளித்தலும், ஆசிரியனுக்குப் பொருந்திய மாட்சி யெனப் பொருளுரைத்துக் கொள்க. இதனுள் மாட்சி யென்பது குறைந்து நின்றது. வண்மையும் மலைக்கு மாட்சி யெனமுடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி –தி.கோ.ரங்காசாரி

**உரை :– அளக்கல் ஆகா** – அளவுகாணக் கூடாத, **அளவும்** – உருவத்தின் அளவும், (அளக்கல் ஆகா) **பொருளும்** – அளவுசெய்யமுடியாத பல வகைப் பொருள்களும், **துளக்கல் ஆகா நிலையும்** – அசைக்கக் கூடாத

நிலைமையும், **தோற்றமும்** – (நெடுந்தூரத்திலிருப்பவரும் பார்க்கக்கூடிய) உயர்வும், **வறப்பினும்** – (மழையில்லாமல்) வறந்த காலத்தும், **வளம் தரும் வண்மையும்** – (உயிர்கட்கு) நீர்வளத்தைக் கொடுக்கும் கொடையும், **மலைக்கு** – மலைக்கு (மாண்பாகும்.)

குறிப்பு :–

இவ்வுவமத்தால், மதிக்கக்கூடாத கல்வியின் அளவும், பலநூற்பொருள்களும், பிறர்க்குக் கலங்காத கல்விநிலையும், நெடுந்தூரத்துள்ளாராலும் அறியப்படும் கல்வியினுயர்வும், பொருள்வகை குறைந்த காலத்தும் மனங்கோணாமல் மாணாக்கர்க்கு நூற்பொருள் அளித்தலும் ஆசிரியர்க்குள்ள குணங்களென அறிக. முற்சூத்திரத்து 'மாண்பாகும்' என்றது இதற்கும் கூட்டியுரைக்கப்பட்டது.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: அளக்கல் ஆகா அளவும் –** அளவு செய்யப்படாத தன் வடிவத்தின் அளவும், (அளக்கலாகாப்) **பொருளும் –** அளவு செய்யப்படாத பலவகைப் பொருளும், **துளக்கல் ஆகா நிலையும் –** எப்படிப்பட்ட வலிமை யுடையவராலும் அசைக்கப்படாத உருவத்தினிலையும், **தோற்றமும் –** நெடுந்துரத்திலுள்ளாராலுங் காணப்படும் உயர்ச்சியும், **வறப்பினும் வளம் தரும் வண்மையும் –** மழை பெய்யாமல் வறந்த காலத்திலும் தன்னைச் சேர்ந்த உயிர்களுக்கு நீர் வளத்தைக் கொடுக்குங் கொடையும், **மலைக்கு –** மலைக்குள்ள குணங்களாகும், **எ–று.**

அளவு செய்யப்படாத தன் கல்வியினளவும், அளவு செய்யப்படாத பலவகை நூற்பொருளும், எப்படிப்பட்ட புலமையை யுடையோராலும் அசைக்கப்படாத கல்வியறிவி னிலையும் நெடுந்தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் உணர்ச்சியும், பொருள் வருவழி வறந்த காலத்திலும் தன்னைச் சேர்ந்த மாணாக்கருக்குக் கல்விப் பொருளைக் கொடுக்குங் கொடையும் ஆசிரியனுக்குள்ள குணங்களாதலால் மலை அவனுக்கு உவமானமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– அளக்கல் ஆகா அளவும் –** அளவுசெய்யப்படாத தன்வடிவத்தின் அளவும், (அளக்கலாகப்) **பொருளும் –** அளவு செய்யப்படாத பலவகைப் பொருளும், – **துளக்கல் ஆகா நிலையும் –** எப்படிப்பட்ட வலிமை யுடையவராலும் அசைக்கப்படாத உருவத்தினிலையும், – **தோற்றமும் –**

நெடுந்தூரத்திலுள்ளாரலுங் காணப்படும் உயர்ச்சியும், – **வறப்பினும் வளம் தரும் வன்மையும்** – மழைபெய்யாமல் வறந்தகாலத்திலுந் தன்னைச் சேர்ந்த உயிர்களுக்கு நீர் வளத்தைக் கொடுக்கும் கொடையும், **மலைக்கு** – மலைக்குள்ள குணங்களாகுணம். **எ—று.**

அளவு செய்யப்படாத தன் கல்வியினளவும், அளவு செய்யப்படாத பலவகை நூற்பொருளும், எப்படிப்பட்ட புலமையையுடையோராலும், அசைக்கப்படாத கல்வி யறிவினிலையும், நெடுந்தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் உயர்ச்சியும், பொருள் வருவழி வறந்தகாலத்திலுந் தன்னைச் சேர்ந்த மாணாக்கருக்குக் கல்விப்பொருளைக் கொடுக்கும் கொடையும் ஆசிரியனுக்குள்ள குணங்களாதலால், மலை அவனுக்கு உவமானமாயிற்று.

அளத்தல் ஆகா அளவும் என்பதற்கு மதிக்கக்கூடாத நிறையளவைக் கொண்டிருத்தலும் என்றும் பொருளுரைப்பர்.

மலைச்சாரலிலுள்ள விருக்ஷங்களும் செடிகளும் வாடிக் கெட்டுப் போகாமல் மழையில்லாதகாலத்தும் கனிமுதலான பயன்களைக் கொடுக்கின்றமை நோக்கி வறப்பினும் வளந்தரும் வன்மையென்றா ரெனினுமாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:– அளக்கல் ஆகா** – அளவு செய்தற்கு அரிய, **அளவும்** – தன் வடிவத்தின் அளவும், **பொருளும்** – பலவகைப் பொருள்களை யுடைமையும், **துளக்கல் ஆகா நிலையும்** – (எப்படிப்பட்ட வலிமை யுடையவர்களாலும்) அசைக்கப்படாத உருவத்தின் நிலைமையும், **தோற்றமும்** – (நெடுந்தூரத்திலுள்ளாராலுங்) காணப்படுகின்ற உயர்ச்சியும், **வறப்பினும் வளம் தரும் வண்மையும்** – (மழை பெய்யாமல்) வறந்து போனாலும் (தன்னைச் சேர்ந்த உயிர்கட்கு) நீர்வளத்தைக் கொடுக்கின்ற கொடையும், **மலைக்கு** – மலைக்கு (உள்ள நற்குணங்களாம்); **எ—று.**

அளவு காணக்கூடாத கல்வியினளவும், பலவகை நூற் பொருள்களும், எப்படிப்பட்ட புலமை யுடையோராலும் அசைக்கப்படாத கல்வி யறிவின் நிலையும், நெடுந் தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் உயர்ச்சியும், பொருள் வருவழி வறந்தாலும் தன்னைச் சேர்ந்த மாணாக்கர்க்குக் கல்விப் பொருளைக் கொடுக்குங் கொடையும் ஆசிரியனுக்கு

உள்ள குணங்களா மாதலால், மலை அவனுக்கு உவமையா மென அறிக. '**அளக்கலாகா**' என்பதைப் பொருளோடும் கூட்டுக. மலைக்கு மாண்பாகும் என முற் சூத்திரத்தி னின்றும் வினை வருவித்து முடிக்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– அளக்கல் ஆகா அளவம்** – அளவு செய்யப்படாத தன் வடிவத்தின் அளவும், (அளக்கலாகாப்) **பொருளும்** – (அளவு செய்யப்படாத பலவகைப்) பொருளும், **துளக்கல் ஆகா நிலையும்** – எப்படிப்பட்ட வலிமையுடையவராலும் அசைக்கப்படாத உருவத்தினிலையும், **தோற்றமும்** – நெடுந்தூரத்தி லுள்ளாராலுங் காணப்படும் உயர்ச்சியும், **வறப்பினும் வளம் தரும் வண்மையும்** – வளம் தரும் வண்மையும் – மழை பெய்யாமல் வறந்த காலத்திலுந் தன்னைச் சேர்ந்த உயிர்களுக்கு நீர்வளத்தைக் கொடுக்குங் கொடையும் **மலைக்கு** – மலைக்குள்ள குணங்களாகும். **எ–று.**

அளவு செய்யப்படாத தன் கல்வியினளவும், அளவு செய்யப்படாத பல வகை நூற்பொருளும், எப்படிப்பட்ட புலமையை யுடையோராலும் அசைக்கப்படாத கல்வி யறிவினிலையும்; நெடுந்தூரத்தி லுள்ளாராலும் அறியப்படும் உயர்ச்சியும், பொருள் வருவழி வறந்த காலத்திலுந் தன்னைச் சேர்ந்த மாணாக்கருக்குக் கல்விப்பொருளைக் கொடுக்குங் கொடையும் ஆசிரியனுக்குள்ள குணங்க ளாதலால், மலை அவனுக்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**அளக்கல் ஆகா அளவும்** – அளவு செய்யமுடியாத (தன் வடிவத்தின்) அளவும், (அளக்கல் ஆகாப்) **பொருளும்** – அளவு செய்ய முடியாத பலவகைப் பொருளும், **துளக்கல் ஆகா நிலையும்** – (எப்படிப்பட்ட வலிமை யுடையவராலும்) அசைக்கப்படாத உருவத்தினிலையும், **தோற்றமும்** – (நெடுந் தூரத்திலுள்ளாராலும்) காணப்படும் உயர்ச்சியும், **வறப்பினும் வளம் தரும் வண்மையும்** – (மழை பெய்யாமல்) வறந்த காலத்திலும் தன்னைச் சேர்ந்த உயிர்களுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்கிற கொடையும் ஆகிய குணங்கள், **மலைக்கு** – மலைக்குள்ளனவாம்.

அளவு செய்யமுடியாத தன் கல்வியினளவும், அளவு செய்ய முடியாத பலவகை நூற்பொருளும், எப்படிப்பட்ட புலமையையுடையோராலும் அசைக்கப்படாத கல்வியறிவின் நிலையும், நெடுந் தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் புகழுயர்ச்சியும், பொருள் வரு வழி வறந்த காலத்திலுந் தன்னைச் சேர்ந்த மாணாக்கருக்குக் கல்விப் பொருளைக்

கொடுக்கின்ற கொடையும், ஆசிரியனுக்குள்ள குணங்களாதலால் மலை அவனுக்கு உவமானமாயிற்று.

### மோசகு பொன்னையா

அளக்க முடியாத வடிவ அளவும், மதித்துரைக்க முடியாத பொருட் பெருக்கமும், அசைக்க முடியாத உறுதி நிலையும், நெடுந் தொலைவிலுள்ளாரும் காணும் உயர்ந்த தோற்றமும், வறட்சி யுற்ற காலத்திலும் வளந்தரும் கொடைப் பண்பும் மலையினது குணங்களாம், எ—று.

(27)

## 28. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும் மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

**ஐயம் தீரப் பொருளை உணர்த்தலும்**
**மெய்ந் நடுநிலையும் மிகு நிறை கோற்கே.**

aiyam ṭīrap poruḻai uṇarṭṭalum
meyn natunilaiyum miku niṟai kōṟkē.

### என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**How a teacher must resemble a balance, resolves doubts impartiality**

A teacher is compared to a balance, because the exact perpendicular position of the index or indicators sets beyond doubt the impartial knowledge, removes doubts and rectifies the mind. adjustment of the scales, so a tacher by imparting.

### சங்கர நமச்சிவாயர்

எ – னின், இதுவும் அது.

இ—ள்.: நிறைகோலினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமையாயிற்று, எ – று.

### கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், துலாக்கோலினது இயல்பு இவையெனக் கூறுகின்றது.

இ—ள்.: ஐயந் தீரப் பொருளை உணர்த்தலும் – மிகுதியிது குறையிது

வெனத் தெளிவு காட்டலும், **மெய் நடு நிலையும்** – மிகினும் குறையினும் சமனால் நில்லாமல் ஒத்த பொருட்கண் சமனாய் நிற்றலும், **மிகு நிறைகோற்கே** – இத்திறத் தன்மை மிகுவது துலாக்கோல், எ–று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்** – சந்தேகந் தீர நிறுக்கப்பட்ட பண்டத்தினளவைக் காட்டலும், **மெய்ந் நடுநிலையும்** – உண்மை பெறத்தான் இரண்டு தட்டுகளுக்கும் நடுவே நிற்கையும், **நிறைகோற்கு** – தராசுகோலின்கண், **மிகும்** – குணங்களாக மிகும், **எ–று.**

சந்தேகந் தீர வினாவப்பட்ட சொற்பொருளி னியல்பைக் காட்டலும் புலவரிருவர் மாறுபட்டாராயின் உண்மை பெறத்தான் அவ் விருவருக்கும் நடுவாக நிற்கையும், ஆசிரியன்கட் குணங்களாக மிகும் ஆதலால், நிறைகோல் அவனுக்கு உபமானமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்** – தன்னகப்பட்ட பொருளைப் பிறர்க்கு இவ்வளவினை யுடையது இதுவெனச் சந்தேகந் தீரத் தெரிவித்தலும், **மெய்ந் நடுநிலையும்** – (அவ்வாறு தெரிவிக்கும் போது) மெய்மையோடு கூடி ஒருபாற் கோணாமல் நடுவாக நிற்பதும், **மிகு நிறைகோற்கு** – நிறைகோலுக்கு மிக்க மாட்சியாம், **எ – று.**

இது உவமையாதலால், மாணாக்கர்க்குத் தான்கற்ற கல்விப் பொருளைச் சந்தேக நீங்கும்படி யறிவித்தலும், அவ்வாறு அறிவிக்கும் போது மனக்கோட்ட மின்றி மெய்மையோடு கூடி நடுவுநிலையின் பாற்படுதலும், ஆசிரியனுக்கு மிக்க மாட்சி யெனப் பொருளுரைத்துக் கொள்க.

ஆசிரியனிடத்து நடுநிலையாவது, கொள்வோ னுணர்வு சிறிதாகிற் பெரிதாகவும், பெரிதாகிற் சிறிதாகவும் உணர்த்தப் புகாமையும், ஒருவன் மாட்டு விருப்பாகவும் ஒருவன் மாட்டு வெறுப்பாகவும் உணர்த்தப் புகாமையுமாம். இதனுள்ளுமடுத்த சூத்திரத்துள்ளும் மாட்சி யென்பது குறைந்து நின்றது.

மேலைச் சூத்திரம் போலவே இதனையும் இனி வருஞ் சூத்திரத்தையு முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஐயம் தீர** – சந்தேகம் நீங்கும்படி, **பொருளை உணர்த்தலும்** – பொருளின் அளவைக் காட்டுதலும், **மெய் நடு நிலையும்** – உண்மை தோன்ற (இரண்டு தட்டுக்கும்) நடுவே கோணாமல் நிற்பதும், **நிறை கோற்கு** – தராசுக் கோலுக்கு, **மிகும்** – மிகுந்த மாண்பாகும்.

**குறிப்பு :–**

மாணாக்கர்க்குக் கல்விப்பொருளைச் சந்தேகந்தீர அறிவித்தலும், புலவர் இருவர் வாதத்தில் மாறுபட்ட காலையில் அவ்விருவர்க்கும் பக்ஷபாதமின்றி உண்மை யறிவித்தலும், அல்லது பலமாணாக்கருள் ஒருவனிடத்து விருப்பாயும் மற்றொருவனிடத்து வெறுப்பாயும் நூற்பொரு ளுணர்த்தா மையும் ஆசிரியரிடத்துக் குணங்களாதலால் அவருக்கு 'நிறைகோல்' உவமையாயிற்று

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஐயம் தீரப் பொருளை உணர்த்தலும்** – சந்தேகந் தீர நிறுக்கப்பட்ட பண்டத்தி னளவைக் காட்டலும், **மெய்ந் நடுநிலையும்** – உண்மை பெறத் தான் இரண்டு தட்டுக்களுக்கும் நடுவே நிற்றலும், **நிறைகோற்கு மிகும்** – தராசுகோலினிடத்துக் குணங்களாக மிகும், **எ – று.**

சந்தேகந் தீர வினாவப்பட்ட சொற்பொருளி னியல்பைக் காட்டலும், புலவரிருவர் மாறுபட்டாராயின், உண்மை பெறத் தான் அவ்விருவருக்கும் நடுவாக நிற்றலும் ஆசிரிய னிடத்துக் குணங்களாக மிகுமாதலால், நிறைகோல் அவனுக்கு உவமானமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **ஐயம் தீரப் பொருளை உணர்த்தலும்** – சந்தேகந்தீர நிறுக்கப்பட்ட பண்டத்தினளவைக் காட்டலும், – **மெய் நடு நிலையும்** – இருதட்டிலுஞ் சமபாரம் இடப்பெற்றபோது ஒரு தட்டிலும் பாரமிடப்படாதது போல் உண்மைபெறத் தன் நாச் சாயாது தோரணத்திற்கு நடுநிற்றலும், பாரங்கனத்ததட்டின் பக்கத்திற்கு நாச் சாய்தலும் – நிறை கோற்கு மிகும் – தாரசுகோலினிடத்துக் குணங்களாக மிகும். **எ–று.**

சந்தேகந்தீர வினாவப்பட்ட சொற்பொருளினியல்பைக் காட்டலும், புலவரிருவர் மாறுபட்டாராயின், உண்மை

பெறத்தான் அவ்விருவருக்கும் நடுவாகநின்று இருவருடைய தாற்பரியங்களையுந் தேர்ந்து சிறந்த பொருட் பக்கத்தில் மனஞ்சார்ந்தும், இருபொருளும் தக்கனவாயின் இருவருக்கும் ஒத்த தன்மை யுடையவனாகி நிற்றல். இவை ஆசிரியனது குணங்களாதலின் நிறைகோல் அவனுக்கு உவமை யாயிற்று. "தூலைந்நாவன்னசம நிலையுளப்பட" என்றார் பிறரும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: பொருளை ஐயம் தீர உணர்த்தலும்** – (நிறுக்கப்பட்ட) பொருளினளவைச் சந்தேகந் தீரக் காட்டுதலும், **மெய் நடு நிலையும்** – உண்மை பெறத் தான் (இரண்டு தட்டுக்கும்) நடுவே (ஒருபாற் கோணாமல்) நிற்றலும், **நிறைகோற்கு மிகும்** – தராசுகோலுக்கு (நற்குணங்களாக) மிகும்; எ–று.

வினாவப்பட்ட சொற்பொருளி னியல்பைச் சந்தேகந் தீர அறிவித்தலும், புவலர் இருவர் மாறுபட்டாராயின் உண்மைபெறத் தான் அவ் விருவர்க்கும் நடுவாகப் பக்ஷபாத மின்றி நிற்றலும் ஆசிரியனிடத்துக் குணங்களாக மிகுமாதலால், நிறைகோல் அவனக்கு உவமையா மென அறிக. ஆசிரியனுக்கு மெய்ந்நடுநிலை – மாணாக்கர் பலருள் ஒருவனிடத்து விருப்பாகவும் ஒருவனிடத்து வெறுப்பாகவும் உணர்த்தாமையுமாம்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.;– ஐயம் தீரப் பொருளை உயர்த்தலும்** – சந்தேகந்தீர நிறுக்கப்பட்ட பண்டத்தினளவைக் காட்டலும், **மெய்ந்நடுநிலையும்** – உண்மை பெறத் தான் இரண்டு தட்டுக்களுக்கும் நடுவே நிற்றலும், நிறைகோற்கு மிகும் – தராசுகோலினிடத்துக் குணங்களாக மிகும். எ–று.

சந்தேகந்தீர வினாவப்பட்ட சொற்பொருளினியல்பைக் காட்டலும், புலவரிருவர் மாறுபட்டாராயின் உண்மை பெறத் தான் அவ்விருவருக்கும் நடுவாக நிற்றலும் ஆசிரியனிடத்துக் குணங்களாக மிகுமாதலால், நிறைகோல் அவனுக்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

ஐயம் தீரப் பொருளை உணர்த்தலும் – சந்தேகந் தீர (நிறுக்கப்பட்ட) பண்டத்தினளவைக் காட்டலும், **மெய்நடு நிலையும்** – உண்மைபெறத் (தான் இரண்டு தட்டுகளுக்கும்) நடுவே நிற்கையும், நிறை கோற்கு – தராசுக் கோலின்கண், **மிகும்** – (குணங்களாக) மிகும்.

வினாவப்பட்ட சொற்பொருளில் இயல்பைச் சந்தேகம் தீரக் காட்டலும், புலவரிருவர் மாறுபட்டாராயின் உண்மை பெறத் தான் அவ்விருவருக்கும் நடுவாக நிற்கையும் ஆசிரியன் குணங்களாக மிகும் ஆதலால், நிறைகோல் அவனுக்கு உவமானமாயிற்று.

## மோசசு பொன்னையா

பண்டத்தின் அளவைத் திட்டவட்டமாகக் காட்டலும், உண்மையொடு பொருந்தி ஒருபாற் கோடாத நடுநிலையும், நிறைகோலின் குணங்களாம், எ–று.

**(28)**

**29. மங்கல மாகி யின்றி யமையா**
**தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்**
**பொழுதின் முகமலர் வுடையது பூவே.**

**மங்கலம் ஆகி இன்றி அமையாது**
**யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்**
**பொழுதின் முகமலர் உடையது பூவே.**

maṅkalam āki iṉṟi amaiyāṭu
yāvarum makiḻntu mēṟkoḷa melkip
poḻutiṉ mukamalar uṭaiyatu pūvē.

## என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**How a teacher must resemble a flower, auspicious, necessary, honoured but gentle, cheerful.**

A teacher is compared to a flower, because by its mild beauty and sweet fragrance, it is the emblem of joy, the indispensable requisite of every festivity and adornment.

## மயிலை நாதர்

**இ–ள்.:** இவ்வியல்பினையுடையார் [1]கற்கப்படும் ஆசிரியர், **எ – று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ – னின்,** இதுவும் அது.

**இ–ள்.:** மலரினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமையாயிற்று, **எ – று.**

இவ்வுவமைகளினது மாட்சிமைபோலப் பொருளினது மாட்சிமையும் விரித்து உரைத்துக்கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** பூவினது தன்மை இதுவெனக் கூறுகின்றது.

**இ–ள்.:** **மங்கலமாகி** – மங்கலங்கட்கு எல்லாம் தான் மணமுடைத்தாகிய மங்கலமாகி, **இன்றியமையாது** – தன்னை யின்றி யாது காரியமும் அமைவு பெறாமல் செய்வதாய், **யாவரு மகிழ்ந்து** – துன்பம் இன்பம் உள்ளோர் எல்லாரும் கைக்கொள்வதாய், **மேற்கொள மெல்கி** – கண்டோருவந்து மேற்கொள்ள மென்மை ஊறுள்ளவாய், **பொழுதின் முகமலர்வு** – பருவ காலத்தின் மலர்ந்து வண்டிற்குப் பயனாகியும், **உடையது பூவே** – இத்திறத் தன்மையுடையது பூவாம், **எ–று.** இந்நான்கு திறத் தன்மையுடையார் கற்கப்படும் ஆசிரியர், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.:** **மங்கலமாகி** – சுபச் செய்கைக் குரியதாகி, **இன்றியமையாதது** – யாதொரு செயலும் அலங்கரிக்குந் தானில்லாது முடியாதாக; **யாவரு மகிழ்ந்து மேற்கொள** – கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னைச் சூடிக் கொள்ள, **மெல்கி** – மெல்லியகுணமுடையதாகி, **பொழுதின் முகமலர் வுடையது** – மலர்தற்குரிய காலத்திலே முகம் விரிதலை யுடையது, **பூ** – பூவாகும், **எ–று.**

---

பாட வேறுபாடு.:– 1. கற்பிக்கப்படும் ஆசிரியர்,

சுபச் செய்கைக் குரியனாகி யாதொரு செயலுஞ் சிறப்பிக்குந் தானில்லாது முடியாதாகக் கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லிய குணமுடையவனாகிப், பாடஞ் சொல்லுதற்குரிய காலத்திலே முகமலர்தலை யுடையவன் ஆசிரிய னாதலால், பூ அவனுக்கு உவமானமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ—ள்.: மங்கலமாகி** – மங்கல மென்றெடுத்ததாகி, (யாவரும் நற்கருமத்திற் கென்று எடுத்ததாகி), **இன்றியமையாது**—யாதொரு நற்கருமமும் அதுவில்லாமற் கூடாததாகி, **யாவரு மகிழ்ந்து மேற்கொள**— கண்டபொழுதே எல்லாரு மனமகிழ்ந்து தலைமேற் சூடிக்கொள்ள, **மெல்கி** – கனஞ் செய்யாதிருந்து, **பொழுதின் முகமலர் வுடையது பூ** – தப்பாமலே அதன் காலத்தில் முகமலர்ச்சியை யுடையது பூவினது மாட்சியாம், **எ – று.**

இது உவமையாதலால், கல்வியின் நற்கருமத்திற்கு இன்னானென்று யாவராலுமெடுக்கப்பட்டவனாகி, அக்கருமம் அவனின்றி முடியாததாகி, அவனைக் கண்ட மாத்திரமே யாவருந் தலைமேற் கொண்டு வணங்க, அதனாற் செருக்கிக் கனங் காட்டாதவனாகித் தான் கற்ற நூற்பொருளை மாணாக்கர்க்காயினும் பிறர்க்காயினு முணர்த்த வருங்காலத்தில் முகமலர்ச்சியை யுடையவனாதல் ஆசிரியன் மாட்சி யெனப் பொருளுரைத்துக் கொள்க.

மங்கலம் – நன்மை, மங்கலமென் றெடுத்ததற் குதாரணம், 'பூத்தேர்பொன்' எனவும் 'பூமலியசோகின்' எனவும் 'மலர்தலையுலகின்' எனவும் 'கந்தமடிவில் கடிமல'ரெனவுங் காண்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– மங்கலம் ஆகி** – சுபகாரியங்கட்கு உரியதாய், **இன்றி அமையாது** – (எல்லா நற்காரியங்கட்கும் தான்) இல்லாமல் முடியாதாகி, **யாவரும் மகிழ்ந்து மேற்கொள** – எல்லாரும் விரும்பி மேலாகச் சூடிக்கொள்ளும்படி, **மெல்கி** – மென்மையுடையதாகி, **பொழுதில்** – மலர்தற்குரிய காலத்தில், **முகம் மலர்வது** – முகமலர்ச்சியடைவது, **பூ** – மலரின் குணமாகும்.

குறிப்பு :–

இதனால் கல்வியின் நற்காரியத்திற்கு எடுக்கப்பட்டவராகி, தாமின்றி அக்காரியம் முடியாமல், தம்மைக் கண்டவளவில் எல்லாரும் தம்மை மேலாகக் கொண்டு வணங்க, அவ்வாறு வணங்கியதால் செருக் கடையாமல் சுலபராகி, நூற்பொருளைக் கற்பிக்குங் காலத்தில் முகமலர்ச்சியுடையராதல் நல்லாசிரியர் குணமெனஅறிக.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.:– மங்கலம் ஆகி** – சுப கருமத்திற்கு உரியதாகி, **இன்றி அமையாது** – யாதொரு செயலும் அலங்கரிக்குந் தானில்லாது முடியாதாக, **யாவரும் மகிழ்ந்து மேற்கொள** – கண்டோர் யாவரும் களித்து மேலாகத் தன்னைச் சூடிக்கொள்ள, **மெல்கி**–மெல்லிய குணமுடையதாகி, **பொழுதின் முகம் மலர்வு உடையது** – மலர்தற்குரிய காலத்திலே முகம் விரிதலையுடையது, **பூ** – பூவாகும், **எ – று.**

சுபகருமத்துக்கு உரியனாகி யாதொரு செயலுஞ் சிறப்பிக்குந் தானில்லாது முடியாதாகக் கண்டோர் யாவரும் களித்து மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லிய குணமுடையவனாகிப் பாடஞ் சொல்லுதற்குரிய காலத்திலே முகமலர்தலை யுடையவன் ஆசிரிய னாதலால், பூ அவனுக்கு உவமானமாயிற்று

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– மங்கலம் ஆகி** – சுபகருமத்திற்கு உரியதாகி, – **இன்றி அமையாது** – யாதொருசெயலும் அலங்கரிக்குந் தானில்லாது முடியாததாக, – **யாவரும் மகிழ்ந்து மேற்கொள** – கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னைச் சூடிக்கொள்ள, – **மெல்கி** – மெல்லிய குணமுடையதாகி, – **பொழுதின் முகம் மலர்வு உடையது** – மலர்தற்குரிய காலத்திலே முகம் விரிதலையுடையது, **பூ** – பூவாகும்.

சுபகருமத்துக்கு உரியனாகி யாதொரு செயலுஞ் சிறப்பிக்குந் தானில்லாது முடியாதாகக் கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லிய குணமுடையவனாகிப் பாடஞ் சொல்லுதற்குரிய காலத்திலே முகமலர்தலை யுடையவன் ஆசிரியனாதலால், பூ அவனுக்கு உவமானமாயிற்று.

தன்னுள்ளே முன்போடப்பட்ட கழற்காய்களைப் பின்னும், பின்போடப் பட்டவைகளை முன்னுமாக முறை பிறழ விரைவிலே தருகின்ற செய்கையானது கழற்குடத்தின் றன்மையாம். கழற்காய்கள் ஒன்றோடென்று ஒட்டிப் பிடிக்குந் தன்மையுடையவைகளாதலின் அவையிட்ட குடம் முறை பிறழவும் அளவுக்கு மேற்பட்ட விரைவாகவும் போதிப்போருக்கு உவமையான தென்றறிக.

## வை.மு. சடகோபாராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:— மங்கலம் ஆகி** – சுபகாரியங்கட்கு உரியதாய், **இன்றி அமையாது** – (அலங்கரிக்குந் தான்) இல்லாமல் (யாதொரு செய்கையும்) முடியாதாக, **யாவரும் மகிழ்ந்து மேல் கொள** – கண்டோரெல்லாரும் விரும்பி மேலாக(த் தன்னைச் சூடி)க்கொள்ள, **மெல்கி** – மென்மைக் குணமுடையதாய், **பொழுதில் முகம் மலர்வு உடையது** – மலர்தற்கு உரிய காலத்தில் முகமலர்தலை யுடைமை, **பூ** – பூவின் குணமாம்; **எ – று.**

சுபகாரியத்துக்கு உரியனாய்ச் சிறப்பிக்குந் தான் இல்லாமல் யாதொரு செய்கையும், முடியாதாகக் கண்டோரெல்லாரும் விரும்பி மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லிய குணமுடையவனாகிப் பாடஞ் சொல்லுதற் குரிய காலத்தில் முகமலர்ச்சியை யுடையவனாயிருத்தல் ஆசிரியனுக்குக் குணமாதலால், பூ அவனுக்கு உவமையா மென அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:— மங்கலம் ஆகி** – சுபகருமத்திற்கு உரியதாகி, **இன்றி அமையாது** – யாதொரு செயலும் அலங்கரிக்குந் தானில்லாது முடியாதாக, **யாவரும் மகிழ்ந்து மேற்கொள** – கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னைச் சூடிக்கொள்ள, **மெல்கி** – மெல்லிய குணமுடையதாகி, **பொழுதின் முகம் மலர்வு உடையது** – மலர்தற்குரிய காலத்திலே முகம் விரிதலையுடையது, **பூ** – பூவாகும். **எ—று.**

சுபகருமத்துக்கு உரியனாகி யாதொரு செயலுஞ் சிறப்பிக்குந் தானில்லாது முடியாதாகக் கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லிய குணமுடையவனாகிப் பாடஞ் சொல்லுதற்குரிய காலத்திலே முகமலர் தலையுடையவன் ஆசிரியனாதலால், பூ அவனுக்கு உவமாமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**மங்கலம் ஆகி** – நற்செய்கைக் குரியதாகி, **இன்றி அமையாது** – (தான்) இல்லாது முடியாதாக, **யாவரும் மகிழ்ந்து மேற்கொள** – கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னைச் சூடிக்கொள்ள, **மெல்கி** – மெல்லிய குணமுடையதாகி, **பொழுதின் முகமலர்வு உடையது** – மலர்தற்குரிய காலத்திலே முகம் விரிதலையுடையது, **பூ** – பூவாகும்.

> நற்செயல்களுக்குரியனாகிய யாதொரு செயலுஞ் சிறப்பிக்குந் தானில்லாது முடியாதாகக் கண்டோர் யாவரும் மகிழ்ந்து மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லியகுண முடையவானகிப், பாடஞ் சொல்லுதற்குரிய காலத்திலே முகமலர்தலை யுடையவன் ஆசிரியனாதலால், பூ அவனுக்கு உவமானமாயிற்று.

## மோசசு பொன்னையா

மங்கலப் பொருளாகி, அஃது இல்லாது எதுவும் நிறையாத தன்மை பெற்று, கண்டோர் யாவரும் விருப்புடன் அணியப் பெறுவதாகி மெல்லிய இயல்பினதாய், பருவத்தில் தப்பாது முகம் மலர்வது பூவினுடைய குணநலன்களாம், எ–று.

**(29)**

# ஆசிரியரல்லாதவர்

**30. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்**
**அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்**
**கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை**
**முடத்தெங் [1]கொப்பென முரண்கொள் சிந்தையும்**
**உடையோ ரிலரா சிரியரா குதலே.**

**மொழி குணம் இன்மையும் இழி குண இயல்பும்**
**அழுக்காறு அவா வஞ்சம் அச்சம் ஆடலும்**
**கழற்குடம் மடல் பனை பருத்திக் குண்டிகை**

---

பாட வேறுபாடு:–

1.கொப்பன

முடத் தெங்கு ஒப்பு என முரண் கொள் சிந்தையும்
உடையோர் இலர் ஆசிரியர் ஆகுதலே.

moḻi kuṇam iṉmaiyum iḻi kuṇa iyalpum
aḻukkāṟu avā vañsam assam ātalum
kaḻaṟkutam matal paṉai paruṭṭik kuṇtikai
mutaṭ ṭeṅku oppu eṉa muraṇ koḷ
sinṭaiyum
utaiyōr ilar āsiriyar ākuṭalē.

என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**Who are disqualified for the office of teacher**

Persons disqualified to be teachers are; those who are devoid of natural talent for imparting knowledge; who are of a mean disposition; jealous or envious; avaricious; deceitful; intimidating the minds of scholars by magnifying difficulties; and those who on account of their untractableness bear comparison to (a) marbles in a pot (b) to a rough palmyra tree (c) to a cotton holder and (d) to a crooked coconut tree.

ஒப்புமைப் பகுதி

மடி அழுக்காறு வஞ்சகம் வெகுளி
உணராததை உணர்ந்ததின் மேற்கோடல்
தம்மைப் புகழ்வதின் தாம்பிறர் இகழ்தல்
கற்றவர் புனைந்த கவியினுள் சார்ந்த
குற்றமொன் றுளதேல் குணனமைத் தறியான்
செவ்வியின் மலர்ந்த நாறாச் செம்மலர்
வெவ்விட அரவுதன் வாய்க்கொள் விழுமணி
பொதுமகள் பாற்கொளப் பொருந்திய போகம்
சிறியவன் தன்பால் வெ
சறிதரு பொருளெனும்
கல்வியின் ஆரியனாம் கடன் இலனே

(மாற.அலங்.:34)

பல்கால் சொல்லியும் தெற்றெனப் பயன்கொள
நல்கா வாக்கது நாறா மலரே

(மாற.அலங்.:35)

**உகுமெனின் கோடல் அல்லது வந்துகொள்**
**பகுதி இன்றாகும் பாம்பின் வாய் மணியே**

**(மாற.அலங்.:36)**

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** ஆசிரியராகார் இவர் என **உணர் – ற்று.**

**இ–ள்.:** இக் குற்றங்களை யுடையோர் கற்பிக்கும் ஆசிரியர் ஆகார், எ – று.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** கற்கப்படாத ஆசிரியரது இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.: மொழி குணமின்மையும்** – நூற் குணமின்றி சொல்வன்மை இல்லாதனாகவும், **இழி குண இயல்பும்** – இழிவாகிய குணத் தியற்கையானாதலும், **அழுக்காறு** – பிறராக்கம் பொறாமை உடை யோனாகியும், **அவா** – ஐயறிவினாலும் கண்டகண்ட புலன்களின் மேற் செல்கின்ற ஆசையை உடையவனாகியும், **வஞ்சம்** – காமம் தன் கண்ணே தோன்றி நலியா நிற்கவும் அதனதின்மை கூறிப் புறத்தாரை வஞ்சிக்கும் வஞ்சம் உடையானாகியும், **அச்சமாடலும்** – எதிர்வாதிகளிடத்து அச்சம் உடையானாகியும், **கழற்குடம்** – கழற்சிக் குடம் ஒப்பானாகியும், **மடற்பனை** – கருக்குப் பனை ஒப்பானாகியும், **பருத்திக் குண்டிகை** – பருத்திக் குண்டிகை ஒப்பானாகியும், **முடத் தெங்கு ஒப்பென** – முடத்தெங்கு ஒப்பானாகியும், **முரண் கொள் சிந்தையும்** – மாறுகொள்ளுதலிலே வலிமை உடையோனாகியும், **உடையோர்** – இத் தன்மை உடையோர், **இலர் ஆசிரியர் ஆகுதலே** – ஆசிரியர் ஆகுதல் இலராமென்க.

## விசாகப் பெருமாளையளர்

**இது,** ஆசிரியராகாதவ ரிவரென்று சொல்லுகின்றது.

**இ–ள்.: மொழி குண மின்மையும்** – பாடஞ் சொல்லுங் குணமில்லா மையையும், **இழிகுண வியல்பும்**–இழி குணமாகிய சுபாவத்தையும், **அழுக்காறு** – பிறருக்கு வருங் கல்வியைக் குறித்துக் கொள்ளும் பொறாமையையும், **அவா**–பொருளின் மேலதிகமாக வைக்கு மாசையையும், **வஞ்சம்**–மெய்ப்பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் காட்டி வஞ்சித்தலையும், **அச்சமாடலும்**–கேட்போர்க்கு அச்சமுண்டாகப் பேசுதலையும், **கழற் குட மடற்பனை பருத்திக் குண்டிகை முடத் தெங்கு–** கழற்குடமும் மடற்பனையும் பருத்திக்குண்டிகையும் முடத்தெங்கும் ஆகிய

நான்கனையும், **ஒப்பென**–ஒப்பென்று சொல்ல, **முரண் கொள் சிந்தையும்**– மாறுபாடு கொண்ட கருத்தையும், **உடையோர்**– தம்மிடத்திலுடையவர், **ஆசிரியராகுதல்** – கற்பிக்கும் ஆசிரியராகுதல் – **இலர்**– இலராவர், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ஆசிரிய ராகாரிவரென வுணர்த்துகின்றது.

**இ–ள்.: மொழிகுண மின்மையும்** – மேலே சொல்லிய நற்குணங் களில்லாமையும், **இழிகுண வியல்பும்** – தாழ்ந்த குணங்களி னியற்கையும், **அழுக்காறு** – பொறாமையும், **அவா** – ஆசையும், **வஞ்சம்**– வஞ்சனையும், **அச்சம்**–அவைக்குஅஞ்சுதலும், **ஆடலும்** –ஆகிய இவற்றைத் தமக்கு உரிமையாக ஆளுதலையும், **கழற் குட மடற் பனை பருத்திக் குண்டிகை முடத்தெங்கு ஒப்பன முரண் கொள் சிந்தையும்** – இந்த நான்கையு மொப்பனவாகிய மாறுபாட்டு நினைப்பையும், **உடையோ ரிலராசிரிய ராகுதல்** – உடையவராயினோர் ஆசிரியராகார், **எ–று.** உடையோர் ஆசிரியராகுத விலரென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

உரை :– **மொழிகுணம் இன்மையும்** – போதிக்கும் குணமில்லாமையையும், **இழிகுணம் இயல்பும்** – தாழ்ந்த குணமாகிய இயற்கையையும், **அழுக்காறு** – பொறாமையையும், **அவா** – பொருளாசையையும், **வஞ்சம்** – (உண்மைப் பொருளைச் சொல்லாமல்) வஞ்சித்தலையும், **அச்சம்** – சபைக்குப் பயப்படுதலையும், **ஆடலும்** – ஆளுதலையும், **கழற்குடம்** – கழற்காய்போட்ட குடமும், **மடல்பனை** – மடல்கள் விரிந்த பனைமரமும், **பருத்தி குண்டிகை** – பஞ்சு அடைத்த குடுக்கையும், **முடம் தெங்கு** – வளைந்த தென்னை மரமும் (ஆகிய இந்நான்கும்), **ஒப்பு என** – தமக்குச் சமானமென்று சொல்லும்படி, **முரண்கொள் சிந்தையும்** – மாறுபாடு கொண்ட மனதையும், **உடையோர்** – **ஆசிரியர் ஆகுதல் இலர்** – போதகாசிரியராகுதல் இலராவர் (ஆசிரியராகார் என்றபடி.)

**குறிப்பு :–**

> இனி, 'மொழிகுணமின்மை' முன்சொன்ன நற்குணங்க ளில்லாமை எனவும், 'அச்சமாடல்' பிறர் அஞ்சப் பேசுதல் எனவும் கொண்டு உரைப்பர். 'ஒப்பன' என்பது பாடாந்தரம். கழற்குடம் முதலியவற்றின் தன்மைகளை வருஞ் சூத்திரங்களால் கூறுவர்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: மொழி குணம் இன்மையும்** – பாடஞ் சொல்லுங் குணமில்லாமையையும், **இழிகுண இயல்பும்** – இழிகுணமாகிய இயற்கையையும், **அழுக்காறு** – பிறருக்கு வருங் கல்வியைக் குறித்துக் கொள்ளும் பொறாமை யையும், **அவா**–பொருளின் மேல் அதிகமாக வைக்கும் ஆசையையும், **வஞ்சம்** – மெய்ப்பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் காட்டி வஞ்சித்தலையும், **அச்சம் ஆடலும்**– கேட்போருக்கு அச்சம் உண்டாகப் பேசுதலையும், **கழற்குடம் மடற்பனை பருத்திக் குண்டிகை முடத்தெங்கு ஒப்பு என** – கழற்குடமும் மடற்பனையும் பருத்திக் குண்டிகையும் முடத்தெங்கும் ஆகிய நான்கனையும் ஒப்பென்று சொல்ல, **முரண் கொள் சிந்தையும் உடையோர்** – மாறுபாடு கொண்ட கருத்தையுந் தம்மிடத்திலுடையவர், **ஆசிரியர் ஆகுதல் இலர்**– கற்பிக்கும் ஆசிரியராகுதல் இலராவர், எ – று.

## வ. குமாரசாமிப் புலவர்

**மொழிகுணம் இன்மையும்** – கற்பிக்குங் குணமில்லாமையையும், **இழிகுண இயல்பும்** – இழிகுணமாகிய இயற்கையையும், **அழுக்காறு** (பிறருக்கு வருங்கல்வியைக்குறித்துக் கொள்ளும்) பொறாமையையும், **அவா** – பொருளின்மேல் மிகுதியாக வைக்கும் ஆசையையும், **வஞ்சம்** – (மெய்ப் பொருளை மறைத்துப் பொய்ப் பொருளைக் காட்டி) வஞ்சித் தலையும், **அச்சம் ஆடலும்** – (கேட்போருக்கு) அச்சமுண்டாகப் பேசுதலையும், **கழற்குடம் மடற்பனை பருத்திக் குண்டிகை முடத்தெங்கு** – கழற்குடமும் மடற்பனையும் பருத்திக் குண்டிகையும் முடத்தெங்கும் ஆகிய நான்கனையும், **ஒப்பு என** – ஒப்பென்று சொல்ல, **முரண்கொள் சிந்தையும்** – மாறுபாடுகொண்ட கருத்தையும், **உடையோர்** – தம்மிடத்திலுடையவர், **ஆசிரியர் ஆகுதல்** – கற்பிக்கும் ஆசிரியராகுதல், **இலர்** – இலராவர்.

> இனி, '**மொழிகுணமின்மை**' என்பதற்கு, மேலே நல்லாசிரியருக்குக் கூறிய நற்குணங்க ளில்லாமை என்றும், பாடஞ் சொல்லு மியல்பு இல்லாமை என்றும், '**அச்சமாடல்**' என்பதற்குச் சபைக்கு அஞ்சுதலுடைமை என்றும் பொருள் கொள்ளலும் ஒன்று.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: மொழி குணம் இன்மையும்** – பாடஞ் சொல்லுங்

குணமில்லாமையையும், **இழி குணம் இயல்பும்** – தாழ்ந்த குணமாகிய சுபாவத்தையும், **அழுக்காறு** – (மாணாக்கர்க்கு வருங் கல்வியைக் குறித்துக் கொள்ளும்) பொறாமையையும், **அவா** – (செல்வத்தின்மேல் அதிகமாக வைக்கும்) ஆசையையும், **வஞ்சம்** – (மெய்ப்பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் கூறி) வஞ்சித்தலையும், **அச்சம் ஆடலும்** – (கேட்பவர்க்கு) அச்சமுண்டாகப் பேசுதலையும், **கழல் குடம் மடல் பனை பருத்திக் குண்டிகை முடம்தெங்கு ஒப்பு என முரண் கொள் சிந்தையும்** – கழற்காய் பெய்த குடமும் கூரிய கருக்கு மடல்கள் விரியப் பெற்ற பனைமரமும் பஞ்சுஅடைத்த குடுக்கையும் வளைந்த தென்னைமரமும் (ஆகிய நான்கும் தமக்கு) ஒப்பென்று சொல்லும்படி மாறுபாடு கொண்ட மனத்தையும், **உடையோர்** – உடையவர்கள், **ஆசிரியர் ஆகுதல் இலர்** – கற்பிக்கும் ஆசிரியராகுத லிலராவர் (ஆசிரியராகார்), **எ–று.**

> இனி, '**மொழிகுணமின்மை**' என்பதற்கு, கீழ் நல்லாசிரியர்க்குச் சொன்ன நற்குணங்க ளில்லாமை யென்றும், போதிக்குந் திறமில்லாமை யென்றும்; 'அச்சமாடல்' என்பதற்கு, சபைக்கு அஞ்சுதலை யுடைமை யென்றும் பொருள் கொள்ளலாம். கழற்குடம் முதலியவற்றின் தன்மையை, மேல் நான்கு சூத்திரங்களால் முறையே கூறுவர்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– மொழி குணம் இன்மையும்** – பாடஞ் சொல்லுங் குணமில்லமையையும், **இழிகுண இயல்பும்** – இழிகுணமாகிய இயற்கையையும், **அழுக்காறு** – பிறருக்குவருங் கல்வியைக் குறித்துக் கொள்ளும் பொறாமையையும், **அவா** – பொருளின்மேல் அதிகமாக வைக்கும் ஆசையையும், **வஞ்சம்** – மெய்ப்பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் காட்டி வஞ்சித்தலையும், **அச்சம் ஆடலும்** – கேட்போர்க்கு அச்சம் உண்டாகப் பேசுதலையும், கழற்குடம் மடற்பனை பருத்திக் குண்டிகையும் முடத்தெங்கும் ஆகிய நான்கனையும் ஒப்பென்று சொல்ல, **முரண் கொள் சிந்தையும் உடையோர்** – மாறுபாடு கொண்ட கருத்தையுந் தம்மிடத்திலுடையவர், **ஆசிரியர் ஆகுதல் இலர்** – கற்பிக்கும் ஆசிரியராகுதல் இலராவர். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**மொழிகுணம் இன்மையும்** – கற்பிக்குங் குணமில்லாமையையும், **இழிகுண இயல்பும்** – இழிகுணமாகிய இயற்கையையும், **அழுக்காறு** (பிறருக்கு வருங்கல்வியைக்குறித்துக் கொள்ளும்) பொறாமையையும், **அவா**

– பொருளின்மேல் மிகுதியாக வைக்கும் ஆசையையும், **வஞ்சம்** – (மெய்ப் பொருளை மறைத்துப் பொய்ப் பொருளைக் காட்டி) வஞ்சித் தலையும், **அச்சம் ஆடலும்** – (கேட்போருக்கு) அச்சமுண்டாகப் பேசுதலையும், **கழற்குடம் மடற்பனை பருத்திக் குண்டிகை முடத்தெங்கு** – கழற்குடமும் மடற்பனையும் பருத்திக் குண்டிகையும் முடத்தெங்கும் ஆகிய நான்கனையும், **ஒப்பு என** – ஒப்பென்று சொல்ல, **முரண்கொள் சிந்தையும்** – மாறுபாடுகொண்ட கருத்தையும், **உடையோர்** – தம்மிடத்திலுடையவர், **ஆசிரியர் ஆகுதல்** – கற்பிக்கும் ஆசிரியராகுதல், **இலர்** – இலராவர்.

இனி, '**மொழிகுணமின்மை**' என்பதற்கு, மேலே நல்லாசிரியருக்குக் கூறிய நற்குணங்க ளில்லாமை என்றும், பாடஞ் சொல்லு மியல்பு இல்லாமை என்றும், '**அச்சமாடல்**' என்பதற்குச் சபைக்கு அஞ்சுதலுடைமை என்றும் பொருள் கொள்ளலும் ஒன்று.

## மோசகு பொன்னையா

மேலே சொல்லப்பட்ட குணநலன்கள் இல்லாமையும், இழிகுண இயற்கையும், பொறாமை, பேராசை, வஞ்சம், அவையச்சம் ஆகிய குணங்களுக்கு ஆளாதலும், கழற்குடம், மடற்பனை, பருத்திக் குண்டிகை, முடத் தெங்கு ஆகிய நான்கினையும் ஒப்பு எனச் சொல்லுமாறு மாறுபட்ட கருத்துக் கொண்டோர் கற்பிக்கும் ஆசிரியர் ஆகாதாராவர், எ–று.

**(30)**

**31.** **[1]பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றரும்**
**செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.**

**பெய்த முறை அன்றிப் பிறழ உடன் தரும்**
**செய்தி கழற் பெய் குடத்தின் சீரே.**

peyta murai anrip pirala utan tarum
seyti kalar pey kutattin sirē.

---

பாடவேறுபாடு.:–

1. பெய்தல்

## என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The immethodical teacher, a jar of marbles osettled plan**

An immethodical teacher is compared to marbles in a pot because marbles in a pot do not lie in order and regularity, but promiscuously and in confusion.

## சங்கர நமச்சிவாயர்

எ — **னின்,** மேற்கூறிய உவமையை விரித்து**உணர் — ற்று.**

**இ — ள்.:—** கழற்பெய்த குடத்தின் குற்றம் இது ஆதலின் இஃது உவமையாயிற்று, எ — று.

## கூழங்கைத் தம்பிரான்

**கூ—ம்,** கழற்குடத்தின் தன்மை இவையெனக் கூறுகின்றது.

**இ—ள்.: பெய்த முறையன்றிப்** — சிறிது சிறிதாகப் பெய்யத் தானுட் கொண்ட முறையே யன்றி, **பிறழ உடன் தரும் செய்தி** — பின்பு சொரியத் தானுட்கொண்டதெல்லாம் ஒருங்கு சொரிதல், **கழற் பெய் குடத்தின் சீரே** — கழற்சியை உட்கொண்ட குடத்தினது தன்மையாம், எ—று.

இதுபோலக் கொள்வோன் உணர்வு சிறிதாயினும் தான் கற்ற தெல்லாம் ஒருங்குரைத்தல்.

## விசாகப் பெருமாளையர்

இது முன் சொன்ன உவமானத்தின் குற்றத்தை விரித்துச் சொல்லுகின்றது.

**இ—ள்.: பெய்த முறை யன்றி** — தன்னுள்ளே போட்ட முறையினாலல்லாமல், **பிறழ** — முன்போடப்பட்டவையும் பின்போடப் பட்டவையும் அம்முறை பிறழ்ந்து போக, **உடன் றரும்** — விரைவிலே தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக் கொடுக்கின்ற, **செய்தி** — செய்கை யானது, **கழற்பெய் குடத்தின் சீர்** — கழற்காய் போட்ட குடத்தினது குற்றமாம், எ—று.

தமக்குக் கற்பித்த முறையினாலல்லாமல் முன் கற்பிக்கப்பட்டவையும் பின் கற்பிக்கப் பட்டவையும் அம்முறை பிறழ்ந்து போக விரைவிலே தம்முள்ளே கொண்ட நூற் பொருள்களைத் தருகின்ற செய்கை யானது ஆசிரியராகாதவரது குற்றமாதலால் கழற்குடம் அவருக்கு உபமான மாயிற்று.

## முகவை இராமானுச கவிராயார்

**இது,** மேற் சொல்லிய வுவமையை விரித்துணர்த்துகின்றது.

**இ–ள்.: பெய்த முறை யன்றி** – முன்னே போடும்போது இருந்த வரிசைக் கிரமந் தப்பி, **பிறழ** – பிறழும்படியாக, **உடன் தருஞ் செய்தி** – (கொட்டும்போது) விரைவிலே தருஞ் செய்கை, **கழற் பெய்குடத்தின் சீர்** – கழற்காய் நிரப்பிய குடத்தின் குணம், எ – று.

இது உவமையாதலால், தாம் கற்கும்போது கற்ற நூல் வரிசைப்படி தம் மாணாக்கரைக் கற்பிக்கப் புகாமல், பின்முன்னாகவும் முன்பின்னாகவும் விரைந்து கற்பிக்கப் புகுதல் ஆசிரியராகாதவருடைய மாறுபாட்டு நினைப்பெனப் பொருளுரைத்துக் கொள்க. தரும் என்னும் பெயரெச்சஞ் சந்தவின்பம் நோக்கித் 'தரூஉம்' எனக் குறில் நெடிலாயள பெழுந்து நின்றது. செய்தி சீரென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– பெய்த முறை அன்றி** – (முன்பு தன்னுள்ளே) போட்ட வரிசைக் கிரமத்தாலல்லாமல், **பிறழ** – மாறிப்போம்படி, **உடன் தரும்** – (கொட்டும்போது) விரைவிலே (ஒருசேரக்) கொடுக்கின்ற, **செய்தி** – செய்கை, **கழல் பெய் குடத்தின் சீர்** – கழற்காய் நிரப்பிய குடத்தின் குணமாம்.

குறிப்பு :–

இவ்வுவமையால் தான் கற்ற முறைப்படி மாணாக்கர்க்குக் கற்பிக்காமல் முறை பிறழ விரைவிலே நூற்பொருளைக் கொடுப்பவர் ஆசிரியராகார் என்றறிக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: பெய்த முறை அன்றி** – தன்னுள்ளே போட்ட முறை யினா லன்றி, **பிறழ உடன் தரும் செய்தி** – முன் போடப்பட்டவையும் பின் போடப்பட்டவையும் அம்முறை பிறழ்ந்து போக விரைவிலே தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக் கொடுக்குஞ் செய்கையானது, **கழற்பெய் குடத்தின் சீர்** – கழற்காய் போட்ட குடத்தினது குணமாம், எ – று.

தமக்குக் கற்பித்த முறையினா லன்றி முன் கற்பிக்கப் பட்டவையும் பின் கற்பிக்கப்பட்டவையும் அம்முறை பிறழ்ந்து போக விரைவிலே தம்முள்ளே கொண்ட நூற் பொருள் களைத் தருஞ் செய்கையானது ஆசிரியராகாதவரது குற்றமாதலால் கழற்குடம் அவருக்கு உவமான மாயிற்று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:— பெய்த முறை அன்றி** — (முன்பு தன்னுள்ளே) இட்ட முறையின்படி யல்லாமல், **பிறழ** — (முன் இடப்பட்டவையும் பின் இடப்பட்டவையும் அம்முறை) மாறிப்போம்படி, **உடன் தரும்** — (கொட்டும் போது) விரைவிலே (தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக்) கொடுக்கின்ற, **செய்தி** — செய்கை, **கழல் பெய் குடத்தின் சீர்** — கழற்காய் பெய்த குடத்தின் தன்மையாம்; **எ —று.**

தாம் கற்றுக்கொண்ட முறையினா லல்லாமல் முன்பின்னாக அம்முறை மாறுபடப் போதிக்கும் போது தம்முள்ளே கொண்ட நூற் பொருள்களை விரைவிலே தருகின்ற செய்கை ஆசிரியராகாதவரது குற்றமாதலால், கழற்குடம் அவர்க்கு உவமையா மென அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:— பெய்த முறை அன்றி** — தன்னுள்ளே போட்ட முறையினாலன்றி, **பிறழ உடன் தரும் செய்தி** — முன் போடப்பட்டவையும் பின் போடப்பட்டவையும் அம்முறை பிறழ்ந்துபோக விரைவிலே தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக் கொடுக்குஞ் செய்கையானது, **கழற்பெய் குடத்தின் சீர்** — கழற்காய் போட்ட குடத்தினது குணமாம். **எ—று.**

தமக்குக் கற்பித்த முறையினாலன்றி முன் கற்பிக்கப் பட்டவையும் பின் கற்பிக்கப்பட்டவையும் அம்முறை பிறழ்ந்துபோக விரைவிலே தம்முள்ளே கொண்ட நூற்பொருள்களைத் தருஞ் செய்கையானது ஆசிரியராகாதவரது குற்றமாதலால், கழற்குடம் அவருக்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**பெய்த முறையன்றி** — தன்னுள்ளே போட்டமுறையினாலல்லாமல், **பிறழ** — (முன் போடப்பட்டவையும் பின் போடப்பட்டவையும் அம்முறை) பிறழ்ந்து போக, **உடன்தரும்** — விரைவிலே (தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக்) கொடுக்கின்ற, செய்தி — செய்கையானது, **கழல்பெய் குடத்தின்சீர்** — கழற்காய் இட்ட குடத்தினது தன்மையாம்.

முறை பிறழக் கற்பித்தலும் தாமறிந்தவற்றை யெல்லாம்

ஒருசேரக் கூறுதலும் ஆகிய செய்கையானது, ஆசிரிய ராகாதவரது குற்றமாதலால் கழற்குடம் அவருக்கு உவமானமாயிற்று.**பெய்த முறையன்றி** - தன்னுள்ளே போட்டமுறையினாலல்லாமல், **பிறழ** - (முன் போடப்பட்டவையும் பின் போடப்பட்டவையும் அம்முறை) பிறழ்ந்து போக, **உடன்தரும்** - விரைவிலே (தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக்) கொடுக்கின்ற, **செய்தி** - செய்கையானது, **கழல்பெய் குடத்தின்சீர்** - கழற்காய் இட்ட குடத்ினது தன்மையாம்.

முறை பிறழக் கற்பித்தலும் தாமறிந்தவற்றை யெல்லாம் ஒருசேரக் கூறுதலும் ஆகிய செய்கையானது, ஆசிரிய ராகாதவரது குற்றமாதலால் கழற்குடம் அவருக்கு உவமானமாயிற்று.

## மோசசு பொன்னையா

முன்னே தன்னுள் போட்ட முறைப்படி யல்லாமல் அம்முறை பிறழ முன் இடப்பட்ட கழற்காய்களைப் பின் தருஞ் செய்கை கழற்குடத்தின் பண்பாகும், எ-று.

**(31)**

## 32. தானே தரக்கொளி என்றித் தன்பால் மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.

**தானே தரக் கொளின் அன்றித் தன்பால்**
**மேவிக் கொளக் கொடா இடத்தது மடல் பனை**

āṉē tarak koḻinaṉṟiṭ ṭaṉpāl
mēvik koḻak kotā itaṭṭaṭu matal paṉai

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**The inaccessible teacher, the tree whose fruit cannot be obtained till it drops of itself**

An inaccessible teacher is compared to a rough palmyrah tree, on account of the difficulty of having accessto its fruit, unless it drops its pontaneously.

## சங்கர நமச்சிவாயர்

எ- னின், இதுவும் அது.

இ-ள்.: மடற்பனையின் குற்றம் இது ஆதலின் இஃது உவமையாயிற்று, எ – று.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், மடற்பனையினது தன்மை இதுவெனக் கூறுகின்றது.

இ-ள்.: **தானே தரக்கொளின் அன்றித்** – தன்னிடத்துப் பலன்களை இவ்வுலகத்தார்க்குத் தான்தானே தரக்கொள்வதேயன்றி, **தன்பால் மேவிக் கொளக் கொடா** – தம்மிடத்திற் பிறர் கிட்டிய பலன்களைக் கொள்ளுதற் கரிதாய, **இடத்தது** – இனிதாகிய பயன்களைக் கொண் டிருப்பது, **மடற்பனை** – மடற்பனையது தன்மையாம், எ-று.

## விசாகப்பெருமாளையர்

இதுவுமது.

இ-ள்.: **தானே தர** – தானே தன்னிடத்துள்ள பழங்களைத் தர, **கொளினன்றி** – கொண்டாற் கொள்ளலாமே யல்லாமல், **தன்பான் மேவிக் கொள** – ஒருவர் தன்னிடத்து நெருங்கி வந்து பறித்துக் கொள்ள, **கொடாயிடத்தது** – அப்பழங்களைக் கொடாத விடத்தை யுடையது, **மடற்பனை** – தன் வடிவமுழுது மடல் விரிந்த பனை, எ-று.

தாமே தம்மிடத்திலுள்ள நூற்பொருள்களைச் சொல்ல அறிந்து கொண்டாற் கொள்ளலாமே யல்லாமல் ஒருவர் தம்மிடத்து நெருங்கி வந்து வினாவி அறிந்துகொள்ள அந்நூற் பொருள்களைச் சொல்லாத விடத்தை யுடையவர் ஆசிரியராகாதவ ராதலால் மடற்பனை அவருக்கு உபமானமாயிற்று.'

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

இ-ள்.: **தானேதர** – அதுவாகவே கொடுக்க, **கொளினன்றி** – கொண்டாலல்லது, **தன்பால்** – அதனிடத்திலே போய், **மேவிக்கொள** – விரும்பி யேற்க, **கொடா விடத்தது** – கனி கொடாமைக்கு ஏதுவாகிய இடத்தை யுடையது, **மடற்பனை** – மடலோடு கூடிய பனையாம், எ – று.

மடல்– பனையேடு, அது ஆகுபெயராய் அதனையுடைய மட்டை மேல் நின்றது. கனி கொடாமைக்கு இடமுமோர் காரண மென்று சொல்ல வந்தவர் கொடா விடத்த தென்றார். அவ்விடமாவது இடுகாடு, சூழவு முள்ளுள்ள காடு முதலிய இடம்.

இது உவமையாதலால் தாமாகவே சொல்லக் கொள்வதல்லது மாணாக்கர் விரும்பிப் போய்க் கேட்கச் சொல்லாமைக் கேதுவாகிய இடத்திலிருக்கு மாறுபாட்டு நினைப்பை யுடையவரெனப் பொருளுரைத்துக் கொள்க.

இங்கே சொல்லாமைக் கேதுவாகிய இடத்திருப்பது பாடஞ் சொல்ல வீற்றிருக்கும் ஆசனத்தை விட்டுப்போய் அந்தப்புர முதலிய இடங்களிலிருப்பது.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– தானே தர கொளின் அன்றி** – (தன் பழங்களை) அதுவாகவே கொடுக்கக் கொண்டாலல்லாமல், **தன்பால் மேவி கொள** – தன்னிடத்தில் (ஒருவர்) விரும்பி ஏறிப்பறித்துக் கொள்ளும்படி, **கொடா இடத்து** – கொடாத இடத்தையுடையது, **மடல் பனை** – முழுதும் மட்லோடு கூடிய பனையின் குணமாம்.

குறிப்பு :–

மடல் – பனையேடு; அது மட்டைக்காயிற்று. இதனால் தாமே பாடஞ்சொன்னால் கொள்வதல்லது, மாணாக்கர் விரும்பிப் போய்க்கேட்கவும் பாடஞ்சொல்லாதவர் ஆசிரியராகார் என அறிக. இனி, 'இடத்தது' என்ற சொற்போக்கால் கனிகொள்ளக் கூடாமைக்குக் காரணமான இடுகாடு, சூழவும் முள்ளுள்ள காடு முதலிய இடங்களில் இருத்தல் பனைக்குக் குற்றமாதல்போல, பாடங்கொள்ளக் கூடாமைக்கு ஏதுவான இடங்களிலிருப்பதும் ஆசிரியர்க்குக் குற்றமாம் என்பதும் பெறப்படும்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: தானே தரக்கொளின் அன்றி** – தானே தன்னிடத் துள்ள பழங்களைத் தரக் கொண்டாற் கொள்ளலாமே யன்றி, **தன் பால் மேவிக் கொளக் கொடா இடத்தது** – ஒருவர் தன்னிடத்து நெருங்கி வந்து பறித்துக் கொள்ள அப் பழங்களைக் கொடாத இடத்தை யுடையது, **மடற்பனை** – தன் வடிவ முழுவதும் மடல் விரிந்த பனை, **எ– று.**

தாமே தம்மிடத்திலுள்ள நூற்பொருள்களைச் சொல்ல அறிந்துகொண்டாற் கொள்ளலாமே யன்றி, ஒருவர் தம்மிடத்து நெருங்கி வந்து வினாவி அறிந்துகொள்ள அந் நூற்பொருள்களைச் சொல்லாதவிடத்தை யுடையவர் ஆசிரிய ராகாதவ ராதலால், மடற் பனை அவருக்கு உவமானமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– **தானே தரக் கொளின்அன்றி** – தானே தன்னிடத்துள்ள பழங்களைத்தரக் கொண்டாற் கொள்ளலாமேயன்றி, **தன் பால் மேவிக் கொளக் கொடா இடத்தது** – ஒருவர் தன்னிடத்து நெருங்கிவந்து பறித்துக் கொள்ள அப்பழங்களைக் கொடாத இடத்தையுடையது, **மடற்பனை** – தன்வடிவமுழுதும் மடல்விரிந்த பனை.

தாமே தம்மிடத்துள்ள நூற்பொருள்களைச் சொல்ல அறிந்துகொண்டாற் கொள்ளலாமேயன்றி ஒருவர்தம்மிடத்து நெருங்கி வந்து வினாவி அறிந்து கொள்ள அந்நூற் பொருள்களைச் சொல்லாத விடத்தையுடையவர் ஆசிரியராகா ராதலால், மடற்பனை அவருக்கு உவமானமாயிற்று.

மடற்பனையாவது – வாட்பற்கள் போலுங் கருக்குகளுடைய மட்டைகள் நாற்புறமும் அடியிலிருந்து மேலே குருத்துவரையும் அடுக்காகப் பரம் புண்டு, அம்மட்டைகளினடியாகிய மடல்கள் பிரிந்துதிரப்பெறாது பின்னிப் பற்றிய பனையாம். இம்மடற் பனையில் ஏறினாற் கைகான் முதலான சரீர அங்கங்கள் கருக்கினால் வெட்டுண்டு வேதனைப்படுவாராதலின், அதில் எவரும் ஏறவிரும்பார். ஆசிரியன் பாடஞ்சொல்ல வீற்றிருக்கு மாசனத்தை விட்டுப் போய் நூற்பொருளைக் கேட்டற்கு மாணாக்கர் சார்தற்கொட்டாத, அந்தபுரம் முதலிய இடத்திருப்பது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ – ள்.: **தானே தர** – (தன் பழங்களைத்) தானே கொடுக்க, **கொளின் அன்றி** – கொண்டாலல்லாமல், **தன்பால் மேவி** – (ஒருவர்) தன்னிடம் நெருங்கி ஏறி வந்து, **கொள** – பறித்துக் கொள்ளும்படி, **கொடா**

**இடத்தது** – இடங் கொடாதது, **மடல் பனை** – (தன் வடிவ முழுவதும் கூரிய கருக்கு) மடல்கள் விரியப் பெற்ற பனைமரத்தின் தன்மையாம்; எ – று.

இம்மடற்பனையி லேறுவார் அம்மடல்களின் கருக்கினாற் கொடும்புண்படுவ ரென்க.

தாமே தம்மிடத்திலுள்ள நூற்பொருள்களைச் சொல்லப் பிறர் அறிந்து கொண்டா லல்லாமல் ஒருவர் தம்மிடம் நெருங்கி வந்து வினாவி அறிந்து கொள்ள இடங்கொடாதவர் ஆசிரியராகாதவ ராதலால், ற்பனை அவர்க்கு உவமையா மென அறிக. கொடாவிடத்தது – விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– தானே தரக்கொளின் அன்றி** – தானே தன்னிடத்துள்ள பழங்களைத் தரக் கொண்டாற் கொள்ளலாமேயன்றி, **தன்பால் மேவிக் கொளக் கொடா இடத்தது** – ஒருவர் தன்னிடத்து நெருங்கி வந்து பறித்துக்கொள்ளஅப் பழங்களைக் கொடாத இடத்தையுடைணது, **மடற் பனை** – தன் வடிவமுழுவதும் மடல் விரிந்த பனை. எ–று.

தாமே தம்மிடத்திலுள்ள நூற்பொருள்களைச் சொல்ல அறிந்துகொண்டாற்கொள்ளலாமேயன்றி, ஒருவர் தம்மிடத்து நெருங்கி வந்து வினாவி அறிந்து கொள்ள ற்பொருள்களைச் சொல்லாத இடத்தையுடையவர் ஆசிரியராகாதவராதலால், மடற்பனை அவருக்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**தானே தர** – தானே (தன்னிடத்துள்ள பழங்களைத்) தர, **கொளின் அன்றி** – கொன்டாற் கொள்ளலாமேயல்லாமல், **தன்பால் மேவி கௌ** – (ஒருவர்) தன்னிடத்து ஏறி வந்து பறித்துக் கொள்ள, **கொடா இடத்தது** – அப்பழங்களைக் கொடாத இயல்பையுடையது, **மடல்பனை** – (தன் வடிவமுழுதும்) மாடல் விரிந்த பனை.

தாமே நூற்பொருளைச் சொல்லுதலல்லாமல் ஒருவர் தம்மிடத்து நெருங்கி வந்து வினாவி அறிந்துகொள்ள இசையாத தன்மையுடையவர் ஆசிரியராகாதவ ராதலால் மடற்பனை அவருக்கு உவமானமாயிற்று.

**மோசசு பொன்னையா**

தன்னிடத்தில் உள்ள பழங்களைத் தானே தரின் பெறுதலன்றி, ஒருவன்நெருங்கி வந்து பறித்துக் கொள்ளுமாறு இடந் தாராமை மடல்களையுடைய பனையின் பண்பாகும், எ–று.

(32)

33. **அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்**
**கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.**

**அரிதின் பெயக் கொண்டு அப் பொருள் தான் பிறர்க்கு**
**எளிது ஈவு இல்லது பருத்திக் குண்டிகை.**

aritin peyak kontu ap porul tān pirarkku
elitu īvu illatu paruttik kuntikai.

**என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

**The half-instructed teacher the tinder box with small mouth hard to put in and hard to get out**

A half-instructed teacher is compared to a cotton holder or tinder box, which receives through its small aperture little by little with great difficulty, and then dispenses little by little with greater difficulty.

**சங்கர நமச்சிவாயர்**

எ – னின், இதுவும் அது.

இ – ள்.: பருத்தி பெய்த குண்டிகையின் குற்றம் இது ஆதலின் இஃது உவமையாயிற்று, எ – று.

**கூழங்கைத் தம்பிரான்**

சூ–ம், பருத்திக் குண்டிகையினது தன்மை இதுவெனக் கூறுகின்றது.

இ–ள்.:– **அரிதிற் பெயக் கொண்டு** – சிறிது சிறிதாய் அரிதாகப் பெய்யத் தானுட்கொண்டு, **அப்பொருடான் பிறர்க்கு** – அங்ஙனம் சிறிது சிறிதாய் உட்கொண்ட பொருள் பிறர் கொள்ளுதற்கு, **எளிது ஈவில்லது** – சொரியினும் வீழாது சிறிது சிறிதாக வாங்கக் கொடுப்பதே யன்றி எளிதின்

ஈயாதது, **பருத்திக் குண்டிகை** – பருத்தி பெய்த குண்டிகையினது தன்மையாம், எ–று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: அரிதிற் பெயக் கொண்டு** – பஞ்சைக் கொண்ட போதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாக அடைப்பத் தன்னுள்ளே கொண்டு, **அப் பொருடான் பிறர்க் கெளி தீ வில்லது** – கொடுக்கும் போது அப் பஞ்சைத்தான்பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையது, **பருத்திக்குண்டிகை** – பஞ்சு போட்ட குடுக்கை யாகும், **எ–று.**

கல்வியைக் கற்றபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாகக் கற்பிக்கத் தம்முள்ளே கொண்டு பாடஞ் சொல்லும் போதும் அக் கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற் ஈடாத குற்றமுடையவர் ஆசிரிய ராகாதவ ராதலால் பருத்திக் குண்டிகை அவர்க்கு உபமானமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: அரிதின்** – அரிதாக, **பெயக் கொண்டு** – செலுத்தக் கொண்டு, **அப்பொருள்** – அந்தப் பஞ்சி யென்னும் பொருளை, **தான்**–அது, **பிறர்க் கெளி தீ வில்லது** – பிறர்க்கு எளிதாகக் கொடாதது, **பருத்திக் குண்டிகை** – பருத்தி யடைந்த கரகம், **எ–று.**

எனவே, வாய் சிறிதாதலால் சிறிது சிறிதாகவே செலுத்தக் கொண்டு சிறிது சிறிதாகவே கொடுப்ப தென்பதாயிற்று. இது உவமை யாதலால் தம்முணர்வு சிறிதாதலாற் சிறிது சிறிதாகத் தாங் கற்றவாறே, மாணாக்கனுணர்வு பெரிதாயினும் ஈயப் புகுதல், ஆசிரியராகாதவருடைய மாறுபட்ட நினைப்பெனப் பொருளுரைத்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– அரிதில் பெயகொண்டு** – (பஞ்சை உட்கொண்டபோதும்) அருமையாக (ச்சிறிது சிறிதாக) அடைக்கத் தன்னுள்ளேகொண்டு, **அ பொருள்** – அப்பருத்தியை, **தான் பிறர்க்கு எளிது ஈவு இல்லது** – தான்

(கொடுக்கும்போதும்) பிறர்க்கு எளிதாகக் கொடாதது, **பருத்திக் குண்டிகை–** பஞ்சடைத்த குடுக்கையின் தன்மையாம்.

குறிப்பு :-

எனவே, குடுக்கையின்வாய் சிறிதாதலால் சிறிது சிறிதாகவே செலுத்தக்கொண்டு சிறிதுசிறிதாகவே கொடுக்கும். இது உவமையாதலின், தம்முணர்வு சிறிதாதல் பற்றிச் சிறிது சிறிதாகத் தாம் கற்ற
நூற்பொருள்களை மாணாக்கன் உணர்வு பெரிதாயினும் சிறிது சிறிதாகக் கொடுத்தல் ஆசிரியர்க்குக் குற்றமெனக் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.:– அரிதின் பெயக் கொண்டு –** பஞ்சைக் கொண்ட போதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாக அடைப்பத் தன்னுள்ளே கொண்டு, **அப்பொருள் தான் பிறர்க்கு எளிது ஈவு இல்லது –**கொடுக்கும்போதும் அப்பஞ்சைத் தான்பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையது, **பருத்திக் குண்டிகை –** பஞ்சுபோட்ட குடுக்கை, **எ – று.**

கல்வியைக் கற்றபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாகக் கற்பிக்கத் தம்முள்ளே கொண்டு, பாடஞ் சொல்லும் போதும் அக் கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற்கொடாத குற்றமுடையவர் ஆசிரிய ராகாதவ ராதலால், பருத்திக் குண்டிகை அவர்க்கு உவமான மாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். அரிதின் பெயக் கொண்டு –** பஞ்சைக் கொண்டபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாக அடைப்பத் தன்னுள்ளே கொண்டு, – **அப்பொருள் தான் பிறர்க்கு எளிது ஈவு இல்லது –** கொடுக்கும் போதுஅப்பஞ்சைத் தான்பிறர்க்கு எளிதிற்கொடாத குற்றமுடையது, – **பருத்திக் குண்டிகை –** பஞ்சுபோட்ட குடுக்கை. **எ–று.**

கல்வியைக் கற்றபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாகக் கற்பிக்கத் தம்முள்ளே கொண்டு, பாடஞ் சொல்லும் போதும் அக்கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற்கொடாத குற்ற முடையவர் ஆசிரியராகாதவராதலால், பருத்திக் குண்டிகை அவர்க்கு உவமானமாயிற்று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– அரிதின் பெய கொண்டு** – (பஞ்சை உட்கொண்ட போதும்) அருமையாக (வருத்தத்தோடு) (சிறிதுசிறிதாக) அடைக்கத் (தன்னுள்ளே) கொண்டு, **அ பொருள்** – அப்பஞ்சை, **தான் பிறர்க்கு எளிது ஈவு இல்லது** – (கொடுக்கும் போது) தான் பிறர்க்கு எளிதிற் கொடாதது, **பருத்தி குண்டிகை** –பஞ்சு அடைத்த குடுக்கையின் தன்மையாம்; **எ – று.**

கல்வியைக் கற்றபோதும் வருத்தத்தோடு சிறிதுசிறிதாகக் கற்பிக்கத் தாம் அறிந்து கொண்டு பாடஞ் சொல்லும் போதும் அக் கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற் கொடாதவர் ஆசிரியராகாதவ ராதலால், பருத்திக் குண்டிகை அவர்க்கு உவமையாமென அறிக.

தன்வாய் சிறியதாதலாற் சிறிதுசிறிதாகவே கொண்டு அவ்வாறே கொடுக்கின்ற குண்டிகை போல, தம் ணர்வு சிறியதாதலாற் சிறிது சிறிதாகவே கற்று மாணாக்கனுணர்வு பெரியதாயினும் அவ்வாறே கொடுப்பவரென்றபடி.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– அரிதின் பெயக் கொண்டு** – பஞ்சைக் கொண்டபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாக அடைப்பத் தன்னுள்ளே கொண்டு, **அப்பொருள் தான் பிறர்க்கு எளிது ஈவு இல்லது** – கொடுக்கும் போதும் அப்பஞ்சைத் தான்பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையது, **பருத்திக் குண்டிகை** – பஞ்சு போட்ட குடுக்கை. **எ–று.**

கல்வியைக் கற்றபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாகக் கற்பிக்கத் தம்முள்ளே கொண்டு, பாடஞ் சொல்லும்போதும் அக் கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையவர் ஆமுசிரியராகாதவ ராதலால், த்திக் குண்டிகை அவர்க்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**அரிதின் பெயக்கொண்டு** – (பஞ்சை) வலிதின் அடைக்கத் தன்னுள்ளே கொண்டு, **அப்பொருள் தான்பிறர்க்கு எளிது ஈவு இல்லது** – அப்பஞ்சைத் தான்பிறர்க்கு எளிதிற் கொடாத இயல்புடையது, **பருத்தி குண்டிகை** – பஞ்சு அடைத்த குடுக்கையாகும்.

கல்வியைக் கற்றபோதும் சிறிது சிறிதாகக் கற்பிக்க வருத்தத்தோடு தம்முள்ளே கொண்டு, பாடஞ் சொல்லும்போதும் அக்கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையவர் ஆசிரிய ராகாதவ ராதலால் பருத்திக் குண்டிகை அவருக்கு உவமானமாயிற்று.

**மோசசு பொன்னையா**

செலுத்துங்கால் அரிதாக ஏற்றுத் தன்னுள் உள்ள பஞ்சைப் பிறர்க்கு எளிதில் கொடாத தன்மை பருத்திக்குடுக்கையின் பண்பாகும், எ—று.

(33)

**34. பல்வகை யுதவி வழிபடு [1]பண்பின் நல்லோரொழித் தல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே.**

**பல் வகை உதவி வழிபடு பண்பின் நல்லோர் ஒழித்து அல்லோர்க்கு அளிக்கும் அது முடத் தெங்கே.**

pal vakai uṭavi vaḷipatu paṇpiṉ nallōr oḷiṭṭu allōrkku aḷikkum aṭu mutaṭ ṭeṅkē.

**என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

The teacher who neglects his own pupils to attend to others, the cocoanut tree that leans over and drops it fruit into a stranger's grounds. A neglectful teacher is compared to a recumbent cocoanut tree which leans over and drops it fruit into atranger's ground, and deprives the owner of the fruit.

**மயிலை நாதர்**

இ – ள்.: இப்பெற்றிக் குற்றங்களையுடையோர் கற்கப்படாதோர் ,எ – று.

---

பாட வேறுபாடு:–

1. பண்பினல்லோர்க்கு

## சங்கர நமச்சிவாயர்

**எ – னின்,** இதுவும் அது.

**இ–ள்.:**–முடத்தெங்கினது குற்றம் இது ஆதலின் இஃது உவமை யாயிற்று, **எ – று.**

இவ் வுவமைகளின் குற்றம் போலப் பொருளின் குற்றமும் விரித்து உரைத்துக் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**கூ–ம்,** முடத்தெங்கினது தன்மை கூறுகின்றது.

**இ–ள்.: பல்வகை உதவி** – ஒருவர் பன்னாளும் நீர் வார்த்தல் முதலான உதவி செய்ய, **வழிபடு பண்பின் அல்லோர்க்கு அளிக்கும்** – இவ்வழிபடு பண்பு இல்லாராகிய பிறர்க்குப் பயன்படுவது, அது **முடத் தெங்கே** – யாதது முடத்தெங்கினது தன்மையாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: பல்வகை யுதவி** – நீர் விடுகை முதலாகிய பலவகை யு பகாரங்களையுஞ் செய்து, **வழிபடு பண்பின்** – தனக்கு வழிபாடு செய்யுங் குணத்தினின்றும், **அல்லோர்க்கு** – அல்லாத பிறருக்கு, **அளிக்குமது** – தன்னிடத்துள்ள காய்களைத் தருங் குற்றமுடையது, **முடத் தெங்கு** – வேலிக்கப்புறம் வளைந்த தென்ன மரமாம், **எ–று.**

பொருள் கொடுத்தன் முதலாகிய பலவகை யுபகாரங் களையுஞ் செய்து தமக்கு வழிபாடு செய்யுங் குணத்தினின்றும் அல்லாத மாணாக்கருக்குத் தம்மிடத் துள்ள கல்விப் பொருளைத் தருங் குற்ற முடையவ ராசிரியராகாதவ ராதலால், முடத்தெங்கு அவருக்கு உபமானமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: பல்வகை யுதவி** – பல விதத்தினு முதவி செய்து, **வழிபடு பண்பின்**–வழிபாடு செய்யுந் தன்மை யினின்றும், (போற்றி வளர்க்கு தன்மையி னின்றும்) **அல்லோர்க் களிக்குமது** –அல்லாத பிறருக்குக் கனிகளைக் கொடுக்கும் அத் தன்மையை யுடையது, **முடத் தெங்கு**– (வழியருகே) வளைந்து வந்திருக்குந் தென்னமரம், **எ – று.**

அது என்பது இங்கே குறிப்புவினையாலணையும் பெயராய் நின்று முடத்தெங்கு என்னும் பெயர்கொண்டு முடிந்தது. இது உவமை யாதலால், பல்வகை யுதவி வழிபாடு செய்யும் மாணக்கர்க் கின்றிப் பிறர்க்கு நூற்பொருள் அளிப்பது ஆசிரியராகார் மாறுபட்ட நினைப்பெனப் பொருளுரைத்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– பல்வகை உதவி** – (நீர் ஊற்றுதல் முதலிய) பலவகையான உபகாரங்களால், **வழிபடு பண்பின்** – (தன்னை) ஆதரித்து வளர்க்கின்ற தன்மையினின்றும், **அல்லோர்க்கு** – அல்லாத பிறருக்கு, **அளிக்கும் அது** – (தன் காய்களைக்) கொடுப்பது, **முடம் தெங்கு** – (தன்னிலத்திற்கு வெளிப்புறத்தில்) வளைந்துள்ள தென்னைமரத்தின் தன்மையாம்.

**குறிப்பு :–**

இவ்வுவமம் பொருள் முதலிய கொடுத்துப் பலவகையாலும் தம்மைப் போற்றி வழிபடும் நன்மாணாக்கர்க்குத் தாம் கற்ற நூற்பொருளைக் கொடாமல், த்தன்மையரல்லாத பிறருக்குக் கொடுப்பவர் நல்லாசிரியராகார் என்பதை உணர்த்திற்று.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: பல்வகை உதவி வழிபடு பண்பின் அல்லோர்க்கு** – நீர் விடுகை முதலாகிய பலவகை யுபகாரங்களையுஞ் செய்து தனக்கு வழிபாடு செய்யுங் குணத்தி னின்றும் அல்லாத பிறருக்கு, **அளிக்கு மது** – தன்னிடத்துள்ள காய்களைத் தருங் குற்றமுடையது, **முடத்தெங்கு** – வேலிக்கு அப்புறம் வளைந்த தென்னமரம், **எ – று.**

பொருள் கொடுத்தல் முதலாகிய பலவகை யுபகாரங்களையுஞ் செய்து தமக்கு வழிபாடு செய்யுங் குணத்தின்றும் அல்லாத மாணாக்கருக்குத் தம்மிடத் துள்ள கல்விப்பொருளைத் தருங் குற்றமுடையவர் ஆசிரியராகாதவ ராதலால், முடத்தெங்கு அவருக்கு உவமானமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். பல்வகை உதவி வழிபடு பண்பின் அல்லோர்க்கு** – நீர்விடுகை முதலாகிய பலவகையுபகாரங்களையுஞ் செய்து தனக்கு வழிபாடு செய்யுங் குணத்தினின்றும் அல்லாத பிறருக்கு, – **அளிக்குமது** –

தன்னிடத்துள்ள காய்களைத் தருங் குற்றமுடையது, – **முடத்தெங்கு** – வேலிக்கு அப்புறம் வளைந்த தென்னைமரம். **எ–று.**

> பொருள் கொடுத்தன் முதலாகிய பலவகை யுபகாரங்களையுஞ் செய்து தமக்கு வழிபாடுசெய்யுங் குணத்தினின்றும் அல்லாத மாணாக்கருக்குத் தம்மிடத் துள்ள கல்விப்பொருளைத் தருங் குற்றமுடையவர் ஆசிரிய ராகதவராதலால், முடத்தெங்கு அவருக்கு உவமானமாயிற்று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: பல் வகை உதவி** – (நீர் பாய்ச்சுதல் முதலிய) பல வகைகளாலும் உபகரித்து, **வழிபடு பண்பின்** – (தனக்கு) வழிபாடு செய்கின்ற போற்றி வளர்க்கின்ற தன்மையி னின்றும், **அல்லோர்க்கு** – அல்லாத பிறர்க்கு, **அளிக்குமது** – (தன்காய்களைத்) தருவது; **முடம்தெங்கு** – (வேலிக்கு வெளிப்புறத்தே) வளைந்த தென்னைமரத்தின் தன்மையாம்; **எ – று.**

> பொருள்கொடுத்தல் முதலிய பலவகைகளாலும் உபகரித்துத் தமக்கு வழிபாடு செய்யும் நன்மாணாக் கர்க்குத் தராமல் அத்தன்மை யரல்லாத பிறர்க்குத் தாம் கற்ற நூற்பொருளைத் தருபவர். ஆசிரிய ராகாதவ ராதலால், முடத்தெங்கு அவர்க்கு உவமையா மென அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– பல்வகை உதவி வழிபடு பண்பின் அல்லோர்க்கு** – நீர் விடுகை முதலாகிய பலவகை உபகாரங்களையுஞ் செய்து தனக்கு வழிபாடு செய்யுங் குணத்தினின்றும் அல்லாத பிறருக்கு, **அளிக்கும் அது** – தன்னிடத்துள்ள காய்களைத் தரும் அத்தன்மையையுடையது, **முடத்தெங்கு** – (வேலிக்கு அப்புறம்) வளைந்த தென்னமரம். **எ–று.**

> பொருள் கொடுத்தன் முதலாகிய பலவகை யுபகாரங் களையுஞ் செய்து தமக்கு வழிபாடு செய்யுங் குணத்தி னின்றும் அல்லாத மாணாக்கரக்குத் தம்மிடத்துள்ள கல்விப்பொருளைத் தருங் குற்றமுடையவர் ஆசிரியராகாதவ ராதலால், முடத்தெங்கு அவருக்கு உவமானமாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**பல்வகை உதவி** – (நீர்விடுகை முதலாகிய) பலவகைப் பயன்களையுஞ் செய்து, **வழிபடு பண்பின்** – தனக்கு வழிபாடுசெய்யுங் குணத்தினின்றும், **அல்லோர்க்கு** – அல்லாத பிறருக்கு, **அளிக்குமது** – தன்னிடத்துள்ள காய்களைத் தருவது, **முடத்தெங்கு** – (வேலிக்கப்புறம்) வளைந்த தென்னமரமாம்.

> பொருள் கொடுத்தல் முதலாகிய பலவகைப் பயன்களையுஞ் செய்து, தமக்கு வழிபாடு செய்யுங்குணமில்லா மாணாக் கருக்குத் தம்மிடத்திலுள்ள கல்விப்பொருளைத்த ரு ங் குற்றமுடையவர் ஆசிரியராகாதவ ராதலால், முடத்தெங்கு அவருக்கு உவமானமாயிற்று.

## மோசசு பொன்னையா

பலவாறு வேண்டியன செய்து பேணுவாருக்கு உதவாமல், மற்றோர்க்குக் கொடுக்கும் இயபல்வகை **உதவி** – (நீர்விடுகை முதலாகிய) பலவகைப் பயன்களையுஞ் செய்து, **வழிபடு பண்பின்** – தனக்கு வழிபாடு செய்யுங் குணத்தினின்றும், **அல்லோர்க்கு** – அல்லாத பிறருக்கு,**அளிக்குமது** –தன்னிடத்துள்ள காய்களைத் தருவது, **முடத்தெங்கு** – வேலிக்கப்புறம்) வளைந்த தென்னமரமாம்.பொருள் கொடுத்தல் முதலாகிய பலவகைப் பயன்களையுஞ் செய்து, தமக்கு வழிபாடு செய்யுங் குணமில்லா மாணாக்கருக்குத் தம்மிடத்திலுள்ள கல்விப் பொருளைத்தருங் குற்றமுடையவர் ஆசிரியராகாதவ ராதலால், முடத்தெங்கு அவருக்கு உவமானமா யிற்று.ல்புடையது வளைந்த தெங்குமரம், **எ–று.**

> இவ்வுவமைகளின் குற்றத்தைப் பொருள்களான ஆசிரியராகாதாரின் குற்றத்தோடு பொருத்தி யுரைத்துக் கொள்க.

**(34)**

## பாடஞ் சொல்வதன் இலக்கணம்

35. ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
உரைக்கப்[1]படுபொருள் ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ
னுளங்கொளக் கோட்டமின் மனத்தினூல்
கொடுத்த லென்ப.

ஈதல் இயல்பே இயம்பும் காலைக்
காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்
சிறந்துழி இருந்து தன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப்படு பொருள் உள்ளத்து அமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்து அவன் உளம்
கோட்டம் இல் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப.

ītal iyalpē iyampum kālaik
kālamum itaṉum vāliṭiṉ nōkkis
siṟantu uḷi iruntu taṉ teyvam vāḷtti
uraikkap patu poruḷ uḷḷat tu amaittu
viraiyāṉ vekuḷāṉ virumpi mukam malarntu
koḷvōṉ koḷvakai aṟintu avaṉ uḷam
kōttam il maṉattiṉ nūl kotuttal eṉpa.

என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The method of teaching

The method or way of teaching: in the first place suitable time and place must be selected; then, the teacher, occupying an elevated seat, must invoke his Deity, having the substances of his lecturers thoroughly digested in his mind; and having a knowledge

---

பாட வேறுபாடு:–

1. படும்பொருள்

of the capacity of his scholar, he must impart instruction not in a hasty manner, nor in an angry tone, but willingly,cheerfully and ingenuously.

## ஒப்புமைப் பகுதி

**கொள்பவன்கோள் உணர்ந்து இடம்காலம்**
**குறித்து விரைவு**
**கோவமின்றி ஓதல்கொடை பொழுதொடு சென்று**
**இறைஞ்சி**
**வள்ளல்குணம் குறிப்பிசைந்து அகம்வயிறாச் செவியே**
**வாயாநூல் சோறா உண்பவனில் விரைந்தறிதல்**
**உள்ளம் கொள்வதாம் கேட்டல் சிந்தித்தல் பயிற்சி**
**உணர்தல் பயிலியல்.........**

**(சுவாமி.:7:1–3)**

## மயிலை நாதர்

இ–ள்.: இவ்வாறளித்தல் [1] ஈதலியல்பு, எ – று.

## சங்கர நமச்சிவாயர்

எ – னின், நிறுத்தமுறையானே ஆசிரியன் கற்பிக்குமாறு உணர் – ற்று.

இ – ள்.: கற்பிக்குமாறு இவ்வாறு எனச் சொல்லுவர் புலவர், எ– று.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், ஆசிரியர் கற்பிக்கும் இலக்கணம் இதுவெனக் கூறுகின்றது.

இ–ள்.: **ஈதல் இயல்பே** – ஆசிரியர் சீடருக்கு நூலறிவைக் கற்பிக்கும் இலக்கணத்தை, **இயம்புங் காலை** – சொல்லுமிடத்து, **காலமும் இடனும்** – பொருத்தமாகச் சிறந்த ஓரையினும் சிறந்த இடத்தினும், **வாலிதின் நோக்கிச்** – தூய்தாக நோக்கி, **சிறந்துழி இருந்து** – இடம் பொருள் ஏவற்குக் குறை வராத இடத்திலிருந்து, **தன் தெய்வம் வாழ்த்தி** – தாம் தாம் கொண்ட தெய்வத்தை வாழ்த்தி, **உரைக்கப்படும் பொருள்** – மாணாக்கருக்கு உரைக்கப்படும் பொருளை யெல்லாம், **உள்ளத்து அமைத்து** –

பாட வேறுபாடு.:–

1. இயல்பு

தன்னுள்ளத்தின் கண்ணே ஒழுங்குபடச் சிந்தித்து நிறுத்தி, **விரையான்** – வருவதிற் கருத்தினை மட்டுப்படுத்தி வந்ததிற் சிந்தையைச் . . . . . . . . . * **வெகுளான்** – சினத்திற்குக் காரணம் மாணாக்கனிடத்து உளதாய போதும் அவ்வெகுளியைச் செய்யாதவனாய், **விரும்பி** – அறிவு உணர்த்தலிலேயே விருப்பம் தோற்றி, **முகமலர்ந்து** – முகமலர்ச்சியையும் தோற்றி, **கொள்வோன் கொள்வகை அறிந்து** – சீடன் கொள்ளத்தகும் அறிவு இவ்வளவென அறிந்து, **அவன் உளங்கொளக்** – அவன் அறிவு ஏற்கும்படிக்கு, **கோட்டமில் மனத்தின்** – மனக்கோட்டம் இல்லாமல், **நூல் கொடுத்தல் என்ப** – நூலறிவைக் கொடுப்பதா மென்று சொல்லுவர் புலவர், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** நிறுத்தமுறையாற் பாடஞ் சொல்லுதலின் வரலாற்றைச் சொல்லுகின்றது.

**இ–ள்.: ஈதல்**–பாடஞ் சொல்லுதலினது, **இயல்பு** – வரலாற்றை, **இயம்புங்காலை**–சொல்லும் போது, **காலமும்** – உரிய காலத்தையும், **இடனும்** – உரிய விடத்தையும், **வாலிதின்**–தூயனவாக, **நோக்கி** – பார்த்து, **சிறந்துழி யிருந்து** – சிறந்தவிடத்திருந்து, **தன்றெய்வம்** – தான் வழிபடுகடவுளை, **வாழ்த்தி** – வாழ்த்துதல் செய்து, **உரைக்கப்படும் பொருள்** – பாடஞ் சொல்லப்படும் பொருளை, **உள்ளத்து** – தன் கருத்தின்கண், **அமைத்து** – நிறைத்து, **விரையான்**–விரையானாகியும், **வெகுளான்**–கோபஞ் செய்யானாகியும், **விரும்பி**–இச்சித்து, **முகமலர்ந்து** – முகமலர்ச்சியை யடைந்து, **கொள்வோன்** – கேட்பவனது, **கொள்வகை** – கேட்குமறிவின்வகையை, **அறிந்து**–உணர்ந்து, **அவனுளம்**–அவனது மனம், **கொள**–ஏற்றுக்கொள்ள, **கோட்டமில்** – மாறுபாடில்லாத, **மனத்தின்**–மனத்துடனே, **நூல்**–நூலை, **கொடுத்தல்**–கொடுத்தலாகும், **என்ப** – என்று சொல்லுவர் புலவர், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்த முறையே ஆசிரியன் நூலைக் கற்பிக்கு மிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: ஈதலியல்பு** – (மாணாக்கர்க்கு ஆசிரியன்) நூலைத் கற்றுக் கொடுக்கிற வரலாற்றை, **இயம்புங்காலை** – சொல்லும் போது, **காலமு**

---

* இப்பகுதி மூலநூலில் சிதைந்துள்ளது

**மிடனும்** – (இருதலைக்கு மொத்திருக்கும்படி) ஒருகாலத்தையு மோரிடத்தையும், **வாலிதி னோக்கி** – தூய்தாக ஆராய்ந்து, **சிறந்துழி யிருந்து** – அவை சிறந்த இடத்திருந்து, **தன்தெய்வம் வாழ்த்தி** – தான் வழிபடு கடவுளைத்துதிசெய்து, **உரைக்கப்படும் பொருள்** – தான் சொல்லப்படும் நூலினது பொருளை, **உள்ளத் தமைத்து** – தன்மனத்துள்ளே சரிப்படச் சிந்தித்துக் கொண்டு, **விரையான்** – துரிதப்படாதவனாயும், **வெகுளான்** – கோபமில்லாதவ னாயும், **விரும்பி** – விருப்பத்தோடு கூடி, **முக மலர்ந்து**–மலர்ந்த முகத்தை யுடையவனாகி, **கொள்வோன் கொள்வகை யறிந்து**– மாணாக்கன் அதைத் தன் மனத்துட் கொள்ளுந் தன்மையை முன்னாடி யறிந்து கொண்டு, **அவனுளங் கொள** – அவனுள்ளத்திற்பற்றும்படியாக, **கோட்டமின் மனத்தின்** – மாறுபாடில்லாத நன்மனத்தால், **நூல் கொடுத்தலென்ப** – நூற்பொருளைக் கொடுப்ப தென்று சொல்லுவர் புலவர், **எ – று.**

கொடுத்தல் இங்கே அறிவித்தலின்மேல் நின்றது. இதிற் புலவரென்பது குறைந்து நின்றது. 'என்ப என்னும் பல்லோர் படர்க்கை வினைமுற்றிற்கு அதைப் பயனிலையாக்கி முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஈதல் இயல்பு** – (ஆசிரியன் மாணாக்கனுக்கு நூல்) கற்பிக்கும் கிரமத்தை, **இயம்பும் காலை** – சொல்லும்போது, **காலமும் இடமும் வாலிதின் நோக்கி** – (இருவர்க்கும் பொருந்திய) காலத்தையும் இடத்தையும் நன்றாக அறிந்து, **சிறந்த உழி இருந்து** – மேன்மையான இடத்திலிருந்து, **தன் தெய்வம் வாழ்த்தி** – தான் வழிபடும் கடவுளைத் தோத்திரஞ் செய்து, **உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து**– (தன்னால்) சொல்லப்படுவதாகிய நூற்பொருளை (த்தனது) மனத்துள்ளே (முன்னாடியே நன்றாய்) சேர்த்துக்கொண்டு, **விரையான்** – துரிதப்படாமலும், **வெகுளான்** – கோபியாமலும், **விரும்பி** – (கற்பிப்பதில்) விருப்பமுடையனாகி, **முகம் மலர்ந்து** – இனிய முகத்தையுடையனாகி, கொள்வோன் கொள்வகை **அறிந்து** – கற்றுக்கொள்ளும் மாணாக்கன் (தன் மனத்துள்) கொள்ளும் திறத்தைத் தெரிந்துகொண்டு, **அவன் உளம்கொள** – அவன் மனத்தில் பொருந்தும்படி, **கோட்டம் இல் மனத்தின்** – மாறுபாடில்லாத மனத்தையுடையனாகி, **நூல்கொடுத்தல் என்ப** – நூலைக் கற்பிப்பதாம் என்று கூறுவர் (அறிவுடையோர்).

**குறிப்பு :–**

'சிறந்துழி யிருந்து' என்பதற்கு, காலமும் இடமும் சிறந்த இடத்தில் இருந்து எனவும் பொருள் கூறுவர்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஈதல் இயல்பு இயம்புங் காலை** – பாடஞ் சொல்லுத லினது வரலாற்றைச் சொல்லும்போது, **காலமும் இடனும் வாலிதின் நோக்கி** – உரிய காலத்தையும் உரிய விடத்தையுந் தூயனவாகப் பார்த்து, **சிறந்துழி இருந்து** – சிறந்தவிடத்திருந்து, **தன் தெய்வம் வாழ்த்தி** – தான் வழிபடு கடவுளைத் துதித்து, **உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து** – பாடஞ் சொல்லப்படும் பொருளைத் தன் கருத்தின்கண் நிறைத்து, **விரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து** – விரையானாகியுங் கோபஞ் செய்யானாகியும் இச்சித்து முகமலர்ச்சியை யடைந்து, **கொள்வோன் கொள் வகை அறிந்து**–கேட்பவனது கேட்கும் அறிவின் வகையை அறிந்து, **அவன் உளம் கொள** – அவனது மனம் ஏற்றுக் கொள்ள, **கோட்டம் இல் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப** –மாறுபாடில்லாத மனத்துடனே நூலைக் கொடுத்தலாகும் என்று சொல்லுவர் புலவர், எ – று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ஈதல்இயல்பு இயம்புங்காலை** – பாடஞ் சொல்லுதலினது வரலாற்றைச் சொல்லும்போது, – **காலமும் இடனும் வாலிதின் நோக்கி** – உரிய காலத்தையும் உரிய விடத்தையுந் தூயனவாகப் பார்த்து, – **சிறந்துழி இருந்து** – அவை சிறந்தவிடத்திருந்து, – **தன் தெய்வம் வாழ்த்தி** – தான் வழிபடு கடவுளைத் துதித்து, – **உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து** – பாடஞ் சொல்லப்படும் பொருளைத் தன் கருத்தின்கண் நிறைத்து, – **விரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து** – விரையானாகியும் கோபஞ் செய்யானாகியும் இச்சித்து முகமலர்ச்சியடைந்து, – **கொள்வோன் கொள்வகை அறிந்து** – மாணாக்கனது கேட்கும் அறிவின் வகையை அறிந்து, – **அவன் உளம் கொள** – அவனது மனம் ஏற்றுக்கொள்ள, – **கோட்டம் இல் மனத்தின்நூல்கொடுத்தல் என்ப** – மாறுபாடில்லாத மனத்துடனே நூலைக் கொடுத்தலாகும் என்று சொல்லுவர் புலவர். எ–று.

> சிறந்துழி என்பது சிறந்தபோது எனவும், சிறந்த தானத்தி லெனவும் பொருள் தந்து காலத்தையும் இடத்தையு முணர்த்தி நின்றது. கொள்வகை கிரகணசத்தி.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.: ஈதல்** – (ஆசிரியன் மாணாக்கர்க்கு நூலைக் கற்றுக்) கொடுத்தலினது, **இயல்பு** – முறைமையை, **இயம்புங்காலை** –

சொல்லும்போது, **காலமும் இடனும்** – (இருவர்க்கும் உரிய) காலத்தையும் இடத்தையும், **வாலிதின் நோக்கி** – செவ்வையாக ஆராய்ந்து பார்த்து, **சிறந்த உழி இருந்து** – மேம்பட்ட இடத்தில் இருந்து, **தன் தெய்வம் வாழ்த்தி** – தான் வழிபடுங் கடவுளைத் துதித்து, **உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து** – (தன்னாற்) பாடஞ் சொல்லப்படும் நூற்பொருளை(த் தன்) மனத்திற் பொருத்தமாக முன்னமே நிறைத்து வைத்துக்கொண்டு, **விரையான்** – விரைவுபடாமலும், **வெகுளான்** – கோபியாமலும், **விரும்பி** – விருப்பத்தோடு கூடி, **முகம் மலர்ந்து** –மலர்ந்த முகமுடையவனாய், **கொள்வோன் கொள் வகை அறிந்து** – கற்றுக் கொள்ளும் மாணாக்கன் (தன் மனத்திற்) கொள்ளுந் தன்மையை அறிந்து கொண்டு, **அவன் உளம்கொள** – அவன் மனத்தில் ஏற்றுக் கொள்ளும்படி, **கோட்டம் இல் மனத்தின்** – மாறுபாடில்லாத நன்மனத்துடனே, **நூல்** – நூற்பொருளை,**கொடுத்தல்** – கற்றுக் கொடுத்தலாம், **என்ப** – என்று சொல்வார், (அறிவுடையோர்) **எ – று.**

சிறந்துழி – விகாரம். கொள்வோன் கொள்வகை –
பாடங் கேட்பவனது அறிவின் திறம்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– ஈதல் இயல்பு இயம்புங் காலை** – பாடஞ் சொல்லுதலினது வரலாற்றைச் சொல்லும்போது, **காலமும் இடனும் வாலிதின் நோக்கி** – உரிய காலத்தையும் உரிய இடத்தையுந் தூயனவாகப் பார்த்து, **சிறந்துழி இருந்து** – சிறந்தவிடத்திருந்து, **தன் தெய்வம் வாழ்த்தி** – தான் வழிபடு கடவுளைத் துதித்து, **உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து** – பாடஞ் சொல்லப்படும் பொருளைத் தன் கருத்தின்கண் நிறைத்து, **விரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து** – விரையானாகியுங் கோபஞ் செய்யானாகியும் விருப்பத்தோடு கூடி முகமலர்ச்சியை யடைந்து, **கொள்வோன் கொள் வகை அறிந்து** – கேட்பவனுடைது கேட்கும் அறிவின் வகையை அறிந்து, **அவன் உளம் கொள** – அவனது மனம் ஏற்றுக்கொள்ள, **கோட்டம் இல் மனத்தின்** –மாறுபாடில்லாத மனத்துடனே, **நூல் கொடுததல் என்ப** – நூலைக் கொடுத்தலாகும் என்று சொல்லுவர் புலவர். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை:–** பாடஞ் சொல்லுதலினது வரலாற்றுறைச் சொல்லும்போது (உரிய) காலத்தையும் இடத்தையும் தூயனவாகப் பார்த்துச் சிறந்த இடத்திருந்து, தான் வழிபடு கடவுளை வாழ்த்துதல் செய்து பாடஞ்

சொல்லப்படும் பொருளைத் தன் கருத்தின்கண் நிறைத்து விரையானாகியும் கோபம் செய்யானாகியும் இச்சித்து, முகமலர்ச்சியை உடைந்து கேட்பவனது கேட்கும் அறிவின் வகையை உணர்ந்து )அவனது மனம் ஏற்றுக்கொள்ள, மாறுபாடில்லாத மனத்துடனே நூலைக்கொடுத்தலாகும் என்று சொல்லுவர் அறிவுடையோர், **எ–று.**

சிறந்துழி – விகாரம். கொடுத்தல் இங்கே அறிவித்தலின் மேல் நின்றது.

## கா.நமச்சிவாய முதலியார்

**ஈதல்**–பாடஞ் சொல்லுதலினது, **இயல்பு** – வரலாற்றை, **இயம்புங்காலை** – சொல்லும்போது, **காலமும்** – (உரிய) காலத்தையும், **இடனும்** – (உரிய) இடத்தையும், **வாலிதின்** – தூயதாக, **நோக்கி** – பார்த்து, **சிறந்த உழி இருந்து** – சிறந்த இடத்திருந்து, **தன் தெய்வம்** – தான்வழிபடுகடவுளை, **வாழ்த்தி** – வாழ்த்துதல் செய்து, **உரைக்கப்படும் பொருள்** – பாடஞ் சொல்லப்படும் பொருளை, **உள்ளத்து**– தன் கருத்தின்கண், **அமைத்து** – நிறைத்து, **விரையான்** – விரையானாகியும், **வெகுளான்** – கோபஞ் செய்யானாகியும், **விரும்பி** – இச்சித்து, **முகமலர்ந்து** – முகமலர்ச்சியை அடைந்து, **கொள்வோன்** – கேட்பவனது, **கொள்வகை** – கேட்கும் அறிவின் வகையை, **அறிந்து** – உணர்ந்து, **அவன் உளம்** – அவனது மனம், **கொள**– ஏற்றிக்கொள்ள, **கோட்டம் இல்** – மாறுபாடில்லாத, **மனத்தின்** – மனத்துடனே, **நூல்** – நூலை, **கொடுத்தல்** – கற்பித்தலாகும், **என்ப** – என்று சொல்லுவர் (புலவர்)

## மோசகு பொன்னையா

பாடஞ் சொல்லுதலின் வரலாறாவது, காலம், இடம் இவற்றைத் தூயனவாகத் தெரிந்து, அவை சிறக்க அமையின், தான் வழிபடு கடவுளைத் துதித்து, பாடஞ் சொல்லற்கு உரிய பொருளை மனத்தின்கண் நிறுத்தி, விரைவும், கோபமும் கொள்ளாமல், அகனமர்ந்து, முகமலர்ந்து, பாடங்கேட்பவனது தரமறிந்து, அவன் மனங்கொள்ளுமாறு, மாறுபாடில்லா மனத்துடன் நூல்கற்பித்தல் முறையாகும் எனப் புலவர் கூறுவர், **எ–று.**

## மாணாக்கர்

36. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

தன் மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள் நனி கொடுப்போன் வழிபடுவோனே
உரைகோளாளற்கு உரைப்பது நூலே.

ta<u>n</u> maka<u>n</u> āsā<u>n</u> maka<u>n</u>ē a<u>n</u>maka<u>n</u>
poru<u>l</u> na<u>n</u>i kotuppō<u>n</u> va<u>l</u>ipatuvō<u>n</u>ē
uraikō<u>l</u>ā<u>l</u>arku uraippatu nūlē.

### ஒப்புமைப் பகுதி

ஆரியன் திருமகன் ஐயுறல் கடிந்த
கூரிய முதன்மை மாணாக்கன் குலமகன்
தன்மகன் மன்மகன் மந்திரத் தலைவன்
நன்மகன் இருநிதி நனிதமி புரப்போன்
அருத்தியின் வழிபடுபவன் உரைநுழைந்துகொள்
கருத்தினன் இவர்கள் கற்பிக்கப் படுவோர்

(மாற.அலங்.:40)

### என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**Who are to be taught: six classes of persons**

Persons who are to be taught: a teacher should impart instruction to his own son; to his teacher's son; to the king's son; to him who pays well; to him who is likely to prove useful to himself; and to the talented (promising).

### மயிலை நாதர்

இ – ள்.: கற்பிக்கப்படு மாணாக்கராவாரிவர், எ – று.

### சங்கர நமச்சிவாயர்

எ – னின், நிறுத்த முறையானே மாணாக்கனது வரலாறு உணர் – ற்று.

இ – ள்.: இவ்வறுவர்க்கும் சொல்லப்படுவது நூல், எ – று.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், கற்பிக்கப்படுவோராகிய சீடராவார் இவரெனக் கூறுகின்றது.

**இ–ள்.: தன் மகன் ஆசான் மகனே** – தன் மகனுக்கும் ஆசான் மகனுக்கும், **மன் மகன் பொருள் நனி கொடுப்போன்** – மன் மகனுக்கும் பொருள் கொடுப்போனுக்கும், **வழிபடுவோனே உரைகோளாளற்கு** – வழிபடுவோர்க்கும் உரைகோளாளர்க்கும், **உரைப்பது நூலே** – இவ் வறுவர்க்கும் நூல் உரைக்க வேண்டுமுறையாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** நிறுத்த முறையாற் பாடங் கேட்கு மாணாக்கனது வரலாற்றைச் சொல்லுகின்றது.

**இ–ள்.: தன்மகன்**–தன் புதல்வனுக்கும், **ஆசான் மகன்**– தன்னாசிரியன் புதல்வனுக்கும், **மன் மகன்** – அரசன் 'புதல்வனுக்கும், **பொருணனி கொடுப்போன்** – பொருளை மிகுதியாகக் கொடுப்போனுக்கும், **வழிபடுவோன்** – வழிபாடு செய்வோனுக்கும், **உரைகேளாளற்கு** – தன்னாற் சொல்லப்பட்ட உரையை விரைவிலே கற்கும் அறிவுடையோனுக்கும், **உரைப்பது**–சொல்லப்படுவது, **நூல்**–நூலாகும், **எ – று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்தமுறையே மாணாக்கன் வரலாறுணர்த்துகின்றது.

**இ–ள்.: தன் மகன்** – தன்மகனுக்கும், **ஆசான் மகன்**–தன் ஆசிரியன் மகனுக்கும், **மன்மகன்** – அரசன் மகனுக்கும், **பொருணனி கொடுப்போன்** – பொருளை மிகுதியாகக் கொடுப்பவனுக்கும், **வழிபடுவோன்** – வழிபாடு செய்பவனுக்கும், **உரை கோளாளற்கு** – தான் சொல்லும் உரை முழுமையையு மனத்துட் கொள்ள வல்ல அறிவாளனுக்கும், **உரைப்பது நூல்**– சொல்லப்படுவது நூல், **எ–று.**

> தன்மகன் முதலிய நால்வர்க்கும் வழிபாடின்றியு முரைக்க வேண்டு மென்பார் அவரை முன்வைத்துரை கோளாளனை வழிபடுவோனைச் சார வைத்தார்; வழிபடுதல் அவனுக்கும் வேண்டு மென்பதறிவித்தற்கு.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– தன் மகன்** – தன் மகனுக்கும், **ஆசான்மகன்** – தன் ஆசிரியன் மகனுக்கும், **மன்மகன்** – அரசன் மகனுக்கும், **பொருள் நனி**

**கொடுப்போன்** – மிகுதியாகப் பொருளைக் கொடுப்பவனுக்கும், **வழிபடுவோன்** – தன்னை வழிபாடு செய்பவனுக்கும், **உரை கோளாளற்கு** – (தான் சொல்லும்) நூற்பொருளை விரைவிலே அறிந்து கொள்பவனுக்கும், **நூல் உரைப்பது** – நூலைக் கற்பித்தல் (தகும்.)

**குறிப்பு :–**

தன் மகன் முதலிய நால்வருக்கும் அவ்விடத்து வழிபாடு கருதாமலே கற்பிக்க வேண்டுமென்பது தோன்ற அந்நால்வரையும் முன்னே கூறி, உரைகோளாளனும் வழிபாடு செய்ய வேண்டுமென்றற்கு அவனை வழிபடு வோனோடு சேர்த்துக் கூறினார்.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: தன் மகன்** – தன் புதல்வனுக்கும், **ஆசான் மகன்** – தன்னாசிரியன் புதல்வனுக்கும், **மன் மகன்** – அரசன் புதல்வனுக்கும், **பொருள் நனி கொடுப்போன்** – பொருளை மிகுதியாகக் கொடுப்போனுக்கும், **வழிபடுவோன்** – வழிபாடு செய்வோனுக்கும், **உரைகோளாளற்கு** – தன்னாற் சொல்லப்பட்ட உரையை விரைவிலே கற்கும் அறிவுடையோனுக்கும், **உரைப்பது நூல்** – சொல்லப்படுவது நூலாகும், எ – று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். தன் மகன்** – தன்புதல்வனுக்கும், – **ஆசான் மகன்** – தன்னாசிரியன் புதல்வனுக்கும், – **மன் மகன்** – அரசன் புதல்வனுக்கும், – **பொருள் நனி கொடுப்போன்** – பொருளை மிகுதியாகக் கொடுப்போனுக்கும், – **வழிபடுவோன்** – வழிபாடு செய்வோனுக்கும், – **உரை கோளாளற்கு** – தன்னாற் சொல்லப்பட்ட உரையை விரைவிலே கற்கும் அறிவுடையோனுக்கும், – **உரைப்பது நூல்** – சொல்லப்படுவது நூலாகும். எ–று.

அரசனது மகன் கல்லாதவனாயிருப்பின் இராச்சிய நிலையடைந்தபோது இதாகிதமறிந்து உலகினரைக் காக்கமாட்டாது வருத்துவனாதலின் அவனுக்குக் கற்பித்தல் அத்தியாவசியமாம். போதிக்கு நூற்கருத் தெல்லாம் விரைவிலுணரு முரைகோளாளன் பெரும் புலவனாகி அநேக நூல்களையுமுரைகளையு மியற்றவு மாணாக்கர்க்குப் போதிக்கவும் வல்லுநனாயுலகிற்கு மிகப் பயன்படுவானாதலின் உரைகோளாளற் குணர்த்தலு மவசியமேயாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.:** **தன் மகன்** – தனது புத்திரனும், **ஆசான் மகன்** – தனது ஆசிரியனது புத்திரனும், **மன் மகன்** – அரசனது புத்திரனும், **பொருள் நனி கொடுப்போன்** – செல்வத்தை மிகுதியாகக் கொடுப்பவனும், **வழிபடுவோன்** –(தனக்கு) வழிபாடு செய்பவனும், **உரை கோளாளற்கு** – (தான் சொல்லும்) உரையை (விரைவிலே) மனத்திற் கொள்ளும் அறிவுடையவனும் ஆகிய இவர்கட்கு, **நூல் உரைப்பது** – நூல் சொல்லத் தக்கதாம்; **எ – று.**

தன்மகன் முதலிய நால்வர்க்கும் வழிபாடின்றியும் ரைக்கவேண்டுமென்பார் அவரை முன்வைத்து, உரை கோளாளனும் வழிபடுதல் வேண்டுமென்று அறிவித்தற்கு அவனை வழிபடுவோனுக்குப் பின்னே வைத்தார்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–** **தன் மகன்** – தன் புதல்வனுக்கும், **ஆசான் மகன்** – தன் ஆசிரியன் புதல்வனுக்கும், **மன் மகன்** – அரசன் புதல்வனுக்கும், **பொருள் நனி கொடுப்போன்** – பொருளை மிகுதியாகக் கொடுப்போனுக்கும், **வழிபடுவோன்** – வழிபாடு செய்வோனுக்கும், **உரைகோளாளற்கு** – தன்னாற்சொல்லப்பட்ட உரையை விரைவிலே கற்கும் அறிவுடையோனுக்கும், **உரைப்பது நூல்** – சொல்லப்படுவது நூலாகும். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** தன் புதல்வனுக்கும், தன்னாசிரியன் புதல்வனுக்கும், அரசன் புதல்வனுக்கும், பொருளை மிகுதியாகக் கொடுப்பபோனுக்கும், வழிபாடு செய்வோனுக்கும், (தன்னாற் சொல்லப்பட்ட) உரையை விரைவிலேகற்கும் அறிவுடையோனுக்கும் சொல்லப்படுவது நூலாகும், எ–று.

தன்மகன் முதலிய நால்வர்க்கும் வழிபாடின்றியும் உரைக்க வேண்டுமென்பார், அவரை முன்வைத்து, உரைகோளா ளனை வழிபடுவோனைச் சாரவைத்தார்,வழிபடுதல் அவனுக்கும் வேண்டு மென்பதறிவித்தற்கு.

## கா.நமச்சிவாய முதலியார்

**தன்மகன்** – தன் புதல்வனுக்கும், **ஆசான் மகன்** – தன்னாசிரியன் புதல்வனுக்கும், **மன்மகன்** – அரசன் புதல்வனுக்கும், **பொருள் நனி கொடுப்போன்** – பொருளை மிகுதியாகக் கொடுப்போனுக்கும், **வழிபடுவோன்** – வழிபாடு செய்வோனுக்கும், **உரைகோள் ஆளற்கு**– (தன்னாற் சொல்லப்பட்ட) உரையை விரைவிலே கற்கும் அறிவுடையோனுக்கும், **நூல் உரைப்பது** – நூல் சொல்லத்தக்க தாகும்.

## மோசசு பொன்னையா

தன் மகன், தன் ஆசிரியர் மகன், அரசன் மகன், பொருள் மிகக் கொடுப்போன், வழிபாடு செய்வோன், உரைகேட்டு உணருந்தர முள்ளோன் இவர்க்கு நூலைக் கற்பிக்க, எ–று,

**(36)**

*மாணாக்கர் வகை*

**37.** **அன்ன மாவே மண்ணொடு கிளியே**
**இல்லிக் குடமா டெருமை நெய்யரி**
**அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.**

**அன்னம் ஆவே மண் ஒடு கிளியே**
**இல்லிக் குடம் மாடு எருமை நெய்யரி**
**அன்னர் தலை இடை கடை மாணாக்கர்.**

annam āvē maṉ otu kiḻiyē
illikkutam mātu erumai neyyari
annar ṭalai itai katai māṇākkar.

## ஒப்புமைப் பகுதி

**பளிங்குடன் ஓதிமம் பரவை கொண்மூ வெனத்**
**தெளிந்த நுண்ணுணர்வு உறும் தெள்ளியோரே**

**(மாற.அலங்.:41)**

**அழுக்கு இன்றாதல் அடுத்தவை தனதாக்**
**கோடலென் றிரண்டும் பளிங்கின் குணமே**

**(மாற.அலங்.:42)**

**நீர்தெரித் தமிர்துணும் நீர்மையி னோதிமம்**
**ஓரிரு பான்மைக் குவமைய தாகும்**

**(மாற.அலங்.:43)**

**பகிரதி முதலிய பன்னதி உட்புக**
**உடுதல் இன்றாய்த் தன்னுட் கொளு முவாவே**

**(மாற.அலங்.:44)**

**படிந்துவ ரறுத்து ணப்படுபுனல் யாண்டும்**
**படர்ந்து பஃறுளியில் பயன்தரு முகிலே**

**(மாற.அலங்.:45)**

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

### Good, middling and bad scholars: eight comparisons

There are three classes of scholars or students; the good, the middling and the bad; the good are compared to a swan, or a cow; the middling are compared to the ground , or a parrot; and the bad are compared to a pot full of holes, a goat, a buffalo, or the web of a cocoanut or palmyra tree.

## மயிலை நாதர்

**இ – ள்.:** அன்னமும் பசுவும் போல்வார் தலை மாணாக்கர்; [1]மண்ணும் கிளியும் போல்வார் இடை மாணாக்கர்; இல்லிக்குடம், ஆடு, எருமை, பன்னாடை போல்வார் கடை மாணாக்கர், எ – று.

இவரியல்பு விரித்துரைத்துக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ – **னின்,** இதுவும் அது.

**இ – ள்.:** மேற்கூறிய அறுவருள், அன்னமும் பசுவும் போல்வார் தலைமாணாக்கர்; மண்ணும் கிளியும் போல்வார் இடை மாணாக்கர்; இல்லிக்குடமும், ஆடும், எருமையும், நெய்யரியும் போல்வார் கடைமாணாக்கர், எ – று.

---

பாட **வேறுபாடு.:–**

1. பசுமண்ணும்

இவ்வுவமைத் திறமும் பொருட்டிறமும் விரித்துரைத்துக் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** இவர் தன்மை மூன்று வகைப்படுமெனக் கூறுகின்றது.

**இ–ள்.: அன்னம் ஆவே** – அன்னமும் ஆவும் போல்வார் தலை மாணாக்கர், **மண்ணொடு கிளியே** – மண்ணும் கிளியும் போல்வார் இடை மாணாக்கர், **இல்லிக் குடம் ஆடு எருமை நெய்யரி** – இல்லிக் குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும் போல்வார் கடை மாணாக்கர், **அன்னர்** – போல்வார் என்பதனை எல்லாவற்றோடும் கூட்டுக, **தலை இடை கடை மாணாக்கர்** – தலை மாணாக்கர் இடை மாணாக்கர் கடை மாணாக்கர் என முன்னிறுத்திய முப்பகுதியினும் கூட்டுக.

> பாலும் நீரும் பிரிப்பது அன்னம்; நீர்த்துறை சென்று நீர் கலக்காமல் அருந்துவது பசு; குசவன் வனைந்த வடிவுப் பண்பேயன்றித் தாமொரு வடிவுப் பண்பு கொள்ளாதது மண்;
>
> பன்னாளும் பயிற்றிய சொல்லே யன்றி வேறொன்றும் கூறாதது கிளி; சொரிந்த நீரையெல்லாம் கீழ்ச் சொரிந்துவிடல் இல்லிக்குடம்;
>
> ஓரிடத்தில் வயிறு நிறைக்கும் களைகள் இருக்கப் பலவிடத்திற் களையினும் சென்று வயிறு நிறைவு படாதது ஆடு;
>
> நீர்த்துறை கடக்க விழுந்து வெள்ளிய நீரைக் கலக்கி அருந்துவது எருமை;
>
> நல்ல நெய்யைப் புறத்திட்டு அழுக்கை ஏற்றுக் கொள்வது நெய்யரி.
>
> நல்லவை அகத்திட்டு நவை புறத்திடுவது நெய்யரி
> மாண்பென நேர்ந்தன கொளலே எனத் தலை மாணாக்கர்
> என்றும் சொல்வர்.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ – ள்.: அன்னம்** – அன்னத்தையும், **ஆ** – பசுவையும், (அன்னர்) – போல்வார், **தலை (மாணாக்கர்)** –முதன் மாணாக்கர், **மண்**–மண்ணையும், **கிளி**–கிளியையும், (அன்னர்) – போல்வார், **இடை** (மாணாக்கர்) – நடுமாணாக்கர், **இல்லிக்குடம்** – பொள்ளற் குடத்தையும், **ஆடு**–ஆட்டையும்,

**எருமை** –எருமையையும், **நெய்யரி** – பன்னாடையையும், **அன்னர்** – போல்வார், **கடைமாணாக்கர்** – கடை மாணாக்கர், எ – று.

அன்னம், பாலையும் நீரையும் வேறுபிரித்துப் பாலை மாத்திரங் குடிதல் போல, முதன்மாணாக்கர் குணத்தையுங் குற்றத்தையும் வேறுபிரித்துக் குணத்தை மாத்திரங் கொள்ளுதலாலும்; பசு, மிகுந்த புல்லை யுடைய விடத்தைக் கண்டால் அப் புல்லை வயிறு நிறைய மேய்ந்து பின்போரிடத்திற் போயிருந்து சிறிதுசிறிதாக வாயில் வருவித்துக் கொண்டு மென்றுதின்றல் போல, முதன் மாணாக்கர் மிகுந்த கல்வியுடைய ஆசிரியனைக் கண்டால் அக்கல்வியைத் தன்னுள்ள நிறையக் கேட்டுக் கொண்டு பின்போரி டத்துப் போயிருந்து சிறிது சிறிதாக நினைவிற் கொண்டுவந்து சிந்தித்தலாலும், அவருக்கு அவ் விரண்டும் உபமானமாதலறிக.

மண் உழவர் வருந்திப் பயிர்செய்த முயற்சி யளவு விளைவைத் தன்கட் காட்டல் போல, இடை மாணாக்கர் ஆசிரியன் வருந்திக் கற்பிக்கு முயற்சியளவு கல்வியறிவைத் தன்கட் காட்டுதலாலும்; கிளி, தனக்குக் கற்பித்த சொல்லை யல்லாமல் வேறொன்றையுஞ் சொல்ல மாட்டாமை போல இடை மாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளை **யல்லாமல் வேறொரு** நூற் பொருளையுஞ் சொல்ல மாட்டாமையாலும் அவருக்கு அவ் விரண்டும் உபமானமாதலறிக.

பொள்ளற்குடம் நீரை வார்க்குந்தோறும் ஒழுக விடுதல் போலக் கடைமாணாக்கர் நூற்பொருளைக் கற்பிக்குந் தோறும் மறந்து விடுதலாலும்;

ஆடு, ஒருசெடியிலே தழை நிறைந்திருந்தாலும் வயிறு நிறைய மேயாமற் செடிதோறும் போய் மேய்தல் போலக் கடைமாணாக்கார் ஓராசிரியனிடத்து மிகுந்த கல்வி யிருந்தாலும் புலமை நிறையக் கற்றுக்கொள்ளாமற் பலரிடத்திலும் போய்ப்பாடங் கேட்கையாலும்;

எருமை, குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல் போலக், கடைமாணாக்கர் ஆசிரியனை வருத்திப் பாடங் கேட்கையாலும்;

பன்னாடை, தேன் முதலியவற்றைக் கீழேவிட்டு அவற்றி லுள்ள குற்றங்களைப் பற்றிக் கொள்ளுதல் போலக் கடை மாணாக்கர் நல்லபொருளை மறந்துவிட்டுத் தீயபொருளைச்

சிந்தித்துப் பற்றிக் கொள்ளுதலாலும், அவருக்கு இந்நான்கும் உபமானமாதலறிக.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: அன்னம் ஆ அன்னர்**–அன்னப் பட்சியையும் பசுவையும் போல்வார், **தலை மாணாக்கர்**–முதல் மாணாக்கராம், **மண்ணொடு கிளி அன்னர் இடை மாணாக்கர்** – நிலத்தையுங் கிளியையும் போல்வார் இடை மாணாக்கராம், **இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி அன்னர் கடை மாணாக்கர்**– இல்லிக்குடத்தையும் ஆட்டையும் எருமையையும் நெய்யரி பன்னாடையையும் போல்வார் கடை மாணாக்கராம், **எ – று.**

இவற்றுள், அன்னமாவது பாலையும் நீரையும் வேறுபிரித்துப் பாலை மாத்திர முண்பது போலச் சாரத்தை யும் அசாரத்தையும் பிரித்துச் சாரத்தையே யுட்கொள்ளு தலாலும்,

பசுவானது மேய்தலும் மெல்லுதலுமே முக்கியமான தொழிலாய்க் கொண்டது போல இடையீடின்றிப் பாடங் கேட்டலுஞ் சிந்தித்தலுமே முக்கியமான தொழிலாய்க் கொள்ளுதலாலும், இவ்விரண்டும் முதல் மாணாக்கர்க்கு உவமையாயின.

நிலமானது முயற்சி யளவிற் பயன் தருவது போல ஆசிரியன் கற்பிக்கும் முயற்சி யளவிற்குத் தக்க கல்விப் பயன் விளைதற்கு இடமாகியதினாலும்,

கிளியானது ஏறாமற் குறையாமற் சொல்வித்தபடி சொல்வது போல, ஆசிரியன் கற்பித்தபடியே யறிந்து சொல்லுதலாலும், இவ் விரண்டும் இடை மாணாக்கர்க்கு உவமையாயின.

இல்லிக்குடம் – நீர் வார்க்குந்தோறுங் கீழிழிந்து நிரம்பாமை போல, ஆசிரியன் கற்பித்த நூற்பொருளைத் தன்னுளம் பற்றாம லொழுகவிடலாலும், ஆடானது ஒரு செடியிலேதானே தன்வயிறு நிரம்பும்படி தழைகளிருப்பினும் அதைச் சிறிது கடித்த மாத்திரமே விட்டுக் காடெல்லாஞ் சொன்று சென்று மேயப்புகுதல் போல, ஓராசிரியனை வழிபட்டு ஒருநூலை முடியக் கற்றால் அதினாலே புலமைத் திறம் நிரம்பும்படியா யிருக்க அதைச் சிறிது கற்ற மாத்திர மேகைவிட்டுப் பற் பலரிடத்திற் சென்று பற்பல நூல்களைக் கற்கப் புகுதலாலும்,

எருமையானது, சேற்றின் மேல்நின்ற நீரை விழுந்து கலக்கி அருந்துதல் போல, ஆசிரியனது நன்மனத்தைக் கலங்கச் செய்துபின்பு அவர் வெறுத்துச் சொன்னதைக் கேட்டுப் போவதினாலும்,

நெய்யரி பன்னாடையானது, நெய்யை யுருக்கி வடிகட்டுதற் பொருட்டு – இதன்மேல் விடும் போது, சாரமா நெய்யை யொழுக விட்டுக் கசட்டைப் பற்றிக் கொள்வது போல் ஆசிரிய னுரைத்த நற்பொருள்களை யெல்லா மொழுக விட்டுத் தீப் பொருளைப் பற்றிக் கொளவதினாலும், இந்த நான்குங் கடைமாணாக்கர்க்கு உவமையாயின வெனக் காண்க.

இனி இந் நெய்யரியை நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது, நெய்யரி மாண் பென நினைதல் வேண்டும், எனச் சூத்திரஞ் செய்து முதல் மாணாக்கர்க்கு உவமையாக்குவாருமுளர். அன்னர் என்னும் குறிப்புமுற்றை முறையே முதலிடை கடை யென்னு மூன்றிடத்துங் கூட்டி முடித்துக் கொள்க. மாணாக்கருள், அன்னமாவே யன்னர், மண்ணொடு கிளியே யன்னர், எனப் பிரித்தலால் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தன. நெய்யரி யென்புழி ஏகாரந் தொக்கு நின்றது.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– அன்னம் ஆ** – அன்னத்தையும் பசுவையும், (அன்னர்) – போல்பவர், **தலை** (மாணாக்கர்) – உத்தம மாணாக்கராவர் ; **மண்ணொடு கிளி** (அன்னர்) – நிலத்தையும் கிளியையும் போல்பவர், **இடை** (மாணாக்கர்) – மத்திம மாணாக்கராவர் ; **இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி அன்னர்** – பொள்ளற்குடத்தையும் ஆட்டையும் எருமையையும் பன்னாடையையும் போல்பவர்,**கடைமாணாக்கர்** – அதமமாணாக்கராவர்.

**குறிப்பு :–**

அன்னம் நீர்கலந்த பாலை வேறுபிரித்துப் பாலை உட்கொண்டு நீரை நீக்குதல்போல, உத்தம மாணாக்கர் குணதோஷங்களை வேறுபிரித்துக் குணத்தை உட்கொண்டு தோஷத்தை நீக்கியும், பசு மிக்க புல் உள்ள இடத்தைக்கண்டு அதனைவயிறு நிரம்பமேய்ந்து பின்பு ஓரிடத்திருந்து சிறிதுசிறிதாக வாயில் வருவித்துக்கொண்டு அசைவுபோட்டு உட்கொள்ளுதல் போல, இவர்கள் மிக்க

கல்வியுள்ள ஆசிரியனைக் கண்டு தம்முள்ளம் நிரம்பக் கற்று ஓரிடத்தில் தனித்திருந்து கற்ற விஷயங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக நினைவில் வருவித்துக் கொண்டும் இடைவிடாது சிந்தித்துத் தெரிந்து கொள்வர் எனவும்,

நிலம் உழவர்செய்யும் முயற்சிக்குத் தக்கபடி பயன்தருதல் போல, மத்திம மாணாக்கர் ஆசிரியன் கற்பிக்கக் கொண்ட முயற்சி யளவினதாகவே கல்வியறிவைக் காட்டியும், கிளி தனக்குக் கற்பித்த சொல்லையன்றி மற்றொன்றையும் சொல்லமாட்டாதது போல, ஆசிரியர் தமக்குக் கற்பித்த நூற்பொருளையன்றி வேறொரு நூற்பொருளையும் சொல்லமாட்டாமலும் கற்றபடியே சொல்வர் எனவும்,

அடியில் பொத்தலுடைய குடம் நீரை வார்க்கவார்க்க ஒழுகவிட்டு ஒருபொழுதும் நிரம்பாததுபோல, அதம மாணாக்கர் ஆசிரியர் தமக்குக் கற்பிக்குந்தோறும் நூற்பொருளை மறந்துவிட்டு ஒருபொழுதும் தம்முட்கல்வி நிரம்பாமலும், ஆடு ஒரு செடியில் தழை நிறைந்திருந்தாலும் அதனை வயிறுநிரம்ப மேயாமல் பல செடிகளிலும் சென்று சிறிது சிறிது மேய்தல் போல இவர்கள் ஓராசிரியரிடத்துக் கல்வி நிறைந்திருப்பினும் அதனைத் தம் உள்ளம் நிரம்பக் கற்காமல் பலரிடத்துஞ் சென்று சிறிதுசிறிதாகக் கற்றும்,

எருமை தெளிந்த நீரைக் கலக்கிக் குடித்தல்போல, அதமமாணாக்கர் நல்லாசிரியர் மனத்தை வருத்திப் பாடங் கேட்டும், பன்னாடை தன்னிடம் வார்க்கும் தேன் முதலிய வற்றை ஒழுகவிட்டு அவற்றிலுள்ள அழுக்கைப் பற்றிக் கொள்ளுதல் போல, இவர்களும் ஆசிரியர் தமக்குச் சொன்ன நூற்பொருளின் சாரத்தை மறந்துவிட்டு அசாரத்தை மாத்திரம் பற்றியுங் கொள்வர் எனவும் உணர்க.

இனி, இந்நெய்யரியை, "நல்லவையகத்திட்டு நவைபுறத் திடுவது – நெய்யரி மாண்பெனநினைதல் வேண்டும்" என்னுஞ் சூத்திரங்கொண்டு முதன் மாணாக்கர்க்கு உவமையாக்குவர் சிலர்.

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.:– அன்னம் ஆ (அன்னர்) தலை (மாணாக்கர்)** – அன்னத்தையும் பசுவையும் போல்வார் முதன் மாணாக்கர், **மண் கிளி (அன்னர்) இடை (மாணாக்கர்)** – மண்ணையுங் கிளியையும்

போல்வார் நடு மாணாக்கர், **இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி அன்னர் கடை மாணாக்கர்** – பொள்ளற்குடத்தையும் ஆட்டையும் எருமையையும் பன்னாடையையும் போல்வார் கடைமாணக்கர், **எ – று.**

அன்னம் பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலை மாத்திரங் குடித்தல் போல, முதன் மாணாக்கர் குணத்தையுங் குற்றத்தையும் வேறு பிரித்துக் குணத்தை மாத்திரம் கொள்ளுதலாலும்; பசு மிகுந்த புல்லை யுடைய விடத்தைக் கண்டால் அப்புல்லை வயிறு நிறைய மேய்ந்து பின்போரிடத்திற் போயிருந்து சிறிது சிறிதாக வாயில் வருவித்துக் கொண்டு மென்று தின்றல் போல, முதன் மாணாக்கர் மிகுந்த கல்வியுடைய ஆசிரியனைக் கண்டால் அக் கல்வியைத் தன்னுள்ள நிறையக் கேட்டுக்கொண்டு பின்போரிடத்துப் போயிருந்து சிறிது சிறிதாக நினைவிற் கொண்டு வந்து சிந்தித்தலாலும், அவருக்கு அவ் விரண்டும் உவமானமாதலறிக.

மண் உழவர் வருந்திப் பயிர்செய்யு முயற்சி யளவினதாகிய விளைவைத் தன்கட் காட்டல்போல, இடை மாணாக்கர் ஆசிரியன் வருந்திக் கற்பிக்கும் முயற்சி யளவினதாகிய கல்வியறிவைத் தங்கட் காட்டுதலாலும்; கிளி தனக்குக் கற்பித்த சொல்லை யன்றி வேறொன்றையுஞ் சொல்ல மாட்டாமை போல, இடைமாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற் பொருளை யன்றி வேறொரு நூற் பொருளையுஞ் சொல்லமாட்டாமையாலும், அவருக்கு அவ் விரண்டும் உவமானமாதலறிக.

பொள்ளற்குடம் நீரை வார்க்குந் தோறும் ஒழுக விடுதல் போலக் கடைமாணாக்கர் நூற் பொருளைக் கற்பிக்குந் தோறும் மறந்துவிடுதலாலும்; ஆடு, ஒருசெடியிலே தழை நிறைந் திருந்தாலும் வயிறுநிறைய மேயாது செடிதோறும் போய் மேய்தல் போலக் கடைமாணாக்கர் ஓராசிரியனிடத்து மிகுந்த கல்வி யிருந்தாலும் புலமை நிறையக் கற்றுக் கொள்ளாது பலரிடத்தும் போய்ப் பாடங் கேட்டலாலும்; எருமை, குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல்போலக் கடைமாணக்கர் ஆசிரியனை வருத்திப் பாடங் கேட்டலாலும்; பன்னாடை தேன் முதலியவற்றைக் கீழேவிட்டு அவற்றி லுள்ள குற்றங்களைப் பற்றிக் கொள்ளுதல் போலக் கடை மாணாக்கர் நல்ல பொருளை மறந்து விட்டுத் தீய

பொருளைச் சிந்தித்துப் பற்றிக் கொள்ளுதலாலும், அவருக்கு அந் நான்கும் உவமானமாதலறிக.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ-ள். அன்னம் ஆ** (அன்னர்) **தலை** (மாணக்கர்) – அன்னப் பக்ஷியையும் பசுவையும் போல்வார் முதன் மாணாக்கராம், – **மண்ணொடு கிளியே** (அன்னர்) **இடைமாணாக்கர்** – நிலத்தையும் கிளியையும் போல்வார் இடைமாணாக்கராம், **இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி அன்னர் கடைமாணாக்கர்** – பொள்ளற்குடத்தையும் ஆட்டையும் எருமையையும் பன்னாடையையும் போல்வார் கடைமாணாக்கராம். **எ-று.**

அன்னம் பாலையு நீரையும் வேறு பிரித்துப் பாலை மாத்திரம் உண்பதுபோல முதன் மாணாக்கர் சாரத்தையும் அசாரத்தையும் வேறு பிரித்துச் சாரத்தை மாத்திரம் உட்கொள்ளுதலாலும், பசு மிகுந்த புல்லையுடைய இடத்தைக் கண்டு புல்லை வயிறுநிறைய மேய்ந்து பின்பு ஓரிடத்திற்போய்த் தங்கிச் சிறிது சிறிதாக மீட்டு வாயில் வருவித்துக் கொண்டு மென்று தின்று இப்படியே நாடோறும் மேய்தலும் மெல்லுதலுந் தனக்கு முக்கியமான தொழிலாய்க் கொண்டது போல, முதன் மாணாக்கர் மிகுகல்வி யுணர்வுடைய ஆசிரியனைக் கண்டால் அக்கல்வியைத் தமதுளங்கொளக் கேட்டுக் கொண்டு பின்போரிடத்துப் போயிருந்து பகுதி பகுதியாக மீட்டுஞ் சிந்தித்துத் தெளிந்து இவ்வாறே நாடோறும் பாடங்கேட்டலு மீட்டுஞ் சிந்தித்துத் தெளிதலுமே முக்கிய முயற்சியாய்க் கொள்ளுதலால் அம்முதன்மாணாக்கருக்கு அன்னமும் ஆவும் உவமானமா தலறிக.

நிலம் உழவர் வருந்திப் பயிர்செய்யு முயற்சியளவிற் பயன்தருதல்போல இடைமாணாக்கர் ஆசிரியன் கற்பிக்கும் முயற்சியளவிற்குத் தக்க கல்விப் பயன் விளைதற்கு இடமாயிருத்தலாலும், கிளி தனக்குக் கற்பித்த சொல்லையன்றி மேற்பட வேறொன்றையுஞ் சொல்ல மாட்டாமைபோல இடை மாணாக்கர் தமக்கு ஆசிரியன் கற்பித்த நூற்பொருளளவை யன்றிக் கூட்டியுணர்ந்து சொல்லமாட்டாமையாலும் அவருக்கு அவ்விரண்டும் உவமானமாதலறிக.

இல்லிக்குடம் நீர்வார்க்கும் மிகுதியும் புறத்தொழுகி நிரம்பாமைபோல, கடைமாணாக்கர் ஆசிரியன் கற்பித்த

நூற்பொருளை யுள்ளத்துக் கொள்ளாது மிகுதியு மறந்து விடுதலாலும், ஆடானது ஒரு செடியிலே தன் வயிறு நிரம்பமேயும்படி தழைகளிருப்பினும், அதைச் சிறிதுகடித்த மாத்திரமே விட்டுப் பலசெடிகளினுஞ் சென்று சென்று மேயப்புகுதல்போல, ஓராசிரியரிடத்து மிகுந்த கல்வி யிருக்கவும் புலமைநிறையக் கற்றுக் கொள்ளாது ஒரு நூலைச் சிறிது கற்றமாத்திரத் தேகை விட்டுப் பற்பலரிடத்துஞ் சென்று பல நூல்களையும் கற்கப் புகுதலாலும், எருமையானது குளத்திலே சேற்றின்மேல் நின்ற நீரைக் கலக்கிப் பருகுதல் போலக் கடைமாணாக்கர் ஆசிரியனது நன்மனதைக் கலங்கச் செய்து பின் அவர் வெறுத்துச் சொன்னதைக் கேட்டுப் போதலாலும், பன்னாடையானது நெய், தேன் முதலியனவற்றை வடித்தற் பொருட்டு மேல் விடும்போது சாரத்தை ஒழுகவிட்டு அசாரமாகிய கசட்டைத் தன்னிடந் தங்கப் பெற்றுக் கொள்ளுதல் போல, ஆசிரியன் தெரித்தெடுந் துரைத்த நற்பொருளை மறந்துவிட்டுத் தீப்பொருளைப் பற்றிக் கொள்ளுவதினாலும் இந்நான்கும் அக் கடைமாணாக் கருக்கு உவமானமாதலறிக.

இங்கே இல்லிக்குட மென்றது பக்கத்திற் பொள்ளலுடைய குடத்தை, நிறைய வார்க்கப்பட்ட நீரில் ஒருபங்கைத் தன்னிடத்தே வைத்துக் கொண்டு மற்றதை ஒழுகவிட்ட நீர்க்குடம் போல ஆசிரியன் பூரணமாக நூற் பொருள்களைக் கற்பித்தபோதும் சிலபொருளை உள்ளத்திற் பற்றிக்கொண்டு அநேகபொருளை மறந்து விடுதல் என்பது அவ்வுவமையாற் பெறப்படும் விளக்கம்.

இவ்வாறன்றி அடியில் இல்லியை யுடையகுடமென்று கொள்ளின் அதில் வார்த்த நீர் முழுவதுமொழுகி வெறுங்குடமாய்விடுவது போல ஆசிரியன் போதித்த நூற் பொருண் முழுவது மறந்து மாணக்கண் கல்லாதவனோ டொப்பானாதலின் அவன் கற்கு மாணாக்கனாகக் கொள்ளப்படானென்று தாற்பரியமாகும். ஆகவே மாணக்கரென் றெடுத்துரைக்கப்பட்டவர்க்கு உவமையாகக் கூறியது குற்றமென்று விபரீதார்த்தமாகு மாதலின் அது பொருந்தாது.

உத்தமர், மத்திமர், அதமரென மாணாக்கரில் மூன்றுவகை யுண்டென்றும், இம்மூவகையினரும் (கற்றதேர்ச்சி) அதிகமும், குறைவும், அற்பமுமாக உடையரன்றிப்

பிற்சூத்திரத்திற் குறிக்கப்படுவோர் போல மாணாக்கராகாத வரென்று கருதலாகாது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ – ள்.: அன்னம் ஆவே** – அன்னப் பறவையும் பசுவும் என்னும் இரண்டையும், **மண்ணொடு கிளியே** – நிலமும் கிளியும் என்னும் இரண்டையும், **இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி** – சில்லிக்குடமும் ஆடும் எருமையும் பன்னாடையும் என்னும் நான்கையும், **அன்னர் – ஒப்பவர், தலை இடை கடைமாணாக்கர்** – (முறையே) உத்தம மாணாக்கரும் மத்திம மாணாக்கரும் அதம மாணாக்கருமாவர்; **எ–று.**

இது, முறைநிரனிறைப் பொருள்கோள்.

இவற்றுள், அன்னம், பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலை மாத்திரம் உட்கொண்டு நீரை நீக்கிவிடுதல் போல முதல் மாணாக்கர் சாரத்தையும் அசாரத்தையும் வேறுபிரித்துச் சாரத்தை உட்கொண்டு அசாரத்தை விலக்கி விடுதலாலும்; பசு மிக்க புல்லுள்ள இடத்தைக் கண்டால் அப்புல்லை வயிறு நிரம்ப மேய்ந்து பின்பு ஓரிடத்தில் இருந்து சிறிதுசிறிதாக அதனை வாயில் வருவித்துக் கொண்டு மென்று தின்று ஜீர்ணப்படுத்துதல் போல முதல்மாணாக்கர் மிக்க கல்வியுள்ள ஆசிரியனைக் கண்டால் அக்கல்வியை உள்ளம் நிரம்பக் கேட்டு உட்கொண்டு பின்பு ஓரிடத்தில் இருந்து அதனைச் சிறிதுசிறிதாக நினைவிற் கொண்டுவந்து சிந்தித்துத் தெளிதலாலும்; அவர்க்கு இவ் விரண்டும் உவமையாயின. பசுவுக்குப் புல்மேய்தலும் அசைவு போட்டு மெல்லுதலுமே முக்கியமான தொழில் களாதல் போல, இடைவிடாமற் பாடங்கேட்டலும் சிந்தித்தலுமே தலைமாணாக்கர்க்கு முக்கியமான தொழில்களாமென்றபடி.

நிலம், உழவர் வருந்திப் பயிர்செய்யும் முயற்சி யளவுக்குத் தக்க விளைவைத் தருதல் போல நடுமாணாக்கர் ஆசிரியன் கற்பித்த முயற்சி யளவுக்குத் தக்க கல்வியறிவையே காட்டுதலாலும்; கிளி தனக்குக் கற்பித்த சொல்லை யல்லாமல் வேறொன்றையுஞ் சொல்லமாட்டாமை போல இடைமாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளை

யல்லாமல் வேறொரு நுற்பொருளையுஞ் சொல்ல மாட்டாமையாலும், அவர்க்கு இவ்விரண்டும் உவமையாயின. ஏறாமற் குறையாமற் சொல்வித்தபடி சொல்வது, கிளிக்கு இயல்பு.

சில்லியுள்ள குடம் நீரை வார்க்க வார்க்கப் புறத்தே ஒழுக விட்டு எப்பொழுதும் நிரம்பாமை போலக் கடைமாணாக்கர் ஆசிரியர் தமக்கு நூற்பொருளைக் கற்பிக்கக் கற்பிக்க மனத்திற் கொள்ளாது மறந்து எப்பொழுதும் கல்வி நிரம்பாமையாலும்; ஆடு, ஒரு செடியிலே தன்வயிறு நிரம்பும்படி தழை நிறைந்திருந்தாலும் அதனை வயிறுநிரம்ப மேயாமற் சிறிது கடித்த மாத்திரத்திலே விட்டுப் பல செடிகளிலுஞ் சென்று சிறிதுசிறிது மேயப் புகு மியல்பினதாய் எங்கும் வயிறு நிரம்பாமை போல ஓராசிரியனிடத்தே தமக்குப் புலமை நிரம்பும்படி கல்வி மிக்கிருந்தாலும் புலமை நிரம்ப அவனிடங் கற்றுக்கொள்ளாமல் அவனிடம் ஒருநூலைச் சிறிது கற்ற மாத்திரத்திலே விட்டுப் பலரிடத்தும் போய்ச் சிறிதுசிறிதாகப் பல நூல்களைப் பாடங் கேட்க புக்கு எங்கும் புலமை நிரம்பாமையாலும்; எருமை, தெளிந்தநீரைக் கலக்கிக் குடித்தல் போலக் கடைமாணாக்கர் ஆசிரியனது நன்மனத்தை வருத்திக் கலங்கச் செய்து பின்பு அவன் வெறுப்புக் கொண்டு பாடஞ் சொன்னதைக் கேட்டுப் போதலாலும்; பன்னாடையானது, நெய் தேன் முதலியவற்றை வடிக்கட்டுதற் பொருட்டுத் தன்மேல் வார்க்கும்போது அவற்றிற் சாரத்தைக் கீழே யொழுக விட்டு அசாரமான கசட்டையே தன்னிடந் தங்கப் பெற்றுக்கொள்ளுதல் போலக் கடை மாணாக்கர் தமக்கு நல்லாசிரியன் நூல் கற்பிக்கும்போது அவன் வாயினின்று வந்தவற்றில் விதியாகிய நற்பொருள்களை யெல்லாம் மறந்துவிட்டு விலக்காகிய தீப்பொருளையே பற்றிக் கொள்ளுதலாலும், இந்நான்கும் கடை மாணாக்கர்க்கு உவமையாயின.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– **அன்னம் ஆ (அன்னர்) தலை (மாணாக்கர்)** – அன்னத்தையும் பசுவையும் போல்வார் முதன் மாணாக்கர்; **மண் கிளி (அன்னர்) இடை (மாணாக்கர்)** – மண்ணையுங் கிளியையும் போல்வார்

நடுமாணாக்கர்; **இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி அன்னர் கடைமாணாக்கர்** – பொள்ளற்குடத்தையும் ஆட்டையும் எருமையையும் பன்னாடையையும் போல்வார் கடைமாணாக்கர். எ–று.

**தலை மாணாக்கர்:–**

அன்னம் – பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலைமாத்திரங் குடித்தல் போல, முதல் மாணாக்கர் குணத்தையும் குற்றத்தையும் வேறு பிரித்துக் குணத்தை மாத்திரங் கொள்ளுதலாலும்;

பசு – மிகுந்த புல்லையுடைய விடத்தைக் கண்டால் அப்புல்லை வயிறு நிறைய மேய்ந்து பின்பு ஓரிடத்திற் போயிருந்து சிறிது சிறிதாக வாயில் வருவித்துக்கொண்டு மென்று தின்றல்போல, முதன்மாணாக்கர் மிகுந்த கல்வியுடைய ஆசிரியனைக் கண்டால் அக்கல்வியைத் தன்னுள் நிறையக் கேட்டுக்கொண்டு பின்பு ஓரிடத்துப் போயிருந்து சிறிது சிறிதாக நினைவிற் கொண்டுவந்து சிந்தித்தலாலும், அவருக்கு அவ்விரண்டும் உவமமாதலறிக.

**இடை மாணாக்கர்:–**

மண் – உழவர் வருந்திப் பயிர்செய்யும் முயற்சியளவினதாகிய விளைவை தன்கண் காட்டல்போல, இடைமாணாக்கர் ஆசிரியன் வருந்திக் கற்பித்த முயற்சியளவினதாகிய கல்வியறிவைத் தம்மிடம் காட்டுதலாலும்;

கிளி – தனக்குக் கற்பித்த சொல்லையன்றி வேறொன்றையுஞ் சொல்லமாட்டாமைபோல, இடை மாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளையன்றி வேறொரு நூற்பொருளையுஞ் சொல்லமாட்டாமையாலும், அவருக்கு அவ்விரண்டும் உவமானமாத லறிக.

**கடை மாணாக்கர்:–**

பொள்ளற்குடம் – நீரை வார்க்குந்தோறும் ஒழுக விடுதல்போலக் கடைமாணாக்கர் நூற்பொருளைக் கற்பிக்குந்தோறும் மறந்து விடுதலாலும்;

ஆடு – ஒரு செடியிலே தழை நிறைந்திருந்தாலும் வயிறு நிறைய மேயாது செடிதோறும் போய் மேய்தல்போலக் கடைமாணாக்கர் ஓராசிரியனிடத்து மிகுந்த கல்வி யிருந்தாலும் புலமை நிறையக் கற்றுக் கொள்ளாது பலரிடத்தும் போய்ப் பாடங்கேட்டலாலும்;

எருமை – குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல்போலக் கடை மாணாக்கர் ஆசிரியனை வருத்திப் பாடங் கேட்டலாலும்;

பன்னாடை – தேன் முதலியவற்றைக் கீழே விட்டு அவற்றிலுள்ள குற்றங்களைப் பற்றிக்கொள்ளுதல் போலக் கடைமாணாக்கர் நல்லபொருளை மறந்துவிட்டுத் தீய பொருளைச் சிந்தித்துப் பற்றிக்கொள்ளுதலாலும். அவருக்கு அந்நான்கும் உவமானமாதலறிக.

மாணாக்கருள் அன்னமாவே (அன்னர்), மண்ணொடு கிளியே (அன்னர்) என முறையே தலைமாணாக்கரையும் இடை மாணாக்கரையும் பிரித்தலால் ஏகாரம் இரண்டும் பிரிநிலைக்கண் வந்தன. நெய்யரி என்புழி ஏகாரந் தொக்கு நின்றது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** அன்னத்தையும், பசுமையும் போல்வார் முதல் மாணாக்கர்; மன்னையும், கிளையைம் போல்வார் இடைமாணாக்கர்; சில்லிக் குடத்தையும்,ஆட்டையும், எருமையையும், பன்னாடையையும் போல்வார் கடைமாணாக்கர். **எ–று.**

**அன்னம்** பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலைமாத்திரம் குடித்தல் போல, முதன் மாணாக்கர் குணத்தையும் குற்றத்தையும் வேறு பிரித்துக் குணத்தைமாத்திரம் கொள்ளுதலாலும், பசு மிகுந்த புல்லையுடைய இடத்தைக் கண்டால் அப் புல்லை வயிறு நிறைய மேய்ந்து பின்போரிடத்திற் போயிருந்து சிறிது சிறிதாக வாயில் வருவித்துக்கொண்டு மென்று தின்றல்போல, முதன் மாணாக்கர் மிகுந்த கல்வியுடைய ஆசிரியனைக் கண்டால் அக் கல்வியைத் தன்னுள்ளம் நிறையக் கேட்டுக்கொண்டு பின்போரிடத்துப் போயிருந்து சிறிது சிறிதாக நினைவிற் கொண்டுவந்து சிந்தித்தலாலும், அவருக்கு அவ் விரண்டும் உபமானமாத கூறிக.

**மண்** உழவர் வருந்திப் பயிர்செய்யு முயற்சியளவு விளைவைத் தன்கட் காட்டல் போல இடைமாணாக்கர் ஆசிரியன் வருந்திக் கற்பிக்கும் முயற்சியளவு கல்வியறிவைத் தங்கட் காட்டுதலாலும்; கிளி தனக்குக் கற்பித்த சொல்லை யல்லாமல் வேறொன்றையுஞ் சொல்ல மாட்டாமை போல இடை மாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளை அல்லாமல் வேறொரு நூற்பொருளையும்

சொல்லமாட்டாமையாலும் அவருக்கு அவ்விரண்டும் உபமானமாதலறிக.

**பொள்ளற்குடம்** நீரை வார்க்குந்தோறும் ஒழுகவிடுதல் போலக் கடைமாணாக்கர் நூற்பொருளைக் கற்பிக்குத் தோறும் மறந்து விடுதலாலும், ஆடு ஒரு செடியிலே தழை நிறைந்திருந்தாலும் வயிறு நிறைய மேயாமற் செடிதோறும் போய் மேய்தல் போலக் கடைமாணாக்கர் ஓராசிரியனிடத்து மிகுந்த கல்வி யிருந்தாலும் புலமை நிறையக் கற்றுக் கொள்ளாமற், பலரிடத்திலும் போய்ப் பாடங் கேட்கையாலும், உருமை குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல் போலக் கடைமாணாக்கர் ஆசிரியனை வருத்திப் பாடம் கேட்கையாலும், பன்னாடை தேன் முதலியவற்றைக் கீழே விட்டு அவற்றிலுள்ள குற்றங்களைப் பற்றிக் கொள்ளுதல் போலக் கடைமாணாக்கர் நல்ல பொருளை மறந்துவிட்டுத் தீய பொருளைச் சிந்தித்துப் பற்றிக் கொள்ளுதலாலும், அவருக்கு இந் நான்கும் உபமானமாத லறிக.

## கா.நமச்சிவாய முதலியார்

**அன்னம்** – அன்னத்தையும், **ஆ** – பசுவையும், **அன்னர்** – போல்பவர், **தலை** (மாணாக்கர்) – முதன்மாணாக்கர்; **மண்** – மண்ணையும், **கிளி** – கிளியையும், **அன்னர்** – போல் பவர், **இடை** (மாணாக்கர்) – இடை மாணாக்கர்; **இல்லிக் குடம்** – சில்லிக்குடத்தையும், **ஆடு** – ஆட்டையும், **எருமை** – எருமையையும், **நெய்யரி** – பன்னாடையையும், **அன்னர்** – போல்பவர், **கடை மாணாக்கர்** – கடைமாணாக்கர் ஆவர்.

**மூவகை மாணாக்கர்:–**

அன்னம், பாலையும் நீரையும் வேறுபிரித்துப் பாலைமாத்திரங் குடித்தல்போல, முதன் மாணாக்கர் குணத்தையும் குற்றத்தையும் வேறுபிரித்துக் குணத்தை மாத்திரங் கொள்ளுதலாலும்; பசு, மிகுந்த புல்லையுடைய இடத்தைக் கண்டால் அப்புல்லை வயிறு நிறைய மேய்ந்து பின்பு ஓரிடத்திலமர்ந்து சிறிது சிறிதாக வாயில் வருவித்துக்கொண்டு அசைபோடுவதுபோல, முதன் மாணாக்கர் மிகுந்த கல்வியுடைய ஆசிரியனைக் கண்டால், அக் கல்வியைத் தம் உள்ளம் நிறையக் கேட்டுக்கொண்டு பின்பு ஓரிடத்திலிருந்து சிறிது சிறிதாக நினைவிற் கொண்டுவந்து சிந்தித்தலாலும், அவருக்கு அவ்விரண்டும் உவமானமாயின.

**இடைமாணாக்கர்:–**

மண், உழவர் வருந்திப் பயிர்செய்யு முயற்சியளவு விளைவைத் தன்னிடத்துக் காட்டல்போல, இடைமாணாக்கர் ஆசிரியன் முயன்று கற்பிக்கும் முயற்சி யளவு கல்வி யறிவைத் தம்மிடத்துக் காட்டுதலாலும்; கிளி, தனக்குக் கற்பித்த சொல்லையல்லாமல் வேறொன்றையும் சொல்லமாட்டாமைபோல, இடைமாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளை அல்லாமல் வேறொரு நூற்பொருளையுஞ் சொல்லமாட்டாமையாலும், அவருக்கு அவையிரண்டும் உவமானமாயின.

**கடைமாணாக்கர்**

பொள்ளாற்குடம், நீரை வார்க்குந்தோறும் ஒழுகவிடுதல் போலக் கடைமாணாக்கர் நூற்பொருளைக் கற்பிக்குந் தோறும் மறந்து விடுதலாலும்; ஆடு, ஒரு செடியிலே தழை நிறைந்திருந்தாலும் வயிறு நிறைய மேயாமற் செடிதோறும்போய் மேய்தல்போல, கடைமாணாக்கர் ஓராசிரியனிடத்து மிகுந்த கல்வியிருந்தாலும் புலமை நிறையக் கற்றுக்கொள்ளாமற் பலரிடத்திலும் போய்ப் பாடங் கேட்கையாலும்; எருமை, குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல் போல, கடைமாணாக்கர் ஆசிரியனை வருந்தச்செய்து பாடங் கேட்கையாலும்; பன்னாடை, தேன் முதலியவற்றைக் கீழே ஒழுக விட்டு அவற்றிலுள்ள ஈ, எறும்பு முதலிய பொருள்களைப் பற்றிக் கொள்ளுதல் போல. கடைமாணாக்கர் நல்ல பொருளை மறந்துவிட்டுத் தீய பொருளைச் சிந்தித்துப் பற்றிக்கொள்ளுதலாலும், அவருக்கு அவை நான்கும்உவமானமாயின.

## மோசசு பொன்னையா

அன்னத்தையும் ஆவையும் ஒப்பர் தலை மாணாக்கர்; மண்ணையும் கிளியையும் ஒப்பர் இடை மாணாக்கர்; இல்லிக்குடம், ஆடு, எருமை, நெய்யரி இவற்றை ஒப்பர் கடை மாணாக்கர், **எ–று.**

அன்னம் நீர் கலந்த பாலிலிருந்து பாலைப் பிரித்துண்ணும். பசு கிடைத்த இடத்தில் புல்லை வேண்டிய அளவு மேய்ந்து, பின் தனியிடத்தில் அசையிட்டு உட்கொள்ளும். மண், உழவன் முயற்சிக்கு ஏற்பவே பயன் தரும். கிளி தனக்குக் கற்பித்த சொல்லையே சொல்லும். இல்லிக்குடம் வார்க்கப்படும் நீரை அப்பொழுதே ஒழுகவிடும். ஆடு ஒரு

செடியில் வேண்டிய தழை இருந்தும் வயிறு நிறைய மேயாமல், செடிதோறுஞ் சென்று மேயும் தன்மையது. எருமை குளத்து நீரைக் கலக்கிக் குடிக்கும். நெய்யரி கசடுகளை அரித்துத் தன்னிடம் வைத்துக் காண்டு சாரமான நெய்யை வடியவிடும்.

(37)

## கற்பிக்கப்படாதோர்

**38. களிமடி மானி காமி கள்வன்**
**பிணிய னேழை பிணக்கன் சினத்தன்**
**துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்**
**தடுமா றுளத்தன் றறுகணன் பாவி**
**படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.**

களி மடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்நூற்கு அஞ்சித்
தடுமாறு உளத்தன் தறுகணன் பாவி
படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே.

kaḻi mati māṉi kāmi kaḻvaṉ
piṇiyaṉ ēḷai piṇakkaṉ siṉaṭṭaṉ
ṭuyilvōṉ manṭaṉ ṭoṉnūṟku añsiṭ
ṭatumāṟu uḻaṭṭaṉ ṭaṟukaṇaṉ pāvi
patiṟaṉ iṉṉōrkkup pakarār nūlē

**என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

Who must not be taught: fifteen faults

Person who should not be taught: a teacher should not impart instruction to the drunkard; the slothful; the self-opinionated (falsely modest, supercilious); the lascivious; the thievish; the

sickly; the indigent; the surly (sulky); the wrathful; the sleepy; the dull-headed;thedespiring; the cruel; the reprobate; and those addicted to false hood.

## ஒப்புமைப் பகுதி

காமுகன் களியன் கடுஞ்சொலன் சினத்தன்
மடியன் தடுமாறு உளத்தன் மறவியான்
துயில்வோன் பிணக்கன் சோரன் பொய்யன்
மானவன் பிணியின் மரீஇயவன் இவர்க்குநல்
தானமது மாயினும் சாற்றார் நூலே

(மாற.அலங்.:46)

குரங்கெறி விளங்காய் கொள்பவர் போல்வார்
பழம்பகை மறைத்துப் பணிபவ ராகி
கூடா ஒழுக்கில் கொள்பவர் கல்விச்
சால்பில ராகித் தலைமைவந் தகுத்தோர்
கரந்தங் கொருவரைக் கற்கவிட் டுணர்வான்
வருபவர் தமக்கும் வழங்கார் நூலே

(மாற.அலங்.:52)

ஆசாரம் இல்லார் அழுக்காறு உள்ளார் நடுவார்
கூசாது மற்றொன்று கூறுவார் – தேசிகன்சொல்
கற்றொன் றுறாதார் கழகத்துறா லிருந்தார்
எற்றென் றுரையா திரார்

(மாற.அலங்.:53)

ஆடுபந் துறுசுவ ரளந்து அறிமுகவை
கோடின் றாங்குள மெனும்குறி யோரே

(மாற.அலங்.:47)

ஓரிடத் துறுகுளகு அமைத்து அறஉண் ணாது
அவணவண் நிறைவற் றலமரும் ஆடே

(மாற.அலங்.: 48)

எற்றிய பந்தினை எதிர்செய விடுத்தொரு
பற்றற நிற்பது சுவரின் பண்பே

(மாற.அலங்.:49)

அளந்தகத் தடக்கிய பொருள்களை ஆங்கவண்
முற்றப் புறத்துகல் முகவையின் குணவே

(மாற.அலங்.:50)

**பயம்சிறிது அடக்கலின் பயன்நிரம் பாதாம்**
**கொழும்புனல் புகுந்த கோடின்றாம் குளனே**

**(மாற.அலங்.:51)**

## மயிலைநாதர்

**இ – ள்.:** [1]இவர் கற்பிக்கப்படா மாணாக்கர், **எ – று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ – னின்,** மாணாக்கராகார் இவர் என **உணர் – ற்று.**

**இ – ள்.:** இக் குற்றங்களை யுடையார்க்கு நூலைச் சொல்லார் ஆசிரியர்,**எ – று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** கற்பிக்கப்படாத மாணாக்கராவார் இவரெனக் கூறுகின்றது.

**இ–ள்.: களி** – எப்போதும் பயனின்றிக் களிப்பானுக்கும், **மடி** – கருதியவற்றைச் செய்யுங் காலத்து முயற்சியின்றிச் சோம்பறை ஆவானுக்கும், **மானி** – எஞ்ஞான்றும் தன்னிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வரினும் உயிர் வாழாமையும் உடையான் ஆவானுக்கும், **காமி** – பிறர்க்குரிய பொருளைக் காம மயக்கத்தான் வவ்வக் கருதுவானுக்கும், **கள்வன்** – பிறர் உடைமையா யிருப்பது யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதுவானுக்கும், **பிணியன்** –பழவினையாலன்றி உணவு செயல்கள் முதலாய காரணத்தான் வாதம் முதலிய பிணிகளை உடையானுக்கும், **ஏழை** – கேடு வறுமை பழி பாவங்களென்னும் ஆகாவொழுக்கத்தில் ஆசையுடைமையும் ஆக்கம் செல்வம் புகழ் அறங்களென்னும் நன்மைகளைக் கெடுத்துக் கோடலும் இவ்விருவகைக் கருத்தாய் ஈயாது அறியாமை உடையானுக்கும், **பிணக்கன்** – சிற்றறிவினனா யிருந்து தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் முறைச்சொல் கேளாது பிணங்குவானுக்கும், **சினத்தன்** – அறியாமையால் ஒருவன் தினையளவு குற்றம் வரத் தோற்றினும் அதனைப் பனை யளவாகக் கொண்டு முனிவானுக்கும், **துயில்வோன்** – எப்போதும் துயில்வானுக்கும், **மந்தன்** – புத்தி நுணுக்கம் இல்லாதவனுக்கும், **தொன்னூற்கு அஞ்சித் தடு மாறுளத்தன்** – பழமையாகிய நூலினது

---

**பாட வேறுபாடு.:–**

**1. இவர் கற்பிக்கப்படா மாணாக்கர்**

தொகையை இத்துணைத்தோ வென அஞ்சித் தடுமாறும் நெஞ்சுடையானுக்கும், **தறுகணன்** – ........, **பாவி** – பல வகைக் கூறுபாடாகிய தீவினைகளைச் செய்வானுக்கும், **படிறன்** – காம மயக்கத்தாற் பிறனுடைய இல்லாளை விரும்புவானுக்கும், **இன்னோர்க்கு** –இன்னோர்க்கு, **பகரார் நூலே** – நூலறிவை உணர்த்தார்கள், **எ–று.**

> இவ்வொன்பதின்மரும் நெடுநூலைக் கற்கலாகார். இவர் தன்மை கடை மாணக்கர் தன்மையாம். '**குரங் கெறி விளாங்காய் எருமை யாடே தோணி யன்னார் இவரெனமொழிப.**'

## விசாகப் பெருமாளையர்

**இது,** மாணாக்க ராகாரிவரென்று சொல்லுகின்றது.

**இ–ள்.: களி** – கட்குடியனும், **மடி** – சோம்பேறியும், **மானி** –அபிமான முடையவனும், **காமி**–காமமுடையவனும், **கள்வன்**–திருடனும், **பிணியன்**–நேயாளியும், **ஏழை**–ஏழைமை யுடையவனும், **பிணக்கன்** – பிணக்குடையவனும், **சினத்தன்** – கோபமுடையவனும், **துயில்வோன்** – மிகத் தூங்குவோனும், **மந்தன்** – புத்திநுட்ப மில்லாதவனும், **தொன்னூற் கஞ்சித் தடுமாறுளத்தன்** – பழைய நூல்களைக் கண்டஞ்சித் தடுமாறுமுள்ளத்தை யுடையவனும், **தறுகணன்** – அஞ்சத் தக்கவைகளை அஞ்சாதவனும், **பாவி**–பாவஞ் செய்வோனும், **படிறன்** – பொய்பேசுகிறவனும், **இன்னோர்க்கு** – ஆகிய இப்படிப்பட்ட குற்றத்தை யுடையவருக்கு, **நூல்**–நூலை, **பகரார்** – சொல்லார், **எ – று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** கற்பிக்கப்படார் இவரென்ப துணர்த்துகின்றது.

**இ–ள்.: களி** – கள்ளுண்டு களிப்பவனும், **மடி**–சோம்பலுடையவனும், **ஏழை** – அறிவில்லாதவனும், **பிணக்கன்** – மாறபாடுடையவனும், **தொன்னூற்கஞ்சி**–ஆதி நூலின் பரப்பைக் கண்டு கற்கப் பயந்தவனும், **தடுமாறுளத்தன்** – ஒன்றினும் நிலைக்கொள்ளாத மனத்தை யுடையவனும், **தறுகணன்** – இரக்க மில்லாதவனும், **படிறன்** – பொய் சொல்பவனும், **இன்னோர்க்கு** – ஆகிய இவ்வகையோர்க்கு, **பகரார் நூல்** – நூலைச் சொல்லார் ஆசிரியர், **எ – று.**

> இதனுள் பதப்பொருளுரையாதன சில, அவை பொருள் விளங்கிக் கிடந்தன. ஆசிரிய ரென்னும் பெயர்ப்பயனிலை குறைந்து நின்றது.

## ஆறுமுக நாவலர்

இ – ள்.: **களி**–கள்ளுண்டு களிப்பவனும், **மடி** – சோம்பேறியும், **மானி** – அகங்கார முடையவனும், **காமி** – காமமுடையவனும், **கள்வன்** – திருடனும், **பிணியன்** – நோயாளியும், **ஏழை** –அறிவில்லாதவனும், **பிணக்கன்** – மாறுபாடுடையவனும், **சினத்தன்** – கோபமுடையவனும், **துயில்வோன்** – மிகத் தூங்குவோனும், **மந்தன்** – புத்தி நுட்பமில்லாதவனும், **தொன்னூற்கு அஞ்சித் தடுமாறு உளத்தன்** – பழைய நூல்களைக் கண்டஞ்சித் தடுமாறு முள்ளத்தை யுடையவனும், **தறுகணன்** – அஞ்சத் தக்கவைகளை அஞ்சாதவனும், **பாவி** – பாவஞ் செய்வோனும், **படிறன்** – பொய் பேசுவோனும், **இன்னோர்க்கு** – ஆகிய இப்படிப்பட்ட குற்றத்தை யுடைவருக்கு, **நூல் பகரார்** – நூலைச் சொல்லார் ஆசிரியர், எ – று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **களி** –கள்ளுண்டு களிப்பவனும், – **மடி** – சோம்பலுடையவனும், – **மானி** – அகங்காரமுடையவனும், – காமி – தூர்த்தனும், – **கள்வன்** – சோரனும், – **பிணியன்** – நெடுநோயாளியும், – **ஏழை** – அறிவில்லாதவனும், – **பிணக்கண்** – மாறுபாடுடையவனும், – **சினத்தன்** – கடுங்கோபமுடையவனும், – **துயில்வோன்** – மிகத்தூங்குவோனும், – **மந்தன்** – புத்திமழுக்கமுடையவனும், – துயில்வோன் – மிகத்தூங்குவோனும், – **மந்தன்** – புத்திமழுக்கமுடையவனும், – **தொன்னூற்கு அஞ்சித் தடுமாறு உள்ளத்தன்** – பழைய நூல்களைக் கண்டு இவ்வளவும் என்னாற் கற்கமுடியுமோவென்று அச்சுற்றுத் தடுமாறுமுள்ளத்தையுடையவனும், – **தறுகணன்** – அஞ்சத்தக்கவைகளை அஞ்சாதவனும், – **பாவி** – கொலை முதலான பாவங்கள் செய்வோனும், படிறன் – பொய்சொல்பவனும் – **இன்னோர்க்கு** – ஆகிய இவ்வகையான குற்றமுடையோர்க்கு – **நூல்பகரார்** – நூலைப்போதிக்கமாட்டார் ஆசிரியர். எ–று.

> தொன்னூற்கஞ்சி, தடுமாறுளத்தன் என்றுபாடமோதி பழைய நூற்பரப்பைக் கண்டு கற்கப் பயந்தவனும், ஒன்றினும் நிலைகொள்ளாத மனத்தையுடையவனும் என்றிரண்டாக வுரைகொள்வாருமுளர்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ – ள்.: **களி** – கட்குடியனும், **மடி** – சோம்பேறியும், **மானி** – அகங்காரியும், **காமி** – காமமுடையவனும், **கள்வன்** – திருடனும், **பிணியன்** – நோயாளியும், **ஏழை** – அறிவில்லாதவனும், **பிணக்கன்** – மாறுபாடுடையவனும், **சினத்தன்** – கோபமுள்ளவனும், **துயில்வோன்** –

மிகுதியாகத் தூங்குபவனும், **மந்தன்** – (சொன்னதை விரைவில் அறிந்துகொள்ளும்) நுட்பமில்லாதவனும், **தொல் நூற்கு அஞ்சி தடுமாறு உளத்தன்** – பழைய நூல்களின் பரப்பைக் கண்டு அச்சங் கொண்டு கலங்குகின்ற மனமுள்ளவனும், **தறுகணன்** –(அஞ்சத்தக்கவைகட்கு) அஞ்சாதவனும், **பாவி** – பாவத்தொழில் செய்பவனும், **படிறன்** – பொய்ம்மை யுடையவனும், **இன்னோர்க்கு** – இத் தன்மையவர்க்கு, **நூல்** – நூலை, **பகரார்** – சொல்லார், (ஆசிரியர்); **எ – று. காமி**–தூர்த்தன்.

"நுண்ணுணர்வின்மை வறுமை", "அறிவிலார் என்னுடைய ரேனுமிலர்" ஆதலால், ஏழை யென்பதற்கு அறிவில்லாதவ னென்று உரைக்கப்பட்டது; பொருளில்லா தவனென்றுங் கொள்ளலாம்; மிக்க தரித்திரனுக்கு மனம் ஒரு நிலையில் நில்லாதாதலால்; அவன், கல்விக்கு உதவான்; அவனுக்குக் கல்வி பயிற்ற வேண்டுமாயின், உணவு உடை உறையுள் முதலியன கிடைக்கத் தக்க வகை செய்தே பயிற்ற வேண்டு மென்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– களி** – கள்ளுண்டு களிப்பவனும், **மடி** – சோம்பேறியும், **மானி** – அகங்காரமுடையவனும், **காமி** – காமமுடையவனும், **கள்வன்** – திருடனும், **பிணியன்** – நோயாளியும், **ஏழை** – அறிவில்லாதவனும், **பிணக்கன்** – மாறுபாடுடையவனும், **சினத்தன்** – கோபமுடையவனும், **துயில்வோன்** – மிகத்தூங்குவோனும், **மந்தன்** – புத்திநுட்பமில்லாதவனும், **தொன்னூற்கு அஞ்சித் தடுமாறு உளத்தன்** – பழைய நூல்களைக் கண்டஞ்சித் தடுமாறு முள்ளத்தையுடையவனும், **தறுகணன்** – அஞ்சத் தக்கவைகளை அஞ்சாதவனும், பாவி – பாஞ்செய்வோனும், **படிறன்** – பொய் பேசுவோனும், **இன்னோர்க்கு** –ஆகிய இப்படிப்பட்ட குற்றத்தையுடைவருக்கு, **நூல் பகரார்** – நூலைச் சொல்லார் ஆசிரியர். **எ–று.**

**"அன்னங் கிளியே நன்னிற நெய்யரி**
**யானை யானே றென்றிவை போறல்**
**உடைய ராகிய நடையறிந் தொழுகுநர்**
**கற்பிக் கப்படுங் கடப்பாட் டோரே"**

எனவும்,

**"பாலு நீரும் பாற்படப் பிரித்தல்**
**அன்னத் தியல்பென அறிந்தனர் கொளலே"**

எனவும்,

**"கிளந்தவா கிளத்தல் கிளியின தியல்பே"**

எனவும்,

"எந்நிறந் தோய்தற்கும் ஏற்ப தாதல்
நன்னிறத் தியல்பென நாடினர் கொளலே"

எனவும்,

"நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது
நெய்யரி மாண்பென நினைதல் வேண்டும்"

எனவும்,

"குழுவு படூஉப் புறந்தருதல் குஞ்சரத் தியல்பே"

எனவும்,

"பிறந்த வொலியின் பெற்றியோர்ந் துணர்தல்
சிறந்தவா னேற்றின் செய்தி யென்ப"

எனவும் ஓதிய இவற்றானும்;

"குரங்கெறி விளங்காய் எருமை யாடே
தோணி யன்ன கோணிலை யாளர்
கற்பிக் கப்படாக் கடப்பாட் டோரே"

எனவும்,

"கல்லா லெறிந்து கருதுபயன் கொள்வோன்
குரங்கெறி விளங்கா யாமெனக் கூறுவர்"

எனவும்,

"வியங்கி லாழ்ந்து வெண்ணீ ருழக்கிக்
கலங்கல்செய் தருந்தல் காரா மேற்றே"

எனவும்,

"ஒன்றிடை யார வுறினும் குளகு
சென்றுசென் றருந்தல் யாட்டின் சீரே"

எனவும்,

"நீரிடை யன்றி நிலத்திடை யோடாச்
சீருடை யதுவே தோணி யென்ப"

எனவும் ஓதிய இவற்றானும்

உணர்க என்றார் இலக்கண விளக்க நூலாசிரியர். இவ்வுவமைகளை ஆராய்ந்து உளங்கொள்ளுதல் பயனுடைத்தாம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** கட்குடியனும், சோம்பேறியும், அபிமானமுடையவனும், காமமுடையவனும், திருடனும், நோயாளியும், அறிவில்லாதவனும், பிணக்குடையவனும், கோபமுடையவனும், (மிகத்) தூங்குவோனும், புத்திநுட்ப மில்லாதவனும், பழைய நூல்களைக் கண்டு அஞ்சித் தடுமாறும் உள்ளத்தை

யுடையவனும், அஞ்சத்தக்கவைகளை அஞ்சாதவனும், பாவஞ் செய்வோனும், பொய் பேசுகிறவனும் (ஆகிய) இப்படிப்பட்ட குற்றத்தை யுடையவருக்கு நூலைச் சொல்லார். எ–று.

பிணக்கன் – மாறுபாடுடையவன். மந்தன்–புத்திநுட்ப மில்லாதவன். படிறன்–பொய்பேசுகிறவன.

## கா.நமச்சிவாய முதலியார்

**களி**– கட்குடியனும், **மடி** – சோம்பேறியும், **மானி** – அபிமான முடையவனும், **காமி** – காமமுடையவனும், **கள்வன்** – திருடனும், **பிணியன்** – நோயாளியும், **ஏழை** – அறிவில்லாதவனும், **பிணக்கன்** – பிணக்குடையவனும், **சினத்தன்** – கோபமுடையைவனும், **துயில்வோன்** – (மிக்க) உறக்க முடையோனும், **மந்தன்** – புத்தி நுட்பமில்லாதவனும், **தொல் நூற்கு அஞ்சி தடுமாறு உளத்தன்** – பழைய நூல்களைக் கண்டு அஞ்சித் தடுமாறும் உள்ளத்தை யுடையவனும், **தறுகணன்** – அஞ்சத் தக்கவைகளை அஞ்சாதவனும், **பாவி** – பாவஞ் செய்வோனும், **படிறன்** – பொய் பேசுகிறவனும், **இன்னோர்க்கு** – ஆகிய இப்படிப்பட்ட குற்றத்தை யுடையவருக்கு, **நூல்** – நூலை, **பகரார்** – கற்பிப் யார் (ஆசிரியர்)

மானம் – அபிமானம், வெட்கம், அகங்காரம்.32

**கழற்குடத்தின் தன்மை** பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றரும் செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

**பெய்த முறையன்றி**– தன்னுள்ளே போட்ட முறையினாலல்லாமல், **பிறழ** – (முன் போடப்பட்டவையும் பின் போடப்பட்டவையும் அம்முறை) பிறழ்ந்து போக, **உடன்தரும்** – விரைவிலே (தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக்) கொடுக்கின்ற, செய்தி – செய்கையானது, **கழல்பெய் குடத்தின்சீர்** – கழற்காய் இட்ட குடத்தினது தன்மையாம்.

முறை பிறழக் கற்பித்தலும் தாமறிந்தவற்றை யெல்லாம் ஒருசேரக் கூறுதலும் ஆகிய செய்கையானது, ஆசிரிய ராகாதவரது குற்றமாதலால் கழற்குடம் அவருக்கு உவமானமாயிற்று.

## மோசசு பொன்னையா

கள்ளுண்போனும், சோம்பேறியும், மிஞ்சிய மானமுடையோனும்,

காமுகனும், திருடனும், நோயாளியும், அறிவில் எளியனும், மாறுபடும் இயல்பினனும், கோபியும், தூக்க விருப்பினனும், பேதையானவனும், பழைய நூல் கண்டு அஞ்சித் தடுமாறும் உள்ளத்தானும், கொடியனும், பாவம் அஞ்சாதவனும், பொய்யனும் ஆகியோருக்கு ஆசிரியர் நூல் கற்பிப்பதில்லை, எ—று.

**(39)**

## பாடங்கேட்கும் முறை

**40.** கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று [1]வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்
திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை [2]கேட்டவை விடாதுளத் தமைத்துப்
பேவெனப் போத லென்மனார் புலவர்.

கோடல் மரபே கூறும் காலைப்
பொழுது ஒடு சென்று வழிபடல் முனியான்
குணத்து ஒடு பழகி அவன் குறிப்பின் சார்ந்து
இரு என இருந்து சொல் எனச் சொல்லிப்
பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகிச்
சித்திரப் பாவையின் அத் தகவு அடங்கிச்
செவி வாய் ஆக நெஞ்சு களன் ஆகக்
கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைத்துப்

போ எனப் போதல் என்மனார் புலவர்.

---

பாட வேறுபாடு.:—

1. வழிபட
2. கேட்பவை

kōtal marapē kūṟum kālaip
poḷuṭu otu seṉṟu vaḷipatal muṉiyāṉ
kuṇaṭṭu otu paḷaki avaṉ kuṟippiṉ sārnṭu
iru eṉa iruntu sol eṉas sollip
parukuvaṉ aṉṉa ārvaṭṭaṉ ākis
siṭṭirap pāvaiyiṉ aṭ ṭakavu ataṅkis
sevi vāy āka neñsu kaḻaṉ ākak
kēttavai kēttavai vitāṭu uḷaṭṭu amaiṭṭup
pō eṉap pōṭal eṉmaṉār pulavar.

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

### The way to learn

The way to learn, or the duties of a scholar towards his teacher are: early attendance; respectful obedience; conformity with teacher's disposition; attention to injunctions by word of mouth or sign to sit, to rise&c., to read, to stop&c; thirsting for knowledge, having a love for learning; in the act of receiving instruction, sitting immoveable as a statue, making his ear and mind serve the purposes of mouth and stomach (to take in knowledge), desiring to hear again and again what was once said; and retaining in memory the substances of what was imparted; and then rising to go (home) when ordered to do so; these are the injunctions of the learned.

## ஒப்புமைப் பகுதி

கொள்வோன் கொள்கடன் கூறுங் காலைக்
கடையாமத்திடை யெழுந் துளகடன் கழித்து
ஆரியன்மாளிகை வாயில் சென்றெய்திக்
காலமும் இடனும் கருதுபு நின்றாங்கு
எவணவண் நோக்கினன் அவனுள னாகி
வணக்கமும் ஒடுக்கமும் வாய்ந்த யல்நிற்ப
வருகென் றழைத்தலும் அருகுசென் றிறைஞ்சலும்
அருத்தியின் இருத்திஎன் றறைதலும் இருந்தாங்
உரையென உரைத்துரைத் துரனுறத் தோய்தரப்
பொழிப்பே றாமுரை பகர்தலும் தெற்றெனு
உணர்ந்த பின்பு ஒழிகென ஒழிதலும் அவன்திறத்து

**ஓவாது உதவுவது ஒல்லும் வகையான்**
**ஏவா தியற்றிய இன்பம் எய்தியபின்**
**பகலினு மிரவினும் பயின்று பின்முன்னர்**
**அகலா னாகிய அன்பின னாதலும்**
**துயில்வழித் தைவரும் துணைத்தாளினைத் துறந்து**
**ஒல்லையில் துயின்றெ ழுந்தொழுகு தலன்றே.**

**(மாற.அலங்.:54)**

## மயிலை நாதர்

**இ—ள்.:** இது நூல்கேட்குமியல்பு, **எ—று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ — னின்,** நிறுத்த முறையானே மாணாக்கன் நூலைக் கற்குமாறு **உணர் — ற்று**

**இ—ள் :** கற்குமாறு இவ்வாறு எனச் சொல்லுவர் புலவர், எ—று

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** நிறுத்திய முறை சீடன் கற்கும் முறைமை இதுவெனக் கூறுகின்றது.

**இ—ள்.: கோடன் மரபே கூறுங்காலை** — சீடன் கற்கும் முறைமையைச் சொல்லு மிடத்து, **பொழுதொடு சென்று** — ஓதுக்காலச் சமய மறிந்து சென்று, **வழிபடன் முனியான்** — வழிபடுதலிலே விருப்ப முடையானாகி, **குணத்தொடு பழகி** — அவனது நன்மை சேர்ந்த குணத்தோடொத்த பயிற்சியைப் பயின்று, **அவன் குறிப்பிற் சார்ந்து** — ஆசிரியர் கருதியதனைக் கூறி முன்னர்க் குறிப்பின் வழியே சார்ந்து, **இருவென இருந்து சொல்லெனச் சொல்லி** — இரு வென்றால் இருந்து சொல் லென்றால் சொல்லி, **பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி** — தண்ணீர்த்தாக மெடுத்தவன் குடித்தாலொத்த ஆசை உடையோனாகி, **சித்திரப் பாவயின் அத்தக வடங்கி** — மாடத்தில் எழுதிய சித்திரப்பாவை போலச் சலனம் இல்லாதவனாய், **செவி வாயாக** — செவியே சரக்கறை வாசலாக, **நெஞ்சு களனாக** — நெஞ்சே சரக்கறையாக, **கேட்டவை கேட்டவை** — கேட்ட கேட்ட நூற்பொருளை எல்லாம் விடாது, **உளத்தமைத்து** — சிந்தை விடாது உள்ளத்திலே அமைவு பெற நிறுத்தி, **போவெனப் போதல்** — செல்லென்றால் செல்லுதல், **என்மனார் புலவர்** — என்று சொல்லுவர் புலவர், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இ–ள்.:** இது நிறுத்த முறையாற் பாடங் கேட்கையின் வரலாற்றைச் சொல்லுகின்றது.

இ–ள்.: **கோடன் மரபு**– பாடங் கேட்டகையினது வரலாற்றை, **கூறுங்காலை** – சொல்லும் பொழுது, **பொழுதொடு** – தகுங் காலத்தில் **சென்று** – போய், **வழிபடல்** – வழிபாடு செய்தலில், **முனியான்** – வெறுப்பில்லாதவனாகி, **குணத்தொடு** – ஆசிரியன் குணத்தோடு பொருந்த, **பழகி** – பயின்று, **அவன் குறிப்பின்** – அவன் குறிப்பின் வழியிலே சார்ந்து சேர்ந்து, **இருவென**–இருவென்று சொன்ன பின், **இருந்து** –இருந்து, **சொல்லென** – படியென்று சொன்ன பின், **சொல்லி**–படித்து, **பருகுவனன்ன** – பசித்துண்பவனைப் போல, **ஆர்வத்தனாகி** – மிக்க விருப்பத்தை யுடையவனாகி, சித்திரப் பாவையின் – சித்திரப் பாவையைப் போல, அத்தக வடங்கி – அவ்வசைவறு குணத்தினோ டடங்கி, **செவி**–காதானது, **வாயாக** –வாயாகவும், **நெஞ்சு**–மனமானது, **களனாக**–கொள்ளு மிடமாகவும், **கேட்டவை**–முன்கேட்கப்பட்டவற்றை, **கேட்டு** – திரும்பிக் கேட்டு, **அவை** – அப்பொருள்களை, **விடாது** – மறந்து விடாமல், **உளத்து** –உளத்தின்கண், **அமைத்து** – நிறைத்துக்கொண்டு **போவென**–போவென்றபின், **போதல்**– போகுதலாகும், **எம்மானர்** –என்று சொன்னார், **புலவர்** – புலவரானவர், எ–று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, நிறுத்த முறையே மாணாக்கன் நூலைக் கற்றுக் கொள்ளும் வரலாறுணர்த்துகின்றது.

**இ–ள்.: கோடன்மரபு** – மாணாக்கன் கற்றுக் கொள்ளுதலின் வரலாற்றை, **கூறுங்காலை** – சொல்லும்போது, **பொழுதொடு சென்று** – நியமித்த காலந் தப்பாமற் போய், **வழிபடன் முனியான்** – வழிபாடு செய்தற்கு விரும்பினவனாகி, **குணத்தொடு பழகி** – ஆசிரியன் குணத்துக்குத் தக்கபடி அதனொடு பழகி, **அவன் குறிப்பிற் சார்ந்து** – வரலாமென்கிற கருத்து இருந்ததை யறிந்து கிட்டி, **இருவென விருந்து** – இருவென்று ஆசிரியன் சொன்ன பிற்பாடிருந்து, **சொல்லெனச் சொல்லி** – உன்பாடத்தைச் சொல்லென்ற பிற்பாடு சொல்லி, **பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி** – பசித்து உண்பவன் அவ்வுணவிலே வைத்த ஆசையைப் போலப் பாடங் கேட்குதலி லாசை யுடையவனாகி, **சித்தி ரப் பாவையின்** – எழுதிய சித்திரப் பிரதிமையினுடைய, **அத்தகவு** – அந்த அசைவறு குணம் போன்று, **அடங்கி** – மன மொழி மெய்களை

அடக்கியிருந்து, **செவிவாயாக நெஞ்சுகளனான** - (பசித்துண்பவனுக்கு வாயும் வயிறும் போலத் தனக்குச்) செவியு மனமுமாக, **கேட்டவை கேட்டவை** - ஆசிரியனிடத்திற் கேட்டகேட்ட நூற் பொருள்களை, **விடாதுளத் தமைத்து** - (பசித்துண்போ னுண்ணும் பொருளை யொழுக விடாது வயிற்றினிடத்து அமைத்துக் கொள்வது போல) ஒழுக விடாமல் தன் மனத்தமைத்துக் கொண்டு, **போவென** - ஆசிரியன் போ வென்று சொல்ல, **போத லென் மனார் புலவர்** - போவதென்று சொல்லுவர் புலவர், **எ—று.**

உண்டவை தங்குமிடதலால் களனென்றது இங்கே. வயிற்றை. கேட்டவை கேட்டவை - அடுக்கு.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.: கோடல் மரபு கூறுங்காலை** - பாடங் கேட்டலினது வரலாற்றைச் சொல்லும் பொழுது, **பொழுதொடு சென்று**—தகுங் காலத்திலே போய், **வழிபடல் முனியான்** - வழிபாடு செய்தலில் வெறுப்பில்லாதவனாகி, **குணத்தொடு பழகி** - ஆசிரியன் குணத்தோடு பொருந்தப் பயின்று, **அவன் குறிப்பிற் சார்ந்து** - அவன் குறிப்பின் வழியிலே சேர்ந்து, **இரு என இருந்து** - இருவென்று சொன்னபின் இருந்து, **சொல் எனச் சொல்லி** - படியென்று சொன்னபின் படித்து, **பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி** - பசித்துண்பவனுக்கு உணவினிடத்துள்ள ஆசைப் போலப் பாடங் கேட்டலில் ஆசை யுடையவனாகி, **சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கி** - சித்திரப்பாவையைப் போல அவ் வசைவறு குணத்தினோடு அடங்கி, **செவி வாய் ஆக நொஞ்சு களன் ஆக** - காதானது வாயாகவும் மனமானது கொள்ளு மிடமாகவும், **கேட்டவை கேட்டு** - முன் கேட்கப்பட்டவற்றை மீண்டுங் கேட்டு, **அவை விடாது உளத்து அமைத்து** - அப்பொருள்களை மறந்துவிடாது உள்ளத்தின்கண் நிறைத்துக் கொண்டு, **போ எனப் போதல்** - போ என்ற பின் போகுதலாகும், **என்மானர் புலவர்** - என்று சொல்லுவர் புலவர், **எ—று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். கேடல் மரபு கூறும் காலை** - பாடங்கேட்டலினது வரலாற்றைச் சொல்லும்பொழுது, - **பொழுதோடு சென்று** - தகுங்காலத்திலே போய், - வழிபடல் முனியான் - வழிபாடுசெய்தலில் விருப்புடையவனாகி, - குணத்தொடு பழகி - ஆசிரியனது குணத்தொடு பாங்காகப்பயின்று, - அவன் குறிப்பிற் சார்ந்து - அவன் குறிப்பின்வழியே சேர்ந்து, - **இரு என இருந்து** - ஆசிரியன் இருவென்று சொன்னபின் **இருந்து,** - **சொல் எனச் சொல்லி**

– படியென்றபின் படித்து – **பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி** – தாகமுற்றோனுக்குப் பாநீயத்திற்செல்லு மவாப்போலப் பாடங்கேட்டலில் அவாவுடையோனாய், – **சித்திரப்பாவையின் அத்தகவு அடங்கி** – எழுதியபாவையைப் போல அவ்வகைவறு குணத்தினோடடங்கி, – **செவி வாயாக** – காது கல்வியாகிய நீரைப்பருகும் வாயாகவும், – **நெஞ்சு களனாக** – மனமானது கொள்ளுமிடமாகி யவயிறாகவும், – **கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைத்து** – ஆசிரியனிடத்துக் கேட்ட கேட்ட நூற்பொருள்களை மறந்துவிடாது மனத்தில் நிறைத்துக் கொண்டு, **போ எனப் போதல்** – போவென்று சொன்னபின் போகுதலாகும், – **என்மனார் புலவர்** – என்று சொல்லுவர் புலவர். **எ–று.**

> கோடல். கொள்+தல் = பெற்றுக் கொள்ளுதல். முனியான் என்பதற்கு வெறுப்பற்றவனாய் என்பது சொற் பொருளாயினும் விருப்புடையோனா யென்று பலிதார்த்த முரைக்கப்பட்டது. பசியைப் பொறுத்திருத்தலினுந் தாகத்தைப் பொறுத்திருத்தலராதலின் பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி யென்று வேட்கை மிகுதி தோன்றக் கூறினார்,
>
> மிக்க வவாவுடன் கற்றல் வேண்டுமென்பதுணர்த்துதற்கு என்க. பருகுதல் வினைக்கியையப் பாநீயமென்றுரைக்கப் பட்டது. பாநீயம் பருகப்படும் நீர் மோர் முதலிய பதார்த்தம்,
>
> கேட்டவை, கேட்டவை என்னும் அடுக்கு பன்மைப் பொருளில் வந்தது. கேட்டவை கேட்டு அவை விடாதுளத்து அமைத்து என்றுபகுத்து முன்கேட்கப் பட்டவற்றை மீட்டுங் கேட்டு அப்பொருள்களை விடாதுளத்தின்கண் நிறைத்துக் கொண்டு என்றுரை செய்தலு முண்டு. இவ்விஷயம், ஆசாற்சார்ந்து அவை அமைவரக் கேட்டல் என்னும் பிற்சூத்திரக் கூற்றில் அடங்கியிருத்தலால் எவ்வாறுரைத்தல் நன்றென்பதை ஓர்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: கோடல் மரபு** – பாடங்கேட்டலின் விதத்தை, **கூறும் காலை** – சொல்லும் பொழுது, **பொழுதொடு சென்று** – (தக்க) காலத்திலே போய், **வழிபடல் முனியான்** – வழிபாடு செய்தலில் வெறுப்பில்லாதவனாய் (மிக்க விருப்பமுள்ளவனாய்) **குணத்தொடு பழகி** ( ஆசிரியனது) குணத்துக்குத் தக்கபடி பழகி, **அவன் குறிப்பின் சார்ந்து** – அவன் குறிப்பின் வழியிலே சேர்ந்து (தான் வரலாமென்ற ஆசிரியன் கருத்தைக் குறிப்பால் நுட்பமாக

அறிந்து கிட்டி), **இரு என இருந்து** – இரு என்று (ஆசிரியன்) சொன்னபின்பு இருந்து, **சொல் என சொல்லி** – படி என்று (ஆசிரியன்) சொன்னபின்பு படித்து, **பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி** – மிக்க தாகமுள்ளவன் நீரினிடத்துக் கொள்ளும் விருப்பம் போலத் தான் பாடங் கேட்டலில் மிக்க விருப்பமுடையவனாய், **சித்திரம் பாவையின் அத்தகவு அடங்கி** – சித்திரத்தி லெழுதிய பிரதிமையினது அசைவில்லாத அக்குணம் போல மனமொழி மெய்களடங்கி, **செவி வாய் ஆக** – காது (கல்வியாகிய நீரைப் பருகும்) வாயாகவும், **நெஞ்சுகளன் ஆக** – மனம் கொள்ளுமிடமாகிய வயிறாகவும், **கேட்டவை கேட்டவை** – (ஆசிரியனிடத்திற்) பலமுறைகேட்ட நூற்பொருள்களை, **விடாது உளத்து அமைத்து** – மறந்து விடாமல் (தன்) மனத்தில் நிரம்பப் பதிய வைத்துக் கொண்டு, **போ என போதல்** – போ என்று (ஆசிரியன்) சொன்ன பின்பு தான் மீண்டும் போகுதலாம், **என்மனார் புலவர்** – என்று சொல்வர் அறிவுடையோர்; எ—று. களன்– இங்கே, வயிறு என்றபடி.

> இனி, சொல்லெனச் சொல்லி என்பதற்கு, ஆசிரியன் கீழ்நடந்த பாடத்தைச் சொல் என்றவுடனே தான் சொல்லி என்றலுமாம், கேட்டவை கேட்டவை, அடுக்கு – மிகுதிப்பொருளது. கோடல்=கொள்+தல்: கொள்ளுதல்: ஆசிரியன் கற்றுக் கொடுப்பதை மாணாக்கன் பெற்றுக் கொள்ளல்.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:– கோடல் மரபு கூறுங்காலை** – பாடங் கேட்டலினது வரலாற்றைச் சொல்லும்பொழுது, **பொழுதொடு சென்று** – தகுங்காலத்திலே போய், **வழிபடல் முனியான்** – வழிபாடு செய்தலில் வெறுப்பில்லாதவனாகி, **குணத்தொடு பழகி** – ஆசிரியன் குணத்தோடு பொருந்தப் பயின்று, **அவன் குறிப்பிற் சார்ந்து** – அவன் குறிப்பின் வழியிலே சேர்ந்து, **இரு என இருந்து** – இரு என்று சொன்னபின் இருந்து, **சொல் எனச் சொல்லி** – படி என்று சொன்னபின் படித்து, **பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி** – (தாகம் மிகுந்து நீர்) குடிப்பவனுக்கு (நீரிடத்துள்ள ஆசை) போலப் பாடங்கேட்டலின் ஆசையுடையவனாகி, **சித்திரப்பாவையின் அத்தகவு அடங்கி** – சித்திரப்பாவையைப் போல அவ்வசைவறு குணத்தினோடு அடங்கி, **செவி வாய் ஆக நெஞ்சுகளன் ஆக** – (பசித்துண்பவனுக்கு வாயும் வயிறும்போலத் தனக்குக்) காதானது வாயாகவும் மனமானது வயிறாகவும், **கேட்டவை கேட்டு** – முன் கேட்கப்பட்டவற்றை மீட்டுங்கேட்டு, **அவை விடாது உளத்து அமைத்து** – அப்பொருளைக்களை மறந்து விடாது உள்ளத்தின் கண் நிறைத்துக்கொண்டு, **போ எனப் போதல்** – போ என்றலின் போகுதலாகும், **என்பமனார் புலவர்** – என்று சொல்லுவர் புலவர். **எ—று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** பாடங் கேட்கையினது வரலாற்றைச் சொல்லும் பொழுது, தகுங்காலத்தில் போய், வழிபாடு செய்தலில் வெறுப்பில்லாதவனாகி (ஆசிரியன்) குணத்தோடு (பொருந்தப்) பயின்று, அவன் குறிப்பின் (வழியிலே) சேர்ந்து, இருவென்று சொன்னபின் இருந்து, படியென்று சொன்னபின் படித்து, (பசித்து) உண்பவன் (விருப்பத்தைப்) போன்ற (மிக்க) விருப்பத்தையுடையவனாகிச், சித்திரப்பாவையைப்போல அவ் (அசைவறு) குணத்தினோ டடங்கிக், காதானது வாயாகவும், மனமானது கொள்ளும் இடமாகவும், (முன்) கேட்கப் பட்டவற்றை (த்திரும்பிக்) கேட்டு, அப் பொருள்களை மறந்துவிடாமல் உள்ளத்தின்கண் நிறைத்துக்கொண்டு, போவென்று சொல்லப் போகுதலாகு மென்று அறிவுடையோர் சொல்லுவர். எ–று.

> உண்டவை தங்கும் இடமாதலால், களன் என்றது இங்கே வயிற்றை. கேட்டவை கேட்டவை–அடுக்கு; மிகுதிப் பொருளது. இனி, 'சொல்லெனச் சொல்லி' என்பதற்கு–ஆசிரியன் கீழ் நடந்த பாடத்தைச் சொல் என்ற வுடனே தான் சொல்லி என்றலுமாம்.

## கா.நமச்சிவாய முதலியார்

**கோடல் மரபு** – பாடங் கேட்டலின் வரலாற்றை, **கூறும் காலை** – சொல்லும்பொழுது, **பொழுதொடு** – தகுங்காலத்தில், **சென்று** – போய், **வழிபடல்** – (ஆசிரியனுக்கு) வழிபாடு செய்தலில், **முனியான்** – வெறுப்பில்லாதவனாகி, **குணத்தொடு** – (ஆசிரியன்) குணத்தோடு, **பழகி** – பயின்று, **அவன் குறிப்பின்** – அவன் குறிப்பின் (வழியிலே), **சார்ந்து** – சேர்ந்து, **இரு என** – உட்காரு என்று சொன்னபின், **இருந்து** – அமர்ந்து, **சொல் என** – படியென்று சொன்னபின், **சொல்லி** – படித்து, **பருகுவன் அன்ன** – (பசித்து) உண்பவனுக்கு உணவினிடத்துண்டான விருப்பத்தைப் போன்ற, **ஆர்வத்தன் ஆகி** – மிக்க விருப்பத்தை யுடையவனாகி, **சித்திரப் பாவையின்** – சித்திரத்தில் எழுதிய பாவையைப் போல, **அத்தக அடங்கி** – அதற்கொத்த தன்மை பொருந்த அடங்கி, **செவி** – காதானது, **வாய் ஆக** – வாயாகவும், **நெஞ்சு** – மனமானது, **களன் ஆக** – கொள்ளுமிடமாகவும், **கேட்டவை** – கேட்ட பொருள்களை, **கேட்டு** – (திரும்பக்)கேட்டு, **அவை** – அப்பொருள்களை, **விடாது** – மறந்து விடாமல், **உளத்து** – உள்ளத்தின்கண், **அமைத்து** – நிறைத்துக் கொண்டு, **போ என** – (ஆசிரியன்) போவென்று சொல்ல, **போதல்** – போகுதலாகும், **என்மனார்** – என்று சொல்லுவர், **புலவர்**

– அறிவுடையோர். **என்மனார்** – எதிர்கால வினைமுற்று; **மன்**–எதிர்கால இடைநிலை.

## மோசகு பொன்னையா

ஏற்ற காலத்தில் ஆசிரியரிடஞ் சென்று, அவரை வெறுப்பின்றி வழிபட்டு, ஆசிரியர் குணத்திற்கேற்பப் பழகி, அவர் குறிப்பின்வழி நின்று, இடையறிந்து அவரை அணுகி, அவர் இரு எனச்சொல்லின் இருந்து, அவர் சொல் எனக் கூறின் சொல்லி, பசியுடையோன் உணவில் விருப்புக் கொள்வதே போல் பாடங் கேட்டலில் ஆர்வம் கொண்டு, ஓவியம்போல் மன மொழி மெய் அடங்கி, உண்பவனது வாயையும் வயிற்றையும் ஒப்பத் தன் செவியையும் மனத்தையும் அமைத்துக் கேட்டு, கேட்டவற்றை விடாது ஏற்று அடக்கி, முடிவில் ஆசிரியரிடம் விடைபெற்றுப் போதல் பாடங் கேட்கும் மரபாகும், எ–று.

**(39)**

### *பயிற்சி*

**40.** **நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்**
**பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்**
***ஆசாற் சார்ந்தவை [1]யமைவரைக் கேட்டல்**
**அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்**
**வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை**
**கடனாக் கொளினே [2]மடநனி யிகக்கும்**

**நூல் பயில் இயல்பே நுவலின் வழக்கு அறிதல்**
**பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்**
**ஆசான் சார்ந்து அவை அமை வரக் கேட்டல்**
**அம் மாண்பு உடையோர் தம் ஒடு பயிறல்**
**வினாதல் வினாயவை விடுத்தல் என்று இவை**
**கடன் ஆகக் கொளின் மட நனி இகக்கும்**

---

பாட வேறுபாடு:–

1. யமைவுற
2. மடனனி

*குறிப்பு :–

**இவ்வடி சில பிரதிகளில் இல்லை என்பார் உ.வே.சா.**

nūl payil iyalpē nuvalin vaḷakku aṛital
pātam pōṛṛal kēṭṭavai ninaiṭṭal
āsān sārnṭu avai amai varak kēṭtal
am māṇpu utaiyōr ṭam otu payiṛal
vinātal vināyavai vituṭṭal enṛu ivai
katan ākak koḷin mata nani ikakkum

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

### Methods of study

Method of study: Strenuous exertions are to be put forth by the scholar in the attainment of both the colloquial and the classical parts of the language; constantly revising and reflecting; and digesting what has been learnt; and in case of forgetfulness having recourse to his teacher to have all difficulties and doubts fully explained; cultivating the acquaintance of all well-educated persons; proposing questions to them for removing of doubts; and answering their questions proposed to him for solution; by the observance of these laws ignorance will vanish

## ஒப்புமைப் பகுதி

கேட்டவை கேட்டவை நிரந்தரம் பாடம்
போற்றலின் ஏட்டில் தானே பொறித்தலும்
உரைநுழைத் துணர்ந்த ஒண்பொருளை உள்ளுறுத்தலும்
மயலற் றொருபுடை பயில்மாணாக்கரின்
ஐயமெய் தியது ஐயம் அகற்றலும்
மெய்யுணர்வி னிலுறப் பிறர்க் கவைவிளம்பலும்
எய்திய திழவா ததற்கு இலக்கணமே

(மாற.அலங்.:55)

தோய்ந் தவை யன்றியுந் தோயாதவற்றை
ஆய்ந்தெழு காலத்த தன்பயன் எனலாய்
விழுமிய திறத்தினுள் விழுமிய தொன்றாம்
சொல்லொடு சொல்லினைத் தொகுத்தலும் தொலையாக்
கல்வியில் பயிறலும் கடனா கும்மே

(மாற.அலங்.:56)

## மயிலை நாதர்

**இ—ள்.:** இவ்வகை யொழுகல் நூல் பயிறலாவது, **எ—று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** இதுவும் அது.

**இ—ள்.:** இவ்வாறு நூலைப் பயின்றவர்க்கு அறியாமை மிகுதியும் போம், **எ—று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** சீடர் நூலைச் சிந்திக்கும் முறைமை இவை யெனக் கூறுகின்றது.

**இ—ள்.: நூல் பயில் இயல்பே நுவலின்** – மாணாக்கன் நூலைச் சிந்திக்கும் முறைமையைச் சொல்லின், **வழக்கறிதல்** – நூலிலக்கணத்தின் வழக்கை அறிதலும், **பாடம் போற்றல்** – இடை விடாது பாடத்தைப் போற்றலும், **கேட்டவை நினைத்தல்** – கேட்ட கேட்ட பொருளை யெல்லாம் மீண்டும் மீண்டுணர்தலும், **ஆசாற் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்** – ...... , **அம்மாண்புடையோர் தம்மொடு பயிறல்** – தன்னொடொத்துக் கேட்கும் மாண்புடைய மாணாக்கரோடு பயிறலும், **வினாதல்** – அந்நூற் பொருளைத் தானாய் வினாவுதலும், **வினாயவை விடுத்தல்** – பிறர் வினாய பொருளுக்குத் தான் விடை கூறலும், **என்றிவை கடனாக் கொளினே** – என்று சொல்லப்பட்ட இவை யனைத்தும் முறைமைப்பாடாகக் கொள்ளின், **மடநனி இகக்கும்** – அறியாமை மிகவும் நீங்கும் **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ—ள்.: நூல்பயி லியல்பு** – நூலைக் கற்றலி னியல்பை, **நுவலின்** – சொல்லினால், **வழக்கு** – உலக வழக்குஞ் செய்யுள் வழக்குமாகிய விருவகை நடையையும், **அறிதல்** – ஆராய்ந்தறிதலும், **பாடம்** – கேட்ட பாடத்தை, **போற்றல்** – பலகாற் சிந்தித்தலும், **கேட்டவை** – தான் கேட்ட பொருள்களை, **நினைத்தல்** – எண்ணுதலும், **ஆசான்** – ஆசிரியனை, **சார்ந்து**—அடுத்து, **அவை**—அவற்றை, **அமைவர** – குறைவு தீர, **கேட்டல்** – கேட்டலும், **அம்மாண்பு** – அக் கல்விமாட்சிமையை, **உடையோர்** – தம்மொடு உடையவரோடு, **பயிறல்** – பழகுதலும், **வினாதல்** – தான் ஐயுற்ற பொருளை வினாவுதலும், **வினாயவை விடுத்தல்** – அவர் வினாவியவைகளுக்கு

உத்தரங் கொடுத்தலும், **என்று** – என்று சொல்லப்பட்ட, **இவை** – இச் செயல்களை, **கடனா** – முறையாக, **கொளின்** – மாணாக்கன் கொண்டால், **மடம்** – அறியாமையானது, **நனி**–மிகவும், **இகக்கும்** – அவனை விட்டு நீங்கும், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: நூல் பயிலியல்பு** – நூலொடு பழகுந் தன்மைமைய, **நுவலின்** – சொல்லுங் கால், **வழக்கறிதல்** – உலகவழக்கம் செய்யுள் வழக்க மென்னும் இருவகை வழக்கங்களை யறிதலும், **பாடம் போற்றல்** – மூலபாடங்களை மறவாமற் பாதுகாப்பதும், **கேட்டவை நினைத்தல்** – ஆசிரியனிடத்தில் கேட்ட நூற் பொருள்களை அடிக்கடி சிந்தித்தலும், **ஆசாற் சார்ந்து** – ஆசிரியனை மறுபடியும் அடுத்து, **அவை** – முன்கேட்ட நூற் பொருள்களையே, **அமைவர** – தன்மனத்துளமைய, **கேட்டல்** – மறுபடியுங் கேட்குதலும், **அம் மாண்புடையோர் தம்மொடு பயிறல்** – அக் கற்குந் தொழிலாளரோடு பழகுதலும், **வினாதல்** – தான் சந்தேகப்பட்டவற்றைக் குறித்து அவர்களையும் அவைக்களத்தாரையும் வினாவுதலும், **வினாயவை** – தான் வினாவி யறிந்து கொண்டவற்றை, **விடுத்தல்** – தன்னைச் சந்தேகப்பட்டு வினாவினோர்க்கு விடைகொடுத்தலும், **என்றிவை** – என்று சொல்லப்பட்ட இவற்றை யெல்லாம், **கடனாகக் கொளின்** – முறையாகக் கொள்வானாயின், **மடம்** – அறியாமையானது, **நனி இகக்கும்** – மிகுதியும் நீங்கிப் போம், **எ–று.**

என்ற இவை யென்பது என்றிவை யெனத் திரிந்து நின்றது.

இகத்தல் – நீங்குதல்.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

உரை :– **களி** – கள்குடிப்பவனும், **மடி** – சோம்பலுடையவனும், மானி – செருக்குடையவனும், **காமி** – காமமுடையவனும், **கள்வன்** – திருடனும், **பிணியன்** – நோயாளியும், **ஏழை** – அறிவில்லாதவனும், **பிணக்கன்** – மாறுபாடுடையவனும், **சினத்தன்** – கோபமுடையவனும், **துயில்வோன்** – மிகத் தூக்கமுடையவனும், **மந்தன்** – புத்தி நுட்பமில்லாதவனும், **தொல்நூற்கு அஞ்சி தடுமாறு உளத்தன்** – பழைய நூல்களின் பரப்பை (க்கண்டு) பயந்து தடுமாறுகின்ற மனதுடையவனும், **தறுகணன்** – இரக்கமில்லாதவனும், **பாவி** – பாவத்தொழில் செய்பவனும், **படிறன்** – பொய் சொல்பவனும், **இன்னோர்க்கு** – (ஆகிய) இப்படிப்பட்டவர்க்கு, **நூல் பகரார்** – நூலைக் கற்பியார் (அறிவுடையோர்.)

குறிப்பு :-

'ஏழை' என்பதற்குக் கைப்பொருளில்லாதவன் எனவும் பொருள் கொள்ளலாம், அவன் மனம் ஒரு நிலையில் ஊன்றி இராமையால். **தறுகணன்** – அஞ்சத் தக்கவற்றை அஞ்சா தவனுமாம்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: நூல் பயில் இயல்பு நுவலின்** – நூலைக் கற்றலினியல்பைச் சொல்லின், **வழக்கு அறிதல்** – உலக வழக்குஞ் செய்யுள் வழக்குமாகிய இருவகை நடையையும் ஆராய்ந்தறிதலும், **பாடம் போற்றல்** – மூல பாடங்களை மறவாது பாதுகாத்தலும், **கேட்டவை நினைத்தல்** – தான் கேட்ட பொருள்களைப் பலகாற் சிந்தித்தலும், **ஆசாற் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்** – ஆசிரியனை யடுத்து அவைகளைத் தன்மனத்துள் அமையும்படி மீட்டுங் கேட்டலும், **அம்மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்** – அக் கற்குந் தொழிலை யுடையவரோடு பழகுதலும், **வினாதல்** – தான் ஐயுற்ற பொருளை அவரிடத்து வினாவுதலும், **வினாயவை விடுத்தல்** – அவர் வினாவியவை களுக்குத் தான் உத்தரங் கொடுத்தலும், **என்ற இவை கடனாக் கொளின்** – என்று சொல்லப்பட்ட இச் செயல்களை முறையாக மாணாக்கன் கொண்டால், **மடம் நனி இகக்கும்** – அறியாமையானது அவனை மிகுதியும் விட்டு நீங்கும், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். நூல் பயில இயல்பு நுவலின்** – நூலில் அப்பியாசஞ்செய்யுந் தன்மையைச் சொல்லுங்கால், – **வழக்கு அறிதல்** – உலகவழக்கும் செய்யுள் வழக்குமாகிய இருவகை நடைகளையும் ஆராய்ந்துணர்தலும், – **பாடம் போற்றல்** – மூலபாடங்களை மறவாமற் பாதுகாத்தலும், – **கேட்டவை நினைத்தல்** – ஆசிரியனிடத்திற் கேட்ட நூற்பொருள்களைப் பலகாற் சிந்தித்தலும், – **ஆசாற் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்** – ஆசிரியன் அணுகி முன் கேட்ட நூற்பொருள்களையே அமையும்படி மீட்டுங் கேட்டலும், – **அ மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்** – அவ்வாறு கற்குந் தொழிலாளரோடு அப்பியாசஞ்செய்தலும், – **வினாதல்** – தான் ஐயுற்ற பொருளை அவரிடத்து வினாவுதலும், – **வினாயவை விடுத்தல்** – அவர் வினாவியவைகளுக்குத் தான் உத்தரங்கொடுத்தலும், – **என்றிவை கடனாக் கொளினே** – ஆகிய இச்செயல்களை நியதியாக மாணாக்கன்கொண்டாற்றான், – **மடம் நனி இகக்கும்** – அறியாமை அவனை மிகவும் விட்டு நீங்கும். எ–று.

தடங்கு என்பது தடக்கு எனவும், பிணங்கு என்பது பிணக்கு எனவும் வந்தவாறே வினைமுதனிலையிலிருந்த நகர மெல்லொற்று வல்லொற்றாய்த் திரிந்து வழங்கு என்பது வழக்கு என்று வந்தது.

வழங்குதல் = மொழிதல்; வழக்கு = மொழியப்பட்டது. அது கத்தியரூபமும், பத்தியரூபமும் என்று இருவகைப்படும். கத்தியரூப மெனினும் வசனநடையெனினுமொக்கும், பத்தியருப மெனினுஞ் செய்யுள் நடையெனினு மொக்கும். இங்கே வழக்கறிதலென்றது அவ்விருவகை வழக்கையு மறிதலை. "ஒருமொழி தொடர்மொழி" என்னுஞ் சூத்திரத்தில் "வழக்கொடு செய்யுளின்" என்பதனாலு முணர்க.

அம்மாண்புடையோர் என்றது வழக்கறிதல், பாடம் போற்றல், கேட்டவை நினைத்தல், ஆசாற்சார்ந்தவை யமைவரக் கேட்டலென்னும் இயல்புகளுடைய மாணாக்கரை, மாணக்க னெனினும், வித்தியார்த்தி யெனினும் ஒக்கும். செவ்வி தினுரைப்ப வவ்விருகாலு மையறு புலமை மாண்புடைத் தாகும்" என்பதனால் ஆசிரியனிடம் பலதரங் கேட்டுத் தன்போலும் வித்தியார்த்திகளுடன் பயின்றபோதும் புலமை நிரம்பாது குறையுற்றிருக்குமாதலின், மடம் இகக்கு மென்னாது நனியிகக்குமென்று பரிமாணப்படுத்திக் கூறினார்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: நூல் பயில் இயல்பு** – நூற்பயிற்சி செய்தலின் தன்மையை, **நுவலின்** – சொல்லுமிடத்து, **வழக்கு அறிதல்** – (உலகவழக்குச் செய்யுள் வழக்கு என்னும்) இருவகை வழக்குகளை அறிதலும், **பாடம் போற்றல்** – மூலபாடங்களை (மறவாமற்) பாதுகாத்தலும், **கேட்டவை நினைத்தல்** – (ஆசிரியனிடத்துக்)கேட்ட நூற்பொருள்களை(ப் பலமுறை) சிந்தித்தலும், **ஆசான் சார்ந்து அவை அமைவர கேட்டல்** – ஆசிரியனை அடுத்து முன்கேட்ட அவற்றையே குறைவு தீர மனத்திற்பதியும்படி மறுபடியுங் கேட்டலும், **அ மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்** – அவ்வாறு கற்குந் தொழிலுடைய மாணாக்கர்களோடு பழகுதலும், **வினாதல்** – (தான் சந்தேகித்த பொருள்களைக் குறித்து அவர்களைக்) கேள்வி கேட்டலும், **வினாயவை விடுத்தல்** – (அவர்கள் கேட்ட கேள்விகட்கு (த் தான்) உத்தரஞ்

சொல்லுதலும், **என்ற இவை** – என்று சொல்லப்பட்ட இச் செயல்களை யெல்லாம், **கடன் ஆ கொளினே** – (தனக்கு) முறைமையாக (மாணாக்கன்) கொண்டால்தான் **மடம்** – அறியாமையானது, **நனி** – மிகுதியும், **இகக்கும்** – (அவனை விட்டு) நீங்கும்; **எ–று.**

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– நூல் பயில் இயல்பு நுவலின்** – நூலைக் கற்றலின் இயல்பைச் சொல்லின், **வழக்கு அறிதல்** – உலகவழக்கும் செய்யுள் வழக்குமாகிய இருவகை நடையையும் ஆராய்ந்தறிதலும், **பாடம் போற்றல்** – மூலபாடங்களை மறவாது பாதுகாத்தலும், **கேட்டவை நினைத்தல்** – தான் கேட்ட பொருள்களைப் பலகாற் சிந்தித்தலும், **ஆசான் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்** – ஆசிரியனையடுத்து அவைகளைத் தன்மனத்துள் அமையும்படி மீட்டுங் கேட்டலும், **அம் மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்** – அக்கற்கும் தொழிலையுடையரோடு பழகுதலும், **வினாதல்** – தான் ஐயுற்ற பொருளை அவரிடத்து வினாவுதலும், **வினாயவை விடுத்தல்** – அவர் வினாவியவைகளுக்குத் தான் உத்தரங்கொடுத்தலும், **என்ற இவை கடனாக் கொளின்** – என்று சொல்லப்பட்ட இச்செயல்களை முறையாக மாணாக்கன் கொண்டால், **மடநனி இகக்கும்** – அறியாமையானது அவனைப் பெரும்பாலும் விட்டு நீங்கும். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** நூலைக் கற்றலின் இயல்பைச் சொல்லினால் (உலக வழக்கும் செய்யுள் வழக்குமாகிய இருவகை) நடையையும் ஆராய்ந்தறிதலும், (கேட்ட) பாடத்தை (ப்பலகால்) சிந்தித்தலும், (தான்) கேட்ட பொருள்களை எண்ணுகலும், ஆசிரியனை அடுத்து, அவற்றைக் குறைவுதீரக் கேட்டலும், அக்க கல்வி மாட்சிமையை உடையவரோடு பழகுதலும், (தான் ஐயுற்ற பொருளை) வினாவுதலும், (அவர்) வினாவியவைகளுக்கு உத்தரங் கொடுத்தலும் என்று சொல்லப்பட்ட இச் செயல்களை முறையாக (மாணாக்கன்) கொண்டால் அறியாமையானது மிகவும் (அவனை விட்டு) நீங்கும். **எ–று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**நூல் பயில் இயல்பு** – நூலைக்கற்கும் முறையை, **நுவலின்**– சொல்லப்புகின், **வழக்கு** – (உலக வழக்கும் செய்யுள் வழக்கும் ஆகிய இருவகை) நடையையும், **அறிதல்** – ஆராய்ந்தறிதலும், **பாடம்** – மூல பாடத்தை, **போற்றல்** – (பலகால்) சிந்தித்தலும், **கேட்டவை** – (தான்) கேட்ட

பொருள்களை, **நினைத்தல்** – எண்ணுதலும், **ஆசான்** – ஆசிரியனை, **சார்ந்து** – அடுத்து, **அவை** – அவற்றை, **அமைவர** – பொருந்த, **கேட்டல்** – மீட்டுங் கேட்டலும், **அம்மாண்பு** – அக்கல்வி மாட்சிமையை, **உடையோர் தம்மொடு** – உடையவராகிய மாணாக்கரோடு, **பயிறல்** – பழகுதலும், **வினாதல்** – (தான் ஐயுற்ற பொருளை அவரை) வினாவுதலும், **வினாயவை விடுத்தல்** – (அவர் வினாவியவைகளுக்குத் தான்) விடைகொடுத்தலும், **என்ற** – என்று சொல்லப்பட்ட, **இவை** – இச்செயல்களை, **கடன் ஆ** – முறைமையாக, **கொளின்** – மாணாக்கன் கொண்டால், **மடம்** – அறியாமையானது, **நனி** – மிகவும், **இருக்கும்** – (அவனை விட்டு) நீங்கும்.

## மோசசு பொன்னையா

நூலைப் பயிற்சி செய்தலின் தன்மையாவது: உலக வழக்கும் செய்யுள் வழக்குமாகிய இருவகை வழக்கையும் அறிதலும், மூலபாடங்களை மனத்தில் அமைத்தலும், தான் ஆசிரியர்வழி அறிந்தவற்றைப் பலகாலும் மனத்தில் சிந்தித்தலும், ஆசிரியரை அடுத்து முன் கேட்ட பாடம் குற்றந்தீர மனத்தில் பதியும்படி மீண்டும் கேட்டலும், கற்கும் அத்தொழிலுடையாரொடு பழகுதலும், தான் ஐயுற்ற பொருளை அவரிடம் வினாவுதலும், அவர் வினாவியவற்றுக்கு விடை சொல்லுதலும் ஆகிய இவற்றைக் கடமையாகக் கொள்வதாகும். அவ்வாறாயின், அறியாமை மிகுதியும் விட்டு நீங்கும், **எ–று.**

**(40)**

**41. ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்**
**பெருக நூலிற் பிழைபா டிலனே**

**ஒரு குறி கேட்போன் இருகால் கேட்பின்**
**பெருக நூலின் பிழைபாடு இலனே**

oru kuṟi kēṭpōṉ irukāl kēṭpiṉ
peruka nūliṉ piḻaipāṭu ilaṉē

**என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

### Learn a second time

He who has studied a work once and has gone over it (carefully) a second time will overcome difficulties and understand it better.

## ஒப்புமைப் பகுதி

**ஒரு காற் கேட்டவன்பின் கேட்கிற்**
**கள்ளம் மிக விலைமுக்காற் கேட்டபின் முறை யறியும்**
**கற்றல்கால் பயிற்சி அரை பிறர்க்கு ஓதின் முற்றே**

(சுவாமி.: 7:3–4)

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்**, இதுவும் அது.

**இ–ள்.:** ஒருகால் கேட்ட துணையானே அமையாது இருகால் கேட்பானாகில் அந்நூலின்கண் பிழைபாடு மிகுதியும் இலன், **எ–று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்**, நூலைக் கற்றுச் சிந்தித்துத் தெளிவோனது இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.: ஒரு குறி கேட்போன்** – ஒருகால் கேட்டுச் சிந்தித்துத் தெளிய வல்லான், **இரு காற் கேட்பின்** – இரண்டு முறை கேட்டானாயின், **பெருகி நூலிற்** – மிகுதியாகவும் நூலிலக்கண வழக்கிலே, **பிழை பாடிலனே** – குற்றப்பாடு இல்லாதவனாம், **எ–று.**

எனவே சிறுபான்மை நூலிலே குற்றப்பாடு பெறுமென்க.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: ஒருகுறி** – ஒரு தரம், **கேட்போன்** – ஒரு நூலைப் பாடங் கேட்பவன், **இருகால்** – இரண்டுதரம், **கேட்பின்** – கேட்டானாயின், **பிழைபாடு** – அந்நூலிற் பிழைபடுதல், **பெருக** – மிகுதியும், **இலன்** – இலனாவன், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.:** ஒரு நூலை யொருகாற் கேட்பவன் இரு தரங் கேட்பானாயின், அவன் அந்த நூலிலே மிகுதியும் பிழைபடுத லிலனாவன், **எ–று.**

குறி யென்றது, இங்கே காலக்கிரமத்தை யுணர்த்தி நின்றது.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஒருகுறிகேட்போன்** – ஒருநூலை ஒருதரம் பாடம்கேட்பவன், **இருகால் கேட்பின்** – இரண்டுதரம் கேட்பானானால், **நூலில்** – (அவன்) அந்த நூலிலே, **பிழைபாடு பெருக இலன்** – (ஐயந்திரிபுகளாகிய) குற்றங்கள் மிகுதியும் இல்லாதவனாவன்.

குறிப்பு :–

குறி – காலக்கிரமம்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஒருகுறி கேட்போன்** – ஒரு நூலைப் பாடங் கேட்பவன், **இருகால் கேட்பின்** – ஒருதரங் கேட்ட அளவின் அமையாது இரண்டுதரங் கேட்டானாயின், **நூலில் பெருகப் பிழைபாடு இலன்** – அந் நூலிலே மிகுதியும் பிழைபடுதல் இலனாவன், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ஒருகுறி கேட்போன்.** – ஒரு நூலைக்கேட்பவன், – **இருகால் கேட்பின்** – ஒருதரங்கேட்ட அளவில் விடாது இருதரம் பாடங்கேட்பானாயின் – **நூலில் பிழைபாடு பெருக இலன்** – அந்நூலிலே பிழைபடுதல் மிகுதியு மிலனாவன். **எ–று.**

மடநனியிகக்கு மென்பதற்குரைத்த நிருபணசாரத்தைப்
பெருகநூலிற் பிழைபாடிலன் என்பதற்குக் கொண்டு
சொன்னயமுணர்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஒரு குறி கேட்போன்** – ஒரு நூலை ஒருதரம் பாடங்கேட்டவன், **இரு கால் கேட்டபின்** – (ஒரு தரங் கேட்டவளவில் அமையாமல்) இரண்டுதரங் கேட்டானாயின், (அவன்), **நூலின்** – அந்நூலில், **பிழைபாடு** – தவறுபடுதல், **பெருக இலன்** – மிகுதியும் இலனாவன்; **எ–று.**

பிழை–ஐயம் திரிபு, இது, கீழ்ச் சூத்திரத்திற் கூறின,
'ஆசாற் சார்ந்து அவை அமைவரக் கேட்ட' லின் பயன்;
அடுத்த சூத்திரமும் இவ்வாறே.

### பவானந்தம் பிள்ளை

இ—ள். ஒருகுறி கேட்போன் – (ஒருநூலை) ஒருதரம் பாடங்கேட்பவன், இருகால் கட்பின் – (ஒருதரங் கேட்ட அளவின் அமையாது) இரண்டுதரங் கேட்டானாயின், நூலில் பெருகப் பிழைபாடு இலன் – அந்நுலிலே பெரும்பாலும் பிழைபடுதல் இலனாவன். எ—று. குறி என்றது இங்கே காலக்கிரமத்தை உணர்த்தி நின்றது.

### கொ. இராமலிங்கத் தம்பிரான்

பொ—ரை.: ஒருதரம் ஒரு நூலைப்பாடங் கேட்பவன் இரண்டு தரங் கேட்பானாயின் அந் நூலில் பிழைபடுதல் மிகுதியும் இலனாவன். எ—று.

குறியென்றது, இங்கே காலக்கிரமத்தை யுணர்த்தி நின்றது, பிழை—ஐயந்திரிபு.

### கா.நமச்சிவாய முதலியார்

**ஒருகுறி** – ஒருமுறை, **கேட்போன்** – (ஒரு நூலைப் பாடம்) கேட்பவன், **இருகால்** – இரண்டுமுறை, **கேட்பின்** – கேட்பானாயின், **நூலில் பிழைபாடு** – அந் நூலிற் பிழை படுதல், **பெருக** – மிகுதியும், **இலன்** – இலனாவன்.

### மோசசு பொன்னையா

ஒருநூலை ஒரு தரம் கேட்போன், அதனோடு அமையாது இரண்டு தரம் பாடம் கேட்பானாயின், அவன் அந்நூலறிவிலே மிகுதியும் பிழைபடுதல் இலனாவான், எ—று.

**(41)**

## 42. முக்காற் கேட்டபின் முறையறிந் துரைக்கும்

முக்கால் கேட்பின் முறை அறிந்து உரைக்கும்

mukkāl kētpiṉ muṟai aṟintu uraikkum

### என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**Master it by a third hearing**

If he has revised a work three times, he will master it, having the teacher's instructions indelibly fixed in the mind.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது

இ–ள்.: முக்காற் கேட்டானாகில் ஆசிரியன் கற்பித்த முறை அறிந்து உரைப்பன், எ–று.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், இதுவுமது.

இ–ள்.: **முக்காற் கேட்பின்** – மூன்று முறை நூலுரை கேட்பானாயின், **முறை அறிந்து உரைக்கும்** – நூலது இலக்கணத்தின் முறையை அறிந்து கூறும். எ–று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

இ–ள்.: **முக்கால்** – மூன்று தரம் கேட்பின், **கேட்பானாயின் முறை** – ஆசிரியன் கற்பித்த முறையை, **அறிந்து** – உணர்ந்து, **உரைக்கும்** – சொல்லுவான், எ–று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

இ–ள்.: மூன்று தரங் கேட்பானாயின், அப்போது ஆசிரியன் கற்பித்தநூல் முறையை யறிந்து பிறர்க்குச் சொல்வான், எ–று.

மேலைச் சூத்திரத்துட் சொல்லிய ஒரு குறிகேட்போன் என்பதை இச் சூத்திரத்து உரைக்கு மென்னும் பயனிலைக்கும், வருஞ் சூத்திரத்துப் பற்றலனாகு மென்னும் பயனிலைக்கும் கூட்டி முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– முக்கால் கேட்பின்** – மூன்றுதரம் கேட்பானாயின், **முறை** – (ஆசிரியன் தனக்குக் கற்பித்த) முறையை, **அறிந்து** – தெரிந்து, **உரைக்கும்** – தான் பிறருக்குச் சொல்ல வல்லவனாவன்.

குறிப்பு :–

> முன் சூத்திரத்திற் கூறிய **'ஒருகுறிகேட்போன்'** என்பதை, இச்சூத்திரத்துக்கும் வருஞ்சூத்திரத்துக்கும் எழுவாயாகக் கூட்டி முடித்துக் கொள்க.

## ஆறுமுக நாவலர்

இ-ள்.: **முக்கால் கேட்பின்** - மூன்று தரங் கேட்டானாயின், **முறை அறிந்து உரைக்கும்** - ஆசிரியன் கற்பித்த முறையை உணர்ந்து பிறர்க்குச் சொல்லுவான், எ-று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ-ள். **முக்கால் கேட்பின்** - மூன்றுதரம் பாடங் கேட்பானயின் - **முறை அறிந்து உரைக்கும்** - ஆசிரியன் கற்பித்த நூன்முறையை யுணர்ந்து பிறர்க்குச் சொல்லுந் திறமுடையனாவன். எ-று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ-ள்.: **முக்கால் கேட்பின்** - மூன்று தரம் கேட்டானாயின், **முறை** அறிந்து - (ஆசிரியன் கற்பித்த) முறைமையை அறிந்து, **உரைக்கும்** - (தான் பிறர்க்குச்) சொல்ல வல்லவனாவான்; எ-று.

## பவானந்தம் பிள்ளை

இ-ள்.:- முக்கால் **கேட்பின்** - மூன்றுதரங் கேட்டானாயின், **முறை அறிந்து உரைக்கும்** - ஆசிரியன் கற்பித்த முறையை உணர்ந்து பிறர்க்குச் சொல்லுவான். எ-று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

பொ-ரை.: மூன்றுதரம் கேட்பானாயின், (ஆசிரியன் கற்பித்த) முறையை யுணர்ந்து சொல்லுவான். எ-று.

## கா.நமச்சிவாய முதலியார்

முக்கால்- (அந்நூலை) மூன்றுமுறை, **கேட்பின்** - கேட்பானாயின், **முறை** - (ஆசிரியன் கற்பித்த) முறையை, **அறிந்து** - உணர்ந்து, **உரைக்கும்** - (பிறர்க்குச்) சொல்லுவான்.

## மோசசு பொன்னையா

ஒரு நூலை ஒருவன் மூன்று தரம் பாடங் கேட்பானாயின், அவன் ஆசிரியர் கற்பித்த முறையை அறிந்து பிறருக்குச் சொல்ல வல்லவன் ஆவான், எ-று.

**(42)**

**43. ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்**
**காற்கூ றல்லது [1]பற்றல னாகும்**

**ஆசான் உரைத்தது அமை வரக் கொளினும்**
**கால் கூறு அல்லது பற்றலன் ஆகும்**

āsāṉ uraittatu amai varak koḷiṉum
kāl kūṟu allatu paṟṟalaṉ ākum

## என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**Thus to learn the opinions of others is one fourth part of scholarship**

Though he has fully digested all the instructions of a teacher he will only have attained to one fourth part of perfection.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** இதுவும் அது

**இ–ள்.:** ஆசிரியன் கற்பித்தனவற்றைத் தன்னறிவின்கண் அமையக் கற்றானாகிலும் புலமைத் திறத்தில் காற்கூறல்லது பற்றான், எ–று.

## கூழங்கைத் தம்பிரான்

**கூ–ம்,** இதுவுமது.

**இ–ள்.: ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்** – ஆசான் உரைத்த நூற்பொருள் அடங்கலும் அமைவு பெறக் கொள்ளுவானாயினும், **காற்கூறு அல்லது பற்றலவாகும்** – அவ் விலக்கணத்திற் காற்கூறே யன்றி அமைவு பெறானாம், எ–று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: ஆசான்** – ஆசிரியன், **உரைத்தது** – கற்பித்த பொருளை,

---

**பாட வேறுபாடு.:–**

1. **பற்றிலனாகும்;**
**பற்றலவாகும்**

**அமைவர** – தன்னறிவி னிடத்து நிறைய, **கொளினும்** – கற்றானாயினும், **காற்கூறல்லது** – புலமைத் திறத்திற் காற் பங்கல்லது, **பற்றலனாகும்** – அதற்கதிகமாகப் பெறாதவனாவன், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.:** மேற் சொல்லியவாறு, ஆசிரிய னுரைத்த நூற்பொருளைத் தன்மனத்துள் அமையக் கொள்வானாயினும் அவனது புலமைத் திறத்திற் காற்கூறு பற்றினவ னாவதன்றி ஒழிந்த முக்காற் கூறும் பற்றாதவனாவான், **எ–று.**

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஆசான் உரைத்தது** – ஆசிரியன் கற்பித்த நூற்பொருள்களை, **அமைவர கொளினும்** – (முன்சொன்னபடி தன் அறிவில்) நிரம்பக் கற்றுக் கொண்டாலும், **கால் கூறு அல்லது** – ஆசிரியனுடைய புலமையில் காற்பங்கல்லாமல், **பற்றலன் ஆகும்** – (அதிகமாகப்) பெறாதவனாவன்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்** – ஆசிரியன் கற்பித்த பொருளைத் தன்னறிவினிடத்து நிறையக் கற்றானாயினும், **காற் கூறு அல்லது பற்றலன் ஆகும்** – புலமைத் திறத்திற் காற்பங்கல்லது அதற்கதிகமாகப் பெறாதவனாவன், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்** – ஆசிரியன் கற்பித்த நூற்பொருளைத் தன்னறிவில் அமையக் கொள்வானாயினும், – **காற்கூறு அல்லது பற்றலன் ஆகும்** – புலமைத் திறத்திற் காற்பங்குபற்றின வனாவதன்றி அதற்கதிகமாகப் பெறுதலிலனாவன்.**எ–று.**

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** (மாணாக்கன்) **ஆசான் உரைத்தது** – ஆசிரியன் கற்பித்த நூற்பொருளை, **அமைவர கொளினும்** – (மேற் சொல்லியவாறே தன் அறிவில்) நிரம்பக் கற்றுக் கொண்டானாயினும், **கால் கூறு அல்லது பற்றலன்**

**ஆகும்** – (ஆசிரியனது புலமைத் திறத்திற்) காற்பங்கு பெறுவனே யல்லது அதற்கு அதிகமாகப் பெறான்; எ–று.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்** – ஆசிரியன் கற்பித்த பொருளைத் தன் அறிவினிடத்து நிறையக் கற்றானாயினும், **கால் கூறு அல்லது பற்றலன் ஆகும்** – புலமைத்திறத்திற் காற்பங்கல்லது அதற்கதிகமாகப் பெறாதவனாவன். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** ஆசிரியன் கற்பித்த பொருளை (த்தன்னறிவி னிடத்து) நிறையக் கற்றானாயினும், (புலமைத்திறத்தில்) காற்பங் கல்லது, (அதற்கதிகமாகப்) பெறாதவனாவான். எ–று.

## கா.நமச்சிவாய முதலியார்

**ஆசான்** – ஆசிரியன், **உரைத்தது** – கற்பித்த பொருளை, **அமைவர** – (தன்னறிவினிடத்து) நிறைய, **கொளினும்** – கற்றானாயினும், **கால்கூறு அல்லது** – (புலமைத் திறத்தில்) காற்பங்கல்லது, **பற்றலன் ஆகும்** – அதற்கதிகமாகப் பெறாதவனாவான்.

## மோசசு பொன்னையா

**மாணாக்கன் ஆசிரியர் கற்பித்த பொருளைத் தன் செவியில் நிரம்பப் பெற்றான் ஆயினும், ஆசிரியர் கூறியவற்றில் காற்பங்கல்லாமல் அதற்கதிகமாகப் பெறான்,** எ–று.

**(43)**

**44. அவ்வினை யாளரொடு பயில்வகை [1]யொருகாற்**
**செவ்விதி னுரைப்ப வவ்[2]விரு காலும்**
**மையறு புலமை மாண்புடைத் தாகும்.**

---

பாடவேறுபாடு.:–

1. யொருபால்
2. விருபாலும் இவ்வாறு நூல் கற்கப்படுவது; இவ்வாறொழுகல் நூற்கியல்பு

அவ் விளையாளர் ஒடு பயில் வகை ஒருகால்
செவ்விதின் உரைப்ப அவ் இரு காலும்
மை அறு புலமை மாண்பு உடைத்து ஆகும்.

av vi̱laiyā̱lar otu payil vakai orukāl
sevvitiṉ uraippa av iru kālum
mai aṟu pulamai māṇpu utaiṭṭu ākum.

### என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

One fourth more is gained by association with the learned. The other half by teaching what has been learnt

One fourth more of perfection is obtained by associating with learned fellow-students, and the other half by imparting instructions to others in private, and by speaking (lecturing in public);this makes the accomplished scholar.

### மயிலை நாதர்

இ—ள்.: இவ்வாறொழுகுவர் நூல்கற்பவர், எ—று.

### சங்கர நமச்சிவாயர்

எ—னின், இதுவும் அது

இ—ள்.: தன்போலியரோடு பயிலும் வகையால் காற்கூறும் அக்கல்வியைத் தன் மாணாக்கர்க்கும் அவைக்களத்தோர்க்கும் உணர விரித்துரைத்தலான் அரைக்கூறுமாகக் குற்றமற்ற புலமை நிரம்பும், எ—று.

### கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், இதுவுமது.

இ—ள்.: **ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்** – ஆசான் உரைத்த நூற்பொருள் அடங்கலும் அமைவு பெறக் கொள்ளுவானாயினும், **காற்கூறு அல்லது பற்றலவாகும்** – அவ் விலக்கணத்திற் காற்கூறே யன்றி அமைவு பெறானாம், **அவ் வினையாளரொடு பயில் வகை ஒரு கால்** – கேட்கும் இயல்பினை யுடைய தன்னோ டொத்த மாணாக்கரோடும் பயில் வகையில் ஒரு காலும், **செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்** – அவ் விலக்கணம் பிறர்க்கு உணர்த்தும் வகையிலொழிந்த இருகாலும், **மையறு**

**புலமை** – குற்றமற்ற புலமை செலுத்தும் தன்மை, **மாண்புடைத்தாகும்** – மாட்சிமை உடைத்தாம்,எ – று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள். : அவ் வினையாளரொடு** – தன் போலியரோடு, **பயில்வகை** – பழகும் வகையால், **ஒருகால்** – காற்கூறும், **செவ்வி தினுரைப்ப** – தன் மாணாக்கருக்குஞ் சபையாருக்கு முணர விரித்துரைத்தலால், **அவ் விருகாலும்**– அரைக் கூறுமாக, **மையறு** – குற்றமற்ற, **புலமை** – புலமையானது, **மாண்புடைத்தாகும்** – நிரம்புதலுடைத் தாகும், எ–று.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ–ள்.: அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்** – அக் கல்வித் தொழிலாளரோடு பழகும் வகையாலொருகாற் கூறும், **செவ்விதி னுரைப்ப அவ்விரு காலும்** – ஆக அவ்விரண்டு காற்கூற்றையுங் கொண்டு ஒழுங்காகத் தன்மாணாக்கர்க்கும் அவைக்களத்தார்க்குஞ் சொல்ல, **மையறு புலமை** –குற்றமற்ற புலமைத் திறமானது, **மாண்புடைத்தாகும்** – (நிறைந்து) மாட்சி மையுடைத்தாம், எ–று.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– அ வினையாளரொடு** – அக்கல்வித் தொழிலாளரொடு, **பயில் வகை** – பழகும் வகையால், **ஒரு கால்** – ஒரு காற்பங்கும், **செவ்விதின் உரைப்ப** – (தன் மாணாக்கருக்கும் பிறருக்கும் தான்) செம்மையாகச் சொல்லுதலால், **அ இரு காலும்** – மற்றை அரைப்பங்குமாக, **மை அறு புலமை** – குற்றமற்ற புலமைத்திறம், **மாண்பு உடைத்து ஆகும்** – மிகுந்து சிறப்புடையதாகும்

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: அவ் வினையாளரொடு பயில்வகை ஒருகால்** – அக் கற்குந் தொழிலாளரோடு பழகும் வகையாற் காற்கூறும், **செவ்விதின் உரைப்ப அவ்விருகாலும்** – தன் மாணாக்கருக்குஞ் சபையாருக்கும் உணர விரித்துரைத்தலால் அரைக்கூறுமாக, **மை அறு புலமை மாண்பு உடைத்து ஆகும்** – குற்றமற்ற புலமையானது நிரம்பதலுடைத்தாகும், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்** – அக்கற்குந் தொழிலாளரோடு அப்பியாசஞ் செய்யும் வகையாற் காற்பங்கும், – **செவ்விதின் உரைப்ப அவ்விருகாலும்** – அவ்விருகாற்கூற்றையுங் கொண்டு தன்மாணாக்கர்க்கும் சபையார்க்கும் முணர விரித்துரைத்தலால் அவ்வரைப்பங்குமாக, – **மை அறு புலமை மாண்பு உடைத்தாகும்** – குற்றமற்ற புலமை நிரம்புதலுடைத்தாகும். **எ—று.**

> ஆசானுரைக்கப் பாடங்கேட்ட போது காற்கூறும், வித்தியார்த்திகளொடு பயிற்சிசெய்த போது காற்கூறுந் தேர்ச்சியுண்டாக, இவ்விருகாற் கூறாகிய அரைப்பங்கு தேர்ச்சியுங் கொண்டு தன்மாணாகருக்குஞ் சபையாருக்கும் விரித்துரைக்கப் பின்னுமிருகாற்பங்கு தேர்ச்சியுண்டாகும். எனவே பூரண பாண்டித்திய முண்டாகுமென்பதாம். பாண்டித்திய மெனினும் தேர்ச்சி யெனினுமொக்கும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.: அ வினையாளரொடு** – அவ்வாறு கற்குந் தொழிலுடைய மாணாக்கர்களோடு, **பயில் வகை** – பழகும் வகையால், **ஒரு கால்** – ஒரு காற்பங்கும், **செவ்விதின் உரைப்ப** – (தன் மாணாக்கர்க்கும் சபையார்க்கும் தான்) ஒழுங்காகச் சொல்லுதலால், **அ இருகாலும்** – மற்றை இரண்டு காற் (அரைப்) பங்குமாக, **மை அறு புலமை** – குற்றமற்ற புலமைத்திறம், **மாண்புஉடைத்து ஆகும்**– (நிரம்பி) மாட்சிமை யுடையதாம், **எ—று.**

> இது அம் மாண்புடையோர் தம்மொடு பயிறல், வினாதல், வினாயவை விடுத்தல் என்றவற்றின் பயன். முந்தின சூத்திரம், அவற்றின் இன்றியமையாமையைக் காட்டும்.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள். அவ்வினையாளரொடு பயில்வகை ஒருகால்** – அக்கற்குந் தொழிலாளரோடு பழகும்வகையாற் காற்கூறும், **செவ்விதின் உரைப்ப அவ்விருகாலும்** – தன் மாணாக்கருக்குஞ் சபையாருக்கும் உணர விரித்துரைத்தலால் அரைக்கூறுமாக, **மை அறு புலமை மாண்பு உடைத்து ஆகும்** – குற்றமற்ற புலமையானது நிரம்புதலுடைத்தாகும். **எ—று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** அக் கல்வித்தொழிலை ஆளுதலுடையாரோடு பழகும் வகையால் காற்கூறும், (தன் மாணாக்கருக்கும் சபையாருக்கும்) உணர விரித்துரைத்தலால் அரைக்கூறுமாகக் குற்றமற்ற புலமைத்திறமானது நிரம்புதலுடைத்தாகும். எ–று.

## கா.நமச்சிவாய முதலியார்

**அவ்வினை யாளரொடு** – அக்கல்வித் தொழிலை ஆளுதலுடைய மாணாக்கரோடு, **பயில் வகை** – பழகும் வகையால், **ஒருகால்** – காற்கூறும், **செவ்விதின் உரைப்ப** – (தன் மாணாக்கரும் சபையோரும் உணர) நன்றாக விரித்துரைத்தலால், **அவ்விருகாலும்** – அரைக்கூறுமாக, **மை அறு** – குற்றமற்ற, **புலமை** – அறிவுடைமை, **மாண்பு உடைத்து ஆகும்** – நிரம்புதலுடையதாகும்.

## மோசகு பொன்னையா

கல்வித் தொழில் உடன் மாணாக்கரோடு பழகும் வகையால் காற்கூறும், தன் மாணாக்கருக்கு அவையத்தாருக்கும் தெளிவுபட உரைப்பதால் எஞ்சிய இருகாற் கூறுகளும் நிரம்பிக் குற்றமற்ற புலமை மாட்சிமையுறும், **எ–று.**

**(44)**

## வழிபாடு

**46.** **அழலி னீங்கா னணுகா னஞ்சி**
**நிழலி [1]னீங்கா னிறைந்த நெஞ்சமோ**
**டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்**
**அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே**

**அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி**
**நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சம் ஓடு**
**எத் திறத்து ஆசான் உவக்கும் அத் திறம்**
**அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடு ஏ.**

---

பாடவேறுபாடு.:–

1. டாயென்

aḻalin̲ nīṅkān̲ aṇukān̲ añsi
niḻalin̲ nīṅkān̲ niṟainta neñsam ōtu
eṭ tiṟattu āsān̲ uvakkum aṭ tiṟam
aṟattin̲ tiriyāp patarssi vaḻipātu ē.

**என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

**The respect due to a master**

The respect due from a scholar to his teacher should be like that of one, who wishing to warm himself, neither ventures too near the fire nor recedes too far from it (avoiding being burnt or freezed); always observing due decorum towards his teacher, and adhering to him as the shadow adheres, to the substances.

**மயிலை நாதர்**

**இ–ள்.:** இவ்வாறொழுகல் வழிபாடாவது, எ–று.

**சங்கர நமச்சிவாயர்**

**எ–னின்,** இதுவும் அது.

**இ–ள்.:** இவ்வாறு ஒழுகுதல் வழிபாடாம், எ–று.

**கூழங்கைத் தம்பிரான்**

**சூ–ம்,** மேற்கூறிய வழிபடுதற்கு இலக்கணம் இதுவெனக் கூறுகின்றது.

**இ–ள்.: அழலினீங்கான் அணுகானஞ்சி** – தீக் காய்வான் அவ்வழலினிடத்துக் குளிருக்கஞ்சி நீங்காதவனும், வெம்மைக்கஞ்சி அணுகாதவனும் போல்வானாகி, **நிழலிநீங்கான்** – தன்னிழல் தன்னை விட்டு நீங்காத தன்மை யெனவும் ஆசிரியனை நீங்காதவனுமாய், **நிறைந்த நெஞ்சமொடு** – விகாரமற்ற நெஞ்சத்துடனே, **எத்திறத்து ஆசான் உவக்கும்** – எவ்வகை ஒழுக்கத் திறத்திலே ஆசான் மகிழ்ச்சிப் படும், **அத்திறம்** – அவ்வகை ஒழுக்கத்திறன், **அறத்திற் றிரியாப் படர்ச்சி** – அறநிலையின்மாறுபடாத செலவே, **வழிபாடே** – ........ *

---

* இப்பகுதி மூலநூலில் சிதைந்துள்ளது

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: அழலின்** – குளிர்காய்வோன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கிற நெருப்பைப் போல ஆசிரியனை நினைத்து, **அஞ்சி** – அச்சமுற்ற, **நீங்கான்** – விட்டு நீங்கானாகியும், **அணுகான்** – நெருங்கானாகியு மிருந்து, **நிழலின்** – விடாது பின் செல்லு நிழலைப் போல, **நீங்கான்** – தொடர்ந்து சென்று, **நிறைந்த நெஞ்சமோடு** – நிறைந்த கருத்துடனே **எத்திறத்து** – எத்தன்மையினாலே **ஆசான்** – ஆசிரியனானவன், **உவக்கும்** – மகிழ்வான், **அத்திறம்** – அத் தன்மையோடு பொருந்தி, **அறத்தின்**– அறத்தினின்றும், **திரியா**– வேறுபடாத, **படர்ச்சி** – நடத்தலானது, **வழிபாடு** – மாணாக்கன் செய்யும் வழிபாடாகும், **எ–று.**

> அழலி னென்பதற்கு ஆசிரியன் கோபித்தா லெனப் பொருள் கூறினும் பொருந்தும்.

## முகவை இராமானுச கவிராயர்

**இதுவுமது.**

**இ–ள்.: அழலின்** – அழல் காய்வோன் அவ்வழலைப் போலே, **நீங்கா னஞ்சியணுகான்** – (ஆசானத்திருந்தபோது) ஆசிரியனை விட்டு நீங்காதவனாயும் அஞ்சி நெருங்காதவனாயும், **நிழலி னீங்கான்** – அவன் சென்றவிடத் தெல்லாம் அவனிழலைப் போலே நீங்காது பின் செல்பவனாகியும், **நிறைந்த நெஞ்சமோடு** – அன்பு நிறைந்த மனத்துடனே கூடி, **எத்திறத்தாசா னுவக்கும்** – எவ்வகையாலாசிரியன் மகிழ்வானோ, **அத்திறம்** – அவ் வகை புரிவதும், **அறத்திற் றிரியாப் படர்ச்சி** – தருமத்தினின்றும் மாறுபடாத நடையும், **வழிபாடு** – ஆசிரியனை மாணாக்கன் வழிபடும் வழிபாடாம், எ–று.

> நிறைந்த நெஞ்சமோடென்பதற்கு – பூரணமான மனத்துடனே யெனினுமமையும். அறத்திற் றிரியாப் படர்ச்சியாவது, ஆசிரியனுக்கு மாணாக்கன் நடந்துகொள வேண்டிய நூல்புக லொழுக்கம், எத்திறத் தாசானுவக்கு மத்திறம் புரிதலாவது – அதற்கு மாறுபட்ட நூல் புகலா வொழுக்கம், இவ்விரண்டு மிவர்க்குத் தகு மென்பது தோன்ற இவ்வாறு கூறினாரெனக் காண்க. யாது பற்றி இங்ஙனங் கூறினாரெனின், ஏனையோ ருதவு மேனைப் பொருளுதவிகள் நிலையில்லா வுடலைப் பற்றி நின்று இந்திரியங்களை வளர்த்துக் கெடுப்பது, இவருதவுங் கல்விப்

பொருளுதவி நித்தியமாகிய உயிரைப் பற்றி நின்று அறிவை வளர்த்து வீடு பேற்றைக் கொடுப்பதாதலா லென்க. எத்திறத் தாசானுவக்கு மத்திறம் புரிந்ததை மறையோன் வேண்ட மாண்டாரைப் பண்டழைத்துத் தந்த கண்ணனிடத்தும். துரோணாசாரியன் வேண்ட வலங்கைப் பெருவிரல் அறுத்துத் தந்த வனசரன் முதலியோரிடத்துங் காண்க. இவ்வாறாகி அத்திறம் புரிவதும் படர்ச்சியும் வழிபாடென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– அழலின்** – (அனல் காய்பவன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கிற) நெருப்பைப் போல் (ஆசிரியனை எண்ணி), **அஞ்சி** – பயந்து, **நீங்கான்** – விட்டு நீங்காமலும், **அணுகான்** – கிட்டநெருங்காமலும் இருந்து, **நிழலின்** – நிழலைப்போல, **நீங்கான்** – (அவ்வாசிரியன் சென்ற விடத்தெல்லாம் அவனை) விடாது பின்தொடர்ந்து சென்று, **நிறைந்த நெஞ்சமோடு** – அன்புமிகுந்த மனத்தோடு, **எத்திறத்து ஆசான் உவக்கும்** – எவ்விதம் நடந்தால் ஆசிரியன் மகிழ்வானோ, **அத்திறம்** – அவ்விதமாக, **அறத்தின்** – தருமத்தினின்றும், **திரியா** – மாறுபடாத, **படர்ச்சி** – நடத்தையானது, **வழிபாடு** – (மாணாக்கன் ஆசிரியனுக்குச் செய்யும்) வழிபாடாம்.

**குறிப்பு :–**

'அழலின்' – கோபித்தால் என்று பொருள் கொள்ளலுமாம். மற்றையோர் மற்றையோர் செய்கிற உதவிபோலன்றி, ஆசிரியன் செய்யும் கல்விப் பொருளுதவி, நித்தியமாகிய உயிரைப் பற்றி நின்று, அறிவை வளர்த்து அழியாத வீட்டின்பத்தை யளித்தலால் அவன் உவக்குமாறு ஒழுக வேண்டுமென்றார்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– அழலின்** – குளிர் காய்வேன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கின்ற நெருப்பைப் போல ஆசிரியனை நினைத்து, **அஞ்சி நீங்கான் அணுகான்** – அச்சமுற்று விட்டு நீங்கானாகியும் நெருங்கானாகியும் இருந்து, **நிழலின் நீங்கான்**– விடாது பின்செல்லு நிழலைப் போலத் தொடர்ந்து சென்று, **நிறைந்த நெஞ்சமோடு** – அன்பு நிறைந்த கருத்துடனே கூடி, **எத் திறத்து ஆசான் உவக்கும்** – எத் தன்மையினாலே ஆசிரியனானவன் மகிழ்வான், **அத்திறம் அறத்தின் திரியாப் படர்ச்சி** – அத் தன்மையோடு பொருந்திஅறத்தினின்றும் வேறுபடாத நடத்தலானது, **வழிபாடு** – மாணாக்கன் செய்யும் வழிபாடாகும், **எ–று.**

அழலினென்பதற்குஆசிரியன் கோபித்தாலெனப் பொருள் கூறினும் பொருந்தும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– அழலின்** – குளிர்காய்வோன் விட்டு நீங்காமலும் நெருங்காமலுமிருக்கின்ற தீயைப்போல ஆசிரியனை நினைத்து அவன் ஆசனத்திற்கும் போது, – **அஞ்சி நீங்கான் அணுகான்** – அச்சமுற்று விட்டு நீங்கானாகியும் நெருங்கானாகியும் இருந்தும், – **நிழலின் நீங்கான்** – விடாது தொடரும் நிழலைப் போலத் தொடர்ந்து ஆசிரியன் செல்லு மிடங்கள் பலவற்றிற் சென்றும் – **நிறைந்த நெஞ்சமோடு** – அன்பு நிறைந்த மனத்துடனே – **எத்திறத்து ஆசான் உவக்கும்** – எவ்வகையால் ஆசிரியன் மகிழ்வானோ – **அத்திறம் அறத்தின் திரியாப்படர்ச்சி** – அவ்வகையே தருமத்தினின்றும் வேறுபடாத நடத்தலானது, – **வழிபாடே** – மாணாக்கன் செய்யும் வழிபாடாம். **எ–று.**

குளிர்காய்வோன் தீயை விட்டுவிலகினால் குளிர் போகாதே யென்று விலகானாயும் நெருங்கினாற் சூடு தாக்குமே யென்று நெருங்கானாயும் அளவாகச் சார்ந்து இருத்தல் போல; மாணாக்கன் ஆசிரியனை விட்டு விலகினால் மூடத்துவம் போகாதேயென்று கருதி விலகானாகியும், நெருங்கினால் ஆசிரியன் தண்டிப்பானே யென்று நெருங்கானாகியும் அளவாகச் சார்தலாம். சிலபோது முன்றொடர்ந்தும், சிலபோது பின்றொடர்ந்தும், சிறிதுகாலம் ஒருபக்கத்துமின்றியும் இவ்வாறு நிகழும் நிழலைப்போல, இரவிலே ஆஞ்ஞைப்படி ஆசிரியனுக்கு முன் சென்றும், பகலிலே ஆசிரியனுக்குப் பின்சென்றும் ஆசிரியனுடனே கூடிப் போகத்தகாதவிடத்துத் தொடர்ந்து போகாமல் விட்டும் மாணாக்கன் இவ்வாறொழுகுதல், "முன்புறுவானிரவெல்லாம் முப்போதும் பணிந்தெழுவான், பின் புறுவான் பகவெல்லாம்" என்று பிறர்வகுத்துக் கூறியதுங் காண்க.

ஆசானதுவப்பைப் பெறுதற்கெனினும் அறத்திற்கு விரோதமான பாவச் செயலாயிற் செய்யாதுவிடல் வேண்டுமென்று மாணாக்கனறிதற் பொருட்டு அறத்திற் றிரியாப்படர்ச்சி யென்று நூலாசிரியர் கூறினார்.

ஆசிரியனுக்கோதிய இலக்கணங்களையுடையானிடத்து அறத்திற் றிரிந்த குறிப்பு நிகழாதேயெனின், யாதாயினுமொரு நிமித்தத்தாற் கோபமுற்றானாயின்

அக்கணத்தில் அறத்திற்றிரிந்த குறிப்புண்டாமென்பது பற்றியும், நல்லியல்பெல்லா முடையனாகாது குறை யுள்ளானாயினு மவனிடத்துங் கற்றல்வேண்டு மென்பதும், அவ்வாறு கற்பினும் அவ்வாசிரியனுக்குத் தீச்செயலிலுவப் புண்டாகுமேனும் அத்தீச் செயலை மாத்திரஞ் செய்யாது விடல் வேண்டுமென்பதும் உணர்த்துதற்பொருட்டும் அவ்வாறு கூறினாரென வுணர்க.

மேன்மைக்குறைவுடைய கல்விமானிடத்துங் கற்கலா மென்பதனை "தோணியியக்கு வான்றொல்லை வருணத்துக், காணிற்கடைப்பட்டானென்றிகழார் - காணாய், அவன்றுணையாவாறு போயற்றே நூல் கற்ற, மகன்றுணையாநல்ல கொளல்" (இதன்பொருள்வெளி) என்றும்;

"அப்பிராமணாதத்யயந மாபத்காலே விதீயதே, அநுவ்ரஜ்யாச சுஸ்ருஷா யாவ தத்யயநம் குரோ:" (இந்தச்சுலோகத்தின் பொருள்:-) பிராமணன் பிராமணகுருவில்லாத ஆபத்துக் காலத்திலே பிராமணனல்லாத வனிடத்திலிருந்து ஓதுதல் விதிக்கப்படுகின்றது; ஓதும்வரையும் குருவுக்குப் பின்போதலும் வழிபாடு செய்தலும் விதிக்கப்படுகின்றன. (என்பதாம்) என்றுந் தமிழ்நூலும் வடநூலுங் கூறியவாற்றாலுணர்க.

அழலின் என்பதற்கு ஆசிரியன் கோபித்தால் எனப் பொருள் கூறுதலுமுண்டு.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ-ள்.: அழலின்** - (குளிருக்காக அனல் காய்பவன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கின்ற) நெருப்பைப் போல (ஆசிரியனை நினைத்து), **அஞ்சி நீங்கான் அணுகான்** - அச்சங் கொண்டு விட்டு நீங்காமலும் கிட்ட நெருங்காமலும் (இருந்து), **நிழலின் நீங்கான்** - (அவன் சென்றவிடத் தெல்லாம்) நிழலைப் போல விடாது பின் தொடர்ந்து சென்று, **நிறைந்த நெஞ்சமோடு** - அன்பு நிரம்பின மனத்துடன் கூடி, **எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம்** - எவ் வகையால் ஆசிரியன் மகிழ்வானோ அவ் வகையோடு பொருந்தி, **அறத்தின் திரியா படர்ச்சி** - தருமத்தினின்றும் மாறுபடாத நடத்தையானது, **வழிபாடு** - (மாணாக்கன் ஆசிரியனுக்குச் செய்யும்) வழிபாடாம்; **எ-று.**

குளிர்காய்வோன் தீயை விட்டு விலகினால், குளிர் நீங்குதலாகிய பயன் சித்தியாது: நெருங்கினால், சூடு தாக்கும், அதலால் மிகவிலங்காமலும் மிக நெருகாமலும் அளவாகச் சார்தல் போல மாணாக்கன் ஆசிரியனை விட்டு விலகினால் அவனருள் பெறுதலாகிய கருதிய பயன் கைகூடா தாதலாலும், மிகநெருங்கினால் அவனை அவமதித்தான் போன்று அவனது வெறுப்புக்கு இலக்காதலாலும் அளவாகச் சார்ந்து வழிபடுதல் வேண்டு மென்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– அழலின்** – (குளிர் காய்வோன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இரக்கின்ற) நெருப்பைப்போல (ஆசிரியனை நினைத்து), **அஞ்சி நீங்கான் அணுகான்** – அச்சமுற்று விட்டு நீங்கனாகியும் நெருங்கானாகியும் இருந்து, **நிழலின் நீங்கான்** – விடாது பின் செல்லும் நிழலைப் போலத் தொடர்ந்து சென்று, **நிறைந்த நெஞ்சமோடு** – அன்பு நிறைந்த கருத்துடனே கூடி, **எத்திறத்து ஆசான் உவக்கும்** – எத்தன்மையினாலே ஆசிரியனானவன் மகிழ்வான், **அத்திறம் அறத்தின் திரியாப் படர்ச்சி** – அத்தன்மையோடு பொருந்தி அறத்தினின்றும் வேறுபடாத நடக்கையானது, **வழிபாடு** – மாணாக்கன் செய்யும் வழிபாடாகும். **எ–று.**'

அழலி னீங்கான் அணுகான்' என்னும் இச்சொற் றொடரோடு 'அகலாதணுகாது தீக்காய்வார்போல்க, இகல் வந்தர்ச் சேர்ந்தொழுகுவார்' என்னும் திருக்குறள் ஒப்பு நோக்கத் தக்கது.

## கா.நமச்சிவாய முதலியார்

**அழலின்** – (குளிர்க்காய்வோன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கிற) நெருப்பைப்போல (ஆசிரியனை நினைத்து), **அஞ்சி** – அச்சமுற்று, **நீங்கான்** – (விட்டு) நீங்கானாகியும், **அணுகான்** – நெருங்கா னாகியுமிருந்து, **நிழலின்** (விடாது தொடர்ந்து செல்லும் உடலின்) நிழலைப்போல, **நீங்கான்** – நீங்கானாகி, **நிறைந்த நெஞ்சமோடு** – (அன்பு) நிறைந்த கருத்துடனே, **எத்திறத்து** – எவ்வகையினால், **ஆசான்** – ஆசிரியனானவன், **உவக்கும்** – மகிழ்வானோ, **அத்திறம்** – அவ்வகையில் (பொருந்தி), **அறத்தின்** – அறத்தினின்றும், **திரியா** – வேறுபடாத, **படர்ச்சி** – நடக்கையானது, **வழிபாடு** – (மாணாக்கன் செய்யும்) வழிபாடாகும்.அழலின் என்பதற்கு ஆசிரியன் கோபித்தால் எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

மோசசு பொன்னையா

குளிர்காய்வோன் அஞ்சித் தீயை விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருப்பதுபோல் பழகி, தொடர்ந்து செல்லும் நிழலைப்போல் பிரியானாகி, அன்பு நிறைந்த நெஞ்சத்துடன், ஆசிரியர் எதனைச் செய்யின் மகிழ்வாரோ அதனைச் செய்து, அறநெறி திறம்பாது ஒழுகுவதே மாணாக்கன் செய்யும் வழிபாடாகும், எ—று.

(45)

## சிறப்புப் பாயிரம்

47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ [1]டாயவெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே

ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூல் பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயன் ஓடு ஆய எண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்து இயல்பே

ākkiyōṉ peyarē vaḻiyē ellai
nūl peyar yāppē nutaliya poruḷē
kēṭpōr payaṉ ōṭu āya eṇ poruḷum
vāyppak kāṭṭal pāyirattu iyalpē

என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

### PARTICULAR INTRODUCTION

#### What a special preface should contain

A particular, introduction, or preface, should treat on the eight following subjects: the name of the author; the origin of the work; the country in which it is used; the name of the work; it

பாடவேறுபாடு.:—

1. டாயெண்

merits and the position it holds in the list of approved works; the subjects of which it treats; students qualified to study it;advantages derived to the students from its persual; and.

## ஒப்புமைப் பகுதி

**எல்லை வழிநுத லியபொருள் யாப்பே**
**நூற்பெயர் நுவல்வோன் பெயர்காரணம் பயன்**
**காலம் கேட்போர் களனெனப் பதினொரு**
**பால்புணர்த் துரைப்பது சிறப்புப் பாயிரம்**

**(மாற.அலங்.:60)**

**சிறப்பின தியல்பே தெரியின் நூல்நுதலிய**
**திறப்படு பொருளைத் தன்னகத் தடக்கி**
**அகவலின் வெள்ளையின் அறைவ தொன்றாகும்**

**(மாற.அலங்.:61)**

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** 'பாயிரம் பொதுச்சிறப்பு' என மேல் நிறுத்த முறையானே '**மலர்தலை உலகின்**' என்றற் றொடக்கத்தனவாய் எல்லா நூற்கண்ணும் வரும் சிறப்புப் பாயிரங்களினது பொதுவிலக்கணம், **உணர் – ற்று.**

இதனையும் பொதுப்பாயிரத்துள் கூறினார், பொது ஐந்தனுள் நூன்முகத்தினது இலக்கணமாதலின் என்க.

**இ–ள்.:** இவ்வெட்டுப் பொருளையும் விளங்க உணர்த்துவது சிறப்புப் பாயிரத்து இலக்கணமாம், **எ–று.**

> ஆக்கியோன் பெயரே என்றற் றொடக்கத்தனவற்றுள் சிறப்பு என்பது தோன்றினமையின் பாயிரம் வாளா கூறினார் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** சிறப்புப் பாயிரத்துக்கு இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.: ஆக்கியோன் பெயரே** – நூல் செய்தோர் பெயரையும், **வழியே** – இந்நூல் வழித்தாகச் செய்தோமென்னும் வழியையும், **எல்லை** – இத்துணை இடத்து வழங்கும் வழக்கென எல்லையையும், **நூற்பெயர்** – இந்நூற்கு இது பெயரென நூற்பெயரையும், **யாப்பே** – இவ்வகைப் பாவினால் தொகை வகை விரியில் ஒன்றாகச் செய்தோ மென்னும் யாப்பையும், **நுதலிய பொருளே** – இந்நூல் இத்துணைப் பொருளை யெல்லாம் கருதிற்றென நுதலிய பொருளையும், **கேட்போர்** – இந்நூல் கேட்கின்றோர் இன்னாரெனக்

கேட்போரையும், **பயனொடு** – இந்நூல் உணர்தலான் பெறும் பயன் இதுவென நூற்பயனையும், **ஆயெண் பொருளும் வாய்ப்பக் காட்டல்** – அவ்வகை நூற்கு ஏற்கும் முறையே இவ்வெண் வகை இலக்கணமும் தோன்றச் செய்வது, **பாயிரத்தியல்பே** – சிறப்புப் பாயிரத்துக்கு இலக்கணமாம், எ–று.

## விசாகப் பெருமாளையர்

**இது**, பாயிரம் பொதுச் சிறப்பென நிறுத்த முறையாற் சிறப்புப் பாயிரங்களது பொதுவிலக்கணத்தைச் சொல்லுகின்றது.

**இ–ள்.: ஆக்கியோன் பெயர்** – நூல் செய்தோன் பெயரும், **வழி** – நூல் வந்த வழியும், **எல்லை** – நூல் வழங்கு நிலமும், **நூற்பெயர்** – நூலினது பெயரும், **யாப்பு** – இந்நூல் முடிந்த பின்பு இந்நூல் கேட்கத் தகுமென்னு மியையும், **நுதலிய பொருள்** – நூலிற் செய்யப்பட்ட பொருளும், **கேட்போர்** – இந்நூல் கேட்டற் குரிய வதிகாரிக ளிவரென்பதும், **பயன்** – நூல் கேட்கையாற் பெறப்படும் பயனும், **ஆயெண் பொருளும்** – ஆகிய வெட்டுப் பொருளையும், **வாய்ப்பக் காட்டல்** – விளங்கவுணர்த்துதல், **பாயிரத்து** – சிறப்புப் பாயிரத்தினது, **இயல்பு** –இலக்கணமாம், எ–று.

ஆகிய வென்பது ஆய் என்றாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, நிறுத்த முறையே சிறப்புப் பாயிரத்தின் பொது விலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: ஆக்கியோன் பெயர்** – நூலைச் செய்தவன் பெயரும், **வழி** – நூல் வந்த வழியும், **எல்லை** – நூல் வழங்கும் எல்லையும், **நூல்பெயர்** – நூலின் பெயரும் **யாப்பு** – தொகுத்தல் முதலிய நால்வகை நூற்கட்டும், **நுதலிய பொருள்** – நூல்குறித்த பொருளும், **கேட்போர்** – நூலைப் பாடித்தா வெனக் கேட்போரும், **பயனோடு** – நூலைக் கற்றதினாலே பெறப்படும் அற முதலாகிய நான்கு பொருட் பயனோடு கூட, **ஆய் எண் பொருளும்** – அந்த எட்டுவகைப் பொருளையும், **வாய்ப்பக் காட்டல்** – விளங்கக் காட்டுவது, **பாயிரத் தியல்பு** – சிறப்புப் பாயிரத்திலக்கணமாம், எ–று.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஆக்கியோன் பெயரே** – நூலைச் செய்தவன் பெயரும், **வழியே** – (நூல்வந்த) வழியும், **எல்லை** – (நூல் வழங்கும் பூமியின்) எல்லையும், **நூல் பெயர்** – நூலின் பெயரும், யாப்பு – (தொகுத்தல் முதலிய) நால்வகை நூற்கட்டும், **நுதலிய பொருள்** – நூல் குறித்த பொருளும்,

**கேட்போர்** – 'இந்நூலைப் பாடித்தா' எனக்கேட்போரும், **பயனோடு** – (நூலைக் கற்றதனால்) உண்டாகும் (அறம் முதலிய) பயனும், **ஆ எண் பொருளும்** – அந்த எட்டுவகைப் பொருளையும், **வாய்ப்ப காட்டல்** – விளங்கத் தெரிவித்தல், **பாயிரத்து இயல்பு** – சிறப்புப்பாயிரத்தின் இலக்கணமாம்.

**குறிப்பு :–**

இவற்றுள், **'யாப்பு'** என்பதற்கு இந்நூல் கேட்டபின் இந்நூல் கேட்கத்தகும் என்னும் இயைபு என்றும், **'கேட்போர்'** என்பதற்கு, இந்நூல் கேட்டற்குரிய அதிகாரிகள் என்றும் கூறுவாருமுளர். **'ஆய எண் பொருளும்'** எனக்கொண்டு **'ஆகிய எட்டுப்பொருளும்'** எனவும் உரைக்கலாம். இங்ஙனம் கொள்ளுதலில் 'ஆய' என்னும் பெயரெச்சவீறு தொக்கது என அறிக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஆக்கியோன் பெயர்** – நூல் செய்தோன் பெயரும், **வழி** – நூல் வந்த வழியும், **எல்லை** – நூல் வழங்கு நிலமும், **நூற்பெயர்** – நூலினது பெயரும், **யாப்பு** – இந்நூல் முடிந்த பின்பு இந்நூல் கேட்கத் தகும் என்னும் இயைபும், **நுதலிய பொருள்** – நூலிற் சொல்லப்பட்ட பொருளும், **கேட்போர்** – இந்நூல் கேட்டற்குரிய அதிகாரிகள் இவரென்பதும், **பயன்** – நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், **ஆய் எண் பொருளும்** – ஆகிய எட்டுப் பொருளையும், **வாய்ப்பக் காட்டல்** – விளங்க வுணர்த்துதல், **பாயிரத்து இயல்பு** – சிறப்புப் பாயிரத்தினது இலக்கணமாம், **எ–று.**

ஆகிய வென்பது ஆயென்றாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– ஆக்கியோன் பெயர்** – நூல்செய்தோன் பெயரும், **வழி** – நூல்வந்த வழியும், **எல்லை** – நூல் வழக்கு நிலமும், **நூற்பெயர்** – நூலினது பெயரும், **யாப்பு**, இந்நூல் முடிந்தபின் இந்நூல் கேட்கத் தகுமென்னும் இயைபும், **நுதலிய பொருள்** – நூலிற் சொல்லப்பட்ட விஷயமும், **கேட்போர்** – இந்நூல் கேட்டற்குரிய அதிகாரிகள் இவரென்பதும், **பயன்** – நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், **ஆய் எண் பொருளும்** – ஆகிய எட்டுப் பொருள்களையும், **வாய்ப்பக் காட்டல்** – விளங்க வுணர்த்துவது, **பாயிரத்து இயல்பு** –சிறப்புப்பாயிரத்தினிலக்கணமாம். **எ–று.**

"எல்லாநூற்கு மிவை பொதுப் பாயிரம்" எனப் பொதுப்

பாயிரமுற்கூறி ஈண்டுச் சிறப்புப்பாயிரங் கூறவந்தவ ராதலால் அது விளங்கி நிற்குமாதலின், சிறப்புப் பாயிரமென்னாது பாயிரத்தியல்பே என வாளா கூறினார்.வாளா – வெறுமையாக, சும்மா – அடைமொழியின்றி.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாச்சாரியார்

இ–ள்.: **ஆக்கியோன் பெயரே** – (நூலைச்)செய்தவனது பெயரும், **வழியே** – (நூல் வந்த) வழியும், **எல்லை** – (நூல் வழங்கும் நிலத்தின்) எல்லையும், **நூல் பெயர்** – நூலின் பெயரும், **யாப்பே** – (தொகுத்தல் முதலிய) நூற்கட்டும், **நுதலிய பொருளே** – (நூலிற்)சொல்லப்பட்ட பொருளும், **கேட்போர்** – (இந்நூல்) கேட்டற்கு உரிய அதிகாரிகள் இவரென்பதும், **பயனோடு** – (நூல் கற்றதனாற் பெறப்படும்) பயனும், **அ எண் பொருளும்** – அவ் வெட்டுவகைப் பொருள்களையும், **வாய்ப்ப காட்டல்** – விளங்க உணர்த்துதல், **பாயிரத்து இயல்பு** – சிறப்புப் பாயிரத்தின் இலக்கணமாம்; எ–று.

இனி, யாப்பு – இந்நூல் கேட்டபின் இந்நூல் கேட்கத்தகு மென்னும் இயைபு என்றும்; கேட்போர் – நூலை இயற்றித் தருக வெனக் கேட்பவர் என்றும் உரைப்பாரு முளர். யாப்பு என்பதற்கு – இந்நூல் இன்ன வகைச் செய்யுளாற் செய்யப்பட்ட தென்ப தென்றலும் ஒன்று. ஆ யெண் பொருள் – சுட்டு நீண்டவிடத்து யகரம் தோன்றிற்று; ஆய எண் பொருள் என்பதன் தொகுத்தலெனக் கொண்டு உரைக்கவும் அமையும்: ஆய=ஆகிய.

இச் சூத்திரமும், அடுத்த சூத்திரமும் – முன்னோர் செய்தவற்றை மேற்கோளாகக் கொண்டது.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– **ஆக்கியோன் பெயர்** – நூல் செய்தோன் பெயரும், **வழி** – நூல் வந்த வழியும், **எல்லை** – நூல் வழங்கும் நிலமும, **நூற்பெயர்** – நூலினது பெயரும், **யாப்பு** – தொகுத்தல் முதலிய நால்வகை நூற்கட்டும், **நுதலிய பொருள்** – நூலிற் சொல்லப்பட்ட பொருளும், **கேட்போர்** – இந்நூல் கேட்டற்குரிய அதிகாரிகள் இவரென்பதும், **பயன்** – நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், **ஆய் எண்பொருளும்** – ஆகிய எட்டுப் பொருளையும், **வாய்ப்பக் காட்டல்** – விளங்க உணர்த்துதல், **பாயிரத்து இயல்பு** – சிறப்புப் பாயிரத்தினது இலக்கணமாம். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** நூல் செய்தோன் பெயரும், (நூல் வந்த) வழியும், (நூல்வழங்கு) நிலமும், நூலினதுபெயரும், )இந் நூல் முடிந்தபின்பு இந் நூல் கேட்கத்தகு மென்னும்) இயையும், நூலிற்சொல்லப்பட்ட பொருளும், (இந் நூல்) கேட்டற்குரிய அதிகாரிக ளிவரென்பதும், (நூல் கேட்கையாற் பெறப்படும்) பயனும் ஆகிய எட்டுப்பொருளையும் விளங்கவுணர்த்துதல் சிறப்புப்பாயிரத்தினது இலக்கணமாம். **எ–று**

ஆகிய என்பது ஆய் என்றாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**ஆக்கியோன் பெயர்**– நூல்செய்தோன் பெயரும், **வழி** – (நூல்வந்த) வழியும், **எல்லை** – (நூல் வழங்கும்) நிலத்தின் எல்லையும், **நூற்பெயர்**– நூலினது பெயரும், **யாப்பு** – (இந்நூல் முடிந்த பின்பு இந்நூல் கேட்கத் தகுமென்னும்) இயைபும், **நுதலிய பொருள்** – நூலிற் சொல்லப்பட்ட பொருளும், **கேட்போர்**– (இந்நூல்) கேட்டற்குரிய அதிகாரிக ளிவரென்பதும், **பயனோடு** – (நூல் கேட்கையாற் பெறப்படும்) பயனுடன், **ஆய எண் பொருளும்** – ஆகிய எட்டுப் பொருளையும், **வாய்ப்பக் காட்டல்** – பொருந்தக் காட்டுதல், **பாயிரத்து** –சிறப்புப் பாயிரத்தினது, **இயல்பு** – இலக்கணமாம்.

ஆகிய வென்பது ஆய என்றாகிப் பின் அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றது.

## மோசசு பொன்னையா

நூலாசிரியர் பெயரும், நூல்வந்த வழியும், நூல் வழங்கும் நிலத்து எல்லையும், நூலினது பெயரும், நூலின் அமைப்பும், நூலிற் சொல்லப்பட்ட பொருளும், நூலைக் கேட்பதற்கு உரியர் யாரென்பதும், நூல் கேட்பதால் விளையும் பயனும் ஆகிய எட்டுப் பொருளையும் விளங்க உணர்த்துதல் சிறப்புப் பாயிரத்தின் இயல்பாகும், எ–று.

**(47)**

**48. காலங் களனே காரண மென்றிம்**
**மூவகை யேற்றி மொழிநரு முளரே.**

**காலம் களனே காரணம் என்று இம்**
**மூ வகை ஏற்றி மொழிநரும் உளரே.**

kālam kaḻanē kāraṇam eṉṟu im
mū vakai ēṟṟi moḻinarum uḷarē.

**என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

**Three additional matters**

In addition to the foregoing subjects the following three may be added (to complete a particular introduction) viz. the time in which the work was written; the assembly before which it was read, and by whom it was sanctioned; and the motive which led to its being published.

**ஒப்புமைப் பகுதி**

செய்தான் செயப்பட்டது செய்பொருள் அதுசெய்திறத்தோடு
எய்தும் பயன் இன்னதன் வழி எல்லை எனஓர் எட்டும்

ஐயம்இல் காலம் அவை காரணம் ஆகப் பத்தொடு ஒன்றும்
மெய்தெரியின் சிறப்புப் பாயிரம் என்ன வேண்டுவரே.

(ந.பா.:70)

ஓதினவன் கேட்பவன் நூற்பெயர் வழியாப்பு எல்லை
உணர்ந்து பொருட் பயனொடு காலம் களன் காரணம் என்று
ஈதுபதினொன்று பாயிரச் சிறப்பாம்........

**மயிலை நாதர்**

இ—ள்.: இப் பதினொன்றும் சிறப்புப் பாயிரமாம், எ—று.

சிறப்பென்றது ஈண்டு ஒன்றற்கே யுரியதென்றவாறு

**சங்கர நமச்சிவாயர்**

எ—னின், இதுவும் அது.

இ—ள்.: அவ்வெட்டனோடு இம் மூன்றனையும் கூட்டிப் பதினொன்றாகக் கூறுவாரும் உளர், எ—று.

**கூழங்கைத் தம்பிரான்**

சூ—ம், இதுவுமது

இ—ள்.: காலம் – இந்நூல் இன்ன காலத்தில் செய்ததெனக் காலத்தையும், களனே – இன்னார் அவைக்கண் செய்ததென இடத்தையும்,

**காரணம்** – இக் காரியமாகிய நூற்குக் காரணம் இது வெனக் காரணத்தையும், **என்றிம் மூவகை ஏற்றி** – என்று சொல்லப்படும் இம் மூன்றையும் மேற்கூறிய எட்டினோடும் கூட்டி, **மொழிநரும் உளரே** – பதினொரு வகைத்தாகச் சிறப்புப் பாயிரமும் கூறுவோரும் உளர், எ–று.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.: காலம்** – நூல் செய்த காலமும், **களன்** – நூல ரங்கேற்றிய சபையும், **காரணம்** – நூல் செய்தற்குக் காரணமும், **என்று** – என்று, **இம்மூவகை** – இம் மூன்றனையும், **ஏற்றி** – அவ் வெட்டனோடு கூட்டி, **மொழிநரும்** – பதினொன்றாகச் சொல்லுவாரும், **உளர்** – சிலருளர், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இவற்றுள், யாப்பென்பதற்கு இன்னது முற்றியபின் இது கேட்கற்பாற் றென்னும் இயைபெனவும், கேட்போ ரென்பதற்குப் பாடங் கேட்போரெனவுங் கூறுவாருமுளர், அவை பொதுப்பாயிரத் திலக்கணமாதலால் அவற்றை 'நூல்பயி லியல்பே நுவலின்' எனவும் 'தன்மகனாசான் மகனே' எனவும் பொதுப்பாயிரத்துட் கூறிப் போந்தார், ஈண்டுங் கூறிற், கூறியது கூறலாமென மறுக்க. பாயிரம் பொதுச் சிறப்பென நிறுத்த முறையே எல்லா நூற்கு மிவை பொதுப்பாயிர மெனப் பொதுப்பாயிரங் கூறி ஈண்டுச் சிறப்புப் பாயிரங் கூற வந்தவராதலால் மிகைபடக் கூறாது பாயிரமென வாளா கூறினாரெனக் காண்க. இதுவுமது.

**இ–ள்.: காலம்** – நூலுண்டாகிய காலமும், **களன்** – நூல் அரங்கேறிய அவைக்களமும், **காரணம்** – நூலுண்டாதற்கு இயைந்த காரணமும், **என்றிம் மூவகை யேற்றி** – என இம் மூன்றையும் அந்த எட்டோடு கூட்டி, **மொழிநரு முளர்** – (சிறப்புப் பாயிரத்திலக்கணம் பதினொருவகைப்படுமென்று) சொல்லுவாருமுளர், எ–று.

இந்த மூன்றும் நூல்செய்தோன் காலத்தன்றி நூல் வழங்குங் காலத்தின்மையால் அவற்றாற் பயனின் றென்பது தோன்றப் பிறன்கோட்கூறலாகப் பிரித்துக் கூறினார். இது பிறன் கோட் கூறலென்னும் உத்தி.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– காலம்** – நூல் தோன்றிய காலமும், **களன்** – (நூல்

அரங்கேறிய) சபையும், **காரணம்** – (நூல் இயற்றியதன்) காரணமும், **என்ற இமூவகை ஏற்றி** – என்று சொல்லப்பட்ட இந்த மூன்றையும் (முன்சொல்லிய எட்டுடன்) சேர்த்து (ப்பதினொன்றென), **மொழிநரும் உளர்** – சொல்லுவாரும் உண்டு.

**குறிப்பு :–**

காலம் முதலிய மூன்றும் நூல் செய்தோன் காலத்தன்றி நூல் வழங்குங் காலத்தில்லாமையால், பிறன்கோட் கூறலாகப் பிரித்துக் கூறினார் எனக் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: காலம்** – நூல் செய்த காலமும், **களன்** – நூலரங்கேற்றிய சபையும், **காரணம்** – நூல் செய்தற்குக் காரணமும் **என்று இம் மூவகை ஏற்றி மொழிநரும் உளர்** – என்று இம் மூன்றனையும் அவ் வெட்டனோடு கூட்டிப் பதினொன்றாகச் சொல்லுவாருஞ் சிலர் உளர், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– காலம்** – நூல் செய்த காலமும், – **களன்** – நூல் அரங்கேற்றிய சபையும் – **காரணம்** – நூல் செய்தற்குக் காரணமும், – **என்று இம்மூவகை ஏற்றி மொழிநரும் உளர்** – என்று இம்மூன்றினையும் அவ்வெட்டனோடு கூட்டிப் பதினொன்றாகச் சொல்வாருஞ் சிலருளர். **எ–று.**

இது பிறன்கோட் கூறலென்னு முத்தி.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– காலம்** – (நூல் செய்த) காலமும்., **களனே** – (நூல் அரங்கேறிய) சபையும், **காரணம்** – (நூல்செய்தற்குக்) காரணமும், **என்ற இமூவகை** – என்கிற இந்த மூன்றையும், **ஏற்றி** – (அந்த எட்டோடு) கூட்டி, **மொழிநரும்** – (பதினொன்றாகச்) சொல்வாரும், **உளர்** – (சிலர்) உண்டு, எ–று.

காலம் முதலிய மூன்றும் நூல் செய்த காலத்தன்றி நூல் வழங்குங் காலத்து இல்லாமையால், பிறன் கோட்கூறலாகத் தனியே பிரித்துக் கூறினார்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– காலம்** – நூல் செய்த காலமும், **களன்** – நூல் அரங்கேற்றிய

சபையும், **காரணம்** – நூல் செய்தற்குக் காரணமும், **என்று இம் மூவகை ஏற்றி மொழிநரும் உளர்** – என்று இம் மூன்றனையும் அவ்வெட்டனோடு கூட்டிப் பதினொன்றாகச் சொல்லுவாருஞ் சிலர் உளர். **எ–று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:–** (நூல் செய்த) காலமும், (நூல் அரங்கேற்றிய) சபையும், (நூல் செய்தற்குக்) காரணமும் என்று இம் மூன்றனையும் (அவ் வெட்டனோடு) கூட்டி(ப் பதினொன்றாகச்) சொல்லுவாரும் (சிலர்) உளர். **எ–று.**

இந்த மூன்றும் நூல் செய்தோன் காலத்தன்றி, நூல் வழங்குங் காலத்தின்மையால், அவற்றாற் பயனின் றென்பது தோன்றப் பிறன் கோட்கூறலாகப் பிரித்துக் கூறினார்.

## கா.நமச்சிவாய முதலியார்

**காலம்** – (நூல் செய்த) காலமும், **களன்** – (நூல் அரங்கேறிய) சபையும், **காரணம்** – (நூல் செய்தற்குக்) காரணமும், **என்ற** – என்கின்ற, **இம்மூவகை** – இம் மூன்று வகையையும், **ஏற்றி** – (அவ்வெட்டனோடுங்) கூட்டி, **மொழிநரும்** – (பதினொன்றாகச்) சொல்லுவாரும், **உளர்** – (சிலர்) உளர்.

இப்பதினொன்றையும் இந்நூற் சிறப்புப்பாயிரத்தில் காண்க. இவை பதினொன்றும் குறித்த ஒரு நூலுக்கே உரியதாய் வருதல் பற்றி ஒவ்வொன்றையும் தனித் தனியே பிரித்துக் கூறாராயினர்.

## மோசசு பொன்னையா

நூல் செய்யப்பட்ட காலமும், நூல் அரங்கேற்றப்பட்ட அவையும், நூல் செய்தற்குக் காரணமும் என்னும் இம்மூன்றினையும் அவ்வெட்டினொடு கூட்டிச் சொல்வாரும் உளர், எ–று.

**(48)**

## நூற்பெயர் வகை

**49. முதனூல் கருத்த னளவு மிகுதி**
**பொருள்செய் வித்தோன் றன்மைமுத**
**னிமித்தினும்**
**இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.**

**முதல் நூல் கருத்தன் அளவு மிகுதி**
**பொருள் செய்வித்தோன் தன்மை முதன் நிமித்தினும்**
**இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயர் ஏ.**

mutal nūl karuttan̲ al̲avu mikuti
porul̲ seyvittōn̲ tan̲mai mutan̲ nimittinum
itu kur̲iyān̲um nūr̲ku eytum peyar ē.

## என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

### How a book is to be named

A work may be named from any one of the following particualrs; from the denomination of its primary works; from the name of the author; from the character of the metre in which it is written; from excess; from its subjects; from the name or its patron; from its nature or character; or any arbitrary name may be given at the author's option.

## மயிலை நாதர்

**இ—ள்.:** இவ்வெட்டனுள் ஒன்று பற்றி வரும் நூற்குப்பெயர், **எ—று.**

அவற்றுள், முதனூலாற் பெயர் பெற்றன [1]ஆரியபடலம், பாரத முதலாயின. கருத்தனாற் பெயர்பெற்றன அகத்தியம், தொல்காப்பியம் முதலாயின, அளவினாற் பெயர்பெற்றன பன்னிருபடலம், நாலடி நானூறு முதலாயின. மிகுதியாற் பெயர் பெற்றன களவியல் முதலாயின. பொருளாற் பெயர் பெற்றன அகநானூறு. புறநானூறு முதலாயின. செய்வித்தோனாற் பெயர் பெற்றன சாதவாகனம், இளந்திரைய முதலாயின. தன்மையாற் பெயர் பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின. இடுகுறியாற்பெயர் பெற்றன [2]நிகண்டு நூல் கலைக்கோட்டுத்தண்டு முதலாயின.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மேற்கூறிய பதினொன்றனுள் நூற்பெயர்க்குச் சிறப்பு விதி **உணர் — ற்று.**

---

பாட **வேறுபாடு.:—**

**1.** ஆரியப்படலம்

**இ–ள்.:** முதல் நூல் முதல் தன்மை ஈறாகக் கூறிய ஏழும் பிறவுமாகிய காரணங்களானும், இடுகுறியானும் நூற்குப் பெயர் வரும், **எ–று.**

**வ–று.:**

முதல்நூலால் பெயர்பெற்றன ஆரியப்படலம், பாரதம் முதலாயின. கருத்தனால் பெயர்பெற்றன அகத்தியம், தொல்காப்பியம் முதலாயின, அளவினால் பெயர்பெற்றன பன்னிருபடலம், நாலடிநானூறு முதலாயின. மிகுதியால் பெயர் பெற்றன களவியல் முதலாயின. பொருளால் பெயர்பெற்றன அகப்பொருள் முதலாயின செய்வித் தோனால் பெயர்பெற்றன சாதவாகனம் முதலாயின. தன்மையால் பெயர்பெற்றன சிந்தாமணி, நன்னூல் முதலாயின. இடுகுறியால் பெயர் பெற்றன நிகண்டு, கலைக்கோட்டுத்தண்டு முதலாயின. பிறவும் அன்ன.

## கூழங்கைக் தம்பிரான்

**சூ–ம்,** நூற்குப் பெயரிடுமாறு கூறுகின்றது.

**இ–ள்.: முதனூல்** – ஆரியப்படலம், பாரதம் முதலாயின முதனூலாற் பெயர் பெற்றனவும், **கருத்தன்** – அகத்தியம், தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலாயின கருத்தனாற் பெயர் பெற்றனவும், **அளவு** – பன்னிரு படலம், நாலடி நானூறு, மும்மணிக் கோவை, நான்மணிமாலை முதலாயின அளவினாற் பெயர் பெற்றனவும் **மிகுதி** – களவியல் முதலாயின மிகுதியாற் பெயர் பெற்றனவும், **பொருள்** – அகப்பொருள், புறப்பொருள் முதலாயின பொருளாற் பெயர் பெற்றனவும், **செய்வித்தோன்** – சாதவாகனம், இளந்தியையும், வீரசோழியம் முதலாயின செய்வித்தோனாற் பெயர் பெற்றனவும், **தன்மை** – சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின தன்மையாற் பெயர் பெற்றனவும், **முதனிமித்தினும்** – இவ்வெழு வகைக் காரணங்களாலும் பெயர் பெற்ற முறையே யன்றி, **இடுகுறியானும்** – நிகண்டு, கலைக்கோட்டுத்தண்டு முதலாயின. இடுகுறியாற் பெயர் பெற்றனவும், **நூற்கு எய்தும் பெயரே** – இவ்வாறு இடுகுறி யானும் காரணத்தானும் நூற்குப் பெயர் வரும், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் சொன்ன பதினொன் நூற்பெயருக்குச் சிறப்புவிதி சொல்லுகின்றது.

**இ–ள்.: முதனூல்** – முதனூலும், **கருத்தன்** – செய்தவனும், **அளவு** – அளவும், **மிகுதி** – மிகுதியும், **பொருள்**–பொருளும், **செய்வித்தோன்** – செய்வித்தவனும், **தன்மை** – குணமும், **முதல்** – முதலாகிய, **நிமித்தினும்** –

காரணங்களாலும், **இடுகுறியானும்** – இடுகுறியாலும் , **நூற்கு** – நூலுக்கு, **பெயர்** – பெயரானது, **எய்தும்**– வரும், **எ–று.**

முதனூலாற் பெயர் பெற்றவை பாரதீ முதலியன, செய்தவனாற் பெயர் பெற்றவை தொல்காப்பிய முதலியன, அளவினாற் பெயர் பெற்றவை நாலடி நானூறு முதலியன, மிகுதியாற் பெயர் பெற்றவை களவியன் முதலியன, பொருளாற் பெயர் பெற்றவை அகப்பொருண் முதலியன, செய்வித்தோனாற் பெயர் பெற்றவை சாதவாகன முதலியன, தன்மையாற் பெயர் பெற்றவை நன்னூன் முதலியன, இடுகுறியாற் பெயர் பெற்றவை கலைக்கேட்டுத் தண்டு முதலியன.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மேற்கூறிய சிறப்புப் பாயிரத்தின் வகை பதினொன்றினுள் நூற்பெயர்க்கும் யாப்பிற்குஞ் சிறப்பு விதி கூற வேண்டுதலால், அந்த இரண்டினுள் நூற்பெயர்க்குச் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.:–** **முதனூல்** – அந்நூலுக்கு முன்னிருந்த நூலும், **கருத்தன்** – அந் நூலைச் செய்தவனும், **அளவு** – அந் நூலினளவும், **மிகுதி** – அந் நூலிலே சொல்லப்படுவனவற்றுள் மிகுதியான கூறும், **பொருள்** – அந்நூலின் பொருளும், **செய்வித்தோன்** – செய்வோனுக்குலதஉவிசெய்து செய்வித்தவனும், **தன்மை** – அந்நூலின் குணமும், **முதல்** – முதலாகிய, **நிமித்தினும்** –காரணங்களாலும், **இடுகுறியானும்** –காரணமில்லாம லிடுகுறியினாலும், **நூற்கெய்தும் பெயர்** – நூலுக்குப் பெயர் வரும், **எ–று.**

நிமித்தத்தினு மென்பது – நிமித்தினுமென விகாரப்பட்டு நின்றது.

**உதாரணம்.:–**

முதனூலாற் பெயர் பெற்றன, பாரத முதலாயின, கருத்தனாற் பெயர் பெற்றன, திருவள்ளுவர் முதலாயின, அளவாற் பெயர் பெற்றன, பன்னிரு படலமுதலாயின, மிகுதியாற் பெயர் பெற்றன களவியல் முதலாயின, பொருளாற் பெயர் பெற்றன, அகப்பொருள் முதலாயின, செய்வித்தோனாற் பெயர் பெற்றன, சாதவாகன முதலாயின, தன்மையாற் பெயர் பெற்றன, சிந்தாமணி, நன்னூல் முதலாயின, இடுகுறியாற்பெயர் பெற்றன, நிகண்டு முதலாயின, பிறவு மிவ்வாறு வருதல் காண்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :–** **நூற்கு** – ஒரு நூலுக்கு, **முதல் நூல்** – முதனூலும், **கருத்தன்** – நூலைச் செய்தவனும், **அளவு** – நூலினளவும், **மிகுதி** (நூலிற் சொல்லப்படும் பொருள்களுள்) மிகுதியான கூறும், **பொருள்** – நூல்கூறும் பொருளும், **செய்வித்தோன்** – (பொருள் முதலியகொடுத்து நூலைச்) செய்வித்தவனும், **தன்மை** – நூலின் குணமும், **முதல்** – முதலாகிய, **நிமித்தினும்** – காரணங்களாலும், **இடுகுறியானும்** – காரணமில்லாமல் இடுகுறியானும், **பெயர் எய்தும்** – பெயர் வரும்.

**குறிப்பு :–**

இங்கு முதனூலாற் பெயரெய்தும் என்றது, வழிநூல் சார்பு நூல்களுக்கென்க.

முதனூலாற் பெயர் பெற்றன:– இராமாயணம், பாரதம், காந்தம் போல்வன. கருத்தனாற் பெயர்பெற்றன:– அகத்தியம், தொல்காப்பியம், திருவள்ளுவர் போல்வன. அளவாற் பெயர் பெற்றன :– பன்னிருபடலம், நாலடிநானூறு போல்வன. மிகுதியாற் பெயர்பெற்றன :–களவியல் போல்வன. பொருளாற் பெயர்பெற்றன :–அகப்பொருள் புறப்பொருள் போல்வன. செய்வித்தோனாற் பெயர்பெற்றன:– சாதவாகனம் போல்வன. தன்மையாற் பெயர் பெற்றன :– நன்னூல், சிந்தாமணி, சூளாமணி போல்வன. இடுகுறியாற் பெயர் பெற்றன :– நிகண்டு போல்வன.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:** **நூற்கு** – ஒரு நூலுக்கு, **முதனூல்** – அந் நூலின் முதனூலும், **கருத்தன்** – அந் நூல் செய்தவனும், **அளவு** – அந் நூலினளவும், **மிகுதி** – அந் நூலிலே சொல்லப்படுவனவற்றுள் மிகுதியாகிய கூறும், **பொருள்** – அந் நூலிலே சொல்லப்பட்ட பொருளும், **செய்வித்தோன்** – அந் நூல் செய்வோனுக்குப் பொருளுதவி செய்து அதனைச் செய்வித்தவனும், **தன்மை** – அந் நூலின் குணமும், முதல் **நிமித்தினும்** – முதலாகிய காரணங்களாலும், **இடு குறியானும்**– இடுகுறியாலும், **பெயர் எய்தும்** – பெயர் வரும், **எ–று.**

முதனூலாற் பெயர் பெற்றன பாரத முதலாயின. கருத்தனாற் பெயர் பெற்றன தொல்காப்பிய முதலாயின. அளவினாற் பெயர் பெற்றன நாலடி நானூறு முதலாயின. மிகுதியாற் பெயர் பெற்றன களவியன் முதலாயின. பொருளாற் பெயர் பெற்றன அகப்பொருண் முதலாயின. செய்வித்தோனாற்

பெயர் பெற்றன சாதவாகன முதலாயின. தன்மையாற் பெயர் பெற்றன நன்னூன் முதலாயின. இடுகுறியாற் பெயர் பெற்றன கலைக்கோட்டுத் தண்டு முதலாயின.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:–** **நூற்கு** – ஒரு நூலுக்கு, **முதல் நூல்** – அந்நூலின் முதனூலும், **கருத்தன்** – அந்நூலைச் செய்தவனும், **அளவு** – அந்நூலினளவும், **மிகுதி** – அந்நூலிலே சொல்லப்படும் விஷயங்களுள் மிகுதியான கூறும், **பொருள்** – அந்நூலிலே சொல்லப்படும் பொருளும், **செய்வித்தோன்** – அந்நூல் செய்வோனுக்குப் பொருளுதவிசெய்து அதனைச் செய்வித்தவனும், **தன்மை** – அந்நூலின் குணமும், **முதல் நிமித்தினும்** – முதலான காரணங்களாலும், **இடுகுறியாலும்** – காரணமின்றி இடுகுறியாலும், **பெயர் எய்தும்** – பெயர் வரும். எ–று.

நிமித்தத்தினுமென்பது நிமித்தனு மென விகாரப்பட்டு நின்றது.

முதனூலாற் பெயர்பெற்றன பாரதமுதலாயின. கருத்தனாற் பெயர் பெற்றன தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலாயின. அளவினாற் பெயர்பெற்றன நாலடிநானூறு, பன்னிருபடல முதலாயின. மிகுதியாற் பெயர்பெற்றன. களவியல் முதலாயின. பொருளாற் பெயர்பெற்றன அகப்பொருள் முதலாயின. செய்வித்தோனாற் பெயர்பெற்றன. சாத வாகன முதலாயின. தன்மையாற் பெயர்பெற்றன சிந்தாமணி, நன்னூல் முதலாயின. இடுகுறியாற் பெயர் பெற்றன. கலைக்கோட்டுத் தண்டு முதலாயின.

நிகண்டென்பது இடுகுறியாற் பெயர்பெற்றதென்று கூறிப் பின் அதற்கு மாறாக நிகண்டெனினுங் கூட்டமெனினு மொக்குமென்று கூறினாருமுளர்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** **நூற்கு** – ஒரு நூலுக்கு, **முதல் நூல்** – (அந்நூலின்) முதனூலும், **கருத்தன்** – அந்நூல் செய்தவனும், **அளவு** – (அந்நூலின்) அளவும், **மிகுதி** – (அந்நூலிற் சொல்லப்படும் பொருள்களுள்) மிக்கதான பாகமும், **பொருள்** – (அந்நூலிற் சொல்லப்பட்ட) பொருளும், **செய்வித்தோன்** – (அந்நூல் செய்வோனுக்குப், பொருளுதவி முதலியன செய்து நூலைச்)

செய்வித்தவனும், **தன்மை** – (அந்நூலின்) குணமும், **முதல்** – முதலாகிய, **நிமித்தினும்** – காரணங்களாலும், **இடுகுறியானும்** – (காரணமில்லாமல்) இடுகுறியாலும், **பெயர் எய்தும்** – பெயர் வரும் ; எ–று.

நிமித்து – நிமித்தம், விகாரம்.

முதனூலாற் பெயர் பெறுதல் வழிநூல் சார்புநூல்கட்கே அமையு மென்பது ஏற்புழிக்கோட லென்னும் உத்தியால் விளங்கும்.

முதனூலாற் பெயர் பெற்றன: தமிழிலுள்ள இராமாயணம், பாரதம் முதலியன. கருத்தனாற் பெயர் பெற்றன: அகத்தியம், திருவள்ளுவர் முதலியன. அளவினாற் பெயர் பெற்றன: பன்னிருபடலம், நாலடிநானூறு முதலியன. மிகுதியாற் பெயர் பெற்றன: களவியல் முதலியன. பொருளாற் பெயர் பெற்றன: அகப்பொருள் முதலியன. செய்வித்தோனாற் பெயர் பெற்றன: சாதவாகனம், இளந்திரையம் முதலியன என்பர் தன்மையாற் பெயர் பெற்றன: சிந்தாமணி, நன்னூல் முதலியன. இடுகுறியாற் பெயர் பெற்றன: கலைக்கோட்டுத்தண்டு முதலியன வென்பர் ; (காண்டிகை யென்னும் உரைப்பெயரையும் இடுகுறி யென்பர்) பிறவும் இவ்வாறு வருவன உளவாயின் கண்டுகொள்க.

ஆத்திச்சூடி கண்ணிநுண் சிறுத்தாம்பு என்றாற் போல தற் குறிப்பினாற் பெயர் பெற்றவை முதலியன, இச் சூத்திரத்தில் முதல் நிமித்து என்றதற்கு உதாரணமாம்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– **நூற்கு** – ஒரு நூலுக்கு, **முதனூல்** – அந் நூலின் முதனூலும், **கருத்தன்** – அந்நூல் செய்தவனும், **அளவு** – அந்நூலினளவும், **மிகுதி** – அந்நூலிலே சொல்லப்படுவனவற்றுள் மிகுயிாகிய கூறும், **பொருள்** – அந் நூலிலே சொல்லப்பட்ட பொருளும், **செய்வித்தோன்** – அந்நூல் செய்வோனுக்குப் பொருளுதவி செய்து அதனைச் செய்வித்தவனும், **தன்மை** – அந்நூலின் குணமும், **முதல் நிமித்தினும்** – முதுலாகிய காரணங்களாலும், **இடுகுறியானும்** – இடுகுறியாலும், **பெயர் எய்தும்** – பெயர் வரும். எ–று.

1. முதனூலாற் பெயர் பெற்றன பாரதம் முதலாயின.
2. கருத்தனாற் பெயர் பெற்றன தொல்காப்பியம் முதலாயின.
3. அளவினாற் பெயர் பெற்றன நாலடிநானூறு முதலாயின.
4. மிகுதியாற் பெயர் பெற்றன களவியல் முதலாயின.

5. பொருளாற் பெயர் பெற்றன அகப்பொருள் முதலாயின.

6. செய்வித்தோனாற் பெயர் பெற்றன சாதவாகனம் முதலாயின.

7. தன்மையாற் பெயர் பெற்றன நன்னூல் முதலாயின.

8. இடுகுறியாற் பெயர் பெற்ற நிகண்டு முதலாயின.

'நிமித்தத்தினும்' என்பது 'நிமித்தினும்' என விகாரப்பட்டு நின்றது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** முதனூலும், செய்தவனும், அளவும், மிகுதியும், பொருளும், செய்வித்தவனும், குணமும் முதலாகிய காரணங்களாலும், இடுகுறியாலும் நூலுக்குப் பெயரானது வரும். **எ—று.**

முதனூலாற் பெயர் பெற்றவை – பாரதம் முதலியன; செய்தவனாற் பெயர் பெற்றவை—தொல்காப்பியம் முதலியன; அளவினாற் பெயர் பெற்றவை—நாலநானூறு முதலியன; மிகுதியாற் பெயர் பெற்றவை—களவியல் முதலியன; பொருளாற் பெயர் பெற்றவை—அகப்பொருள் முதலியன; செய்வித்தோனாற் பெயர் பெற்றவை—சாதவாகனம் முதலியன; தன்மையாற் பெயர் பெற்றவை—நன்னூல் முதலியன; இடுகுறியாற் பெயர் பெற்றவை—நலைக்கோட்டுத்தண்டு முத்லியன.

நிமித்தத்தினு மென்பது நிமித்தினுமென விகாரப்பட்டுநின்றது. முதனூலாற் பெயர் பெறுதல் வழிநூல் சார்புநூல்கட்கே அமையுமென்பது, 'ஏற்புழிக்கோடல்' என்னும் உத்தியால் விளங்கும்.

## கா.நமச்சிவாய முதலியார்

**முதனூல்** – முதனூலும், **கருத்தன்** – (நூல்) செய்தவனும், **அளவு** – அந்நூலின் அளவும், **மிகுதி** – அந்நூலிற் சொல்லப்பட்ட மிகுதியான கூறும், **பொருள்** – அந்நூலின் பொருளும், **செய்வித்தோன்** – (நூல்) செய்வித்தவனும், **தன்மை** – அந்நூலின் குணமும், **முதல்** – முதலாகிய, **நிமித்தினும்** – காரணங்களாலும், **இடுகுறியானும்** – இடுகுறியானும், **நூற்கு** – ஒரு நூலுக்கு, **பெயர்** – பெயரானது, **எய்தும்** – வரும்.

முதனூலாற்பெயர்பெற்றவை – பாரதம் முதலியன;
கருத்தனாற் பெயர்பெற்றவை – தொல்காப்பியம் முதலியன;

அளவினாற் பெயர்பெற்றவை – நாலடிநானூறு முதலியன;
மிகுதியாற் பெயர்பெற்றவை – களவியல் முதலியன;
பொருளாற் பெயர்பெற்றவை – அகப்பொருள் முதலியன;
செய்வித்தோனாற் பெயர்பெற்றவை – வீரசோழியம் முதலியன;
தன்மையாற் பெயர் பெற்றவை – நன்னூல் முதலியன;
இடுகுறியாற் பெயர்பெற்றவை – கலைக்கோட்டுத் தண்டு முதலியன.

**மோசசு பொன்னையா**

ஒரு நூலுக்கு அதன் முதனூல், அதனைச் செய்த ஆசிரியர், அந்நூலினது அளவு, அந்நூலிலே சொல்லப்படுவனவற்றுள் பெரும்பான்மையாகச் சொல்லப்படும் பொருள், அந்நூலிலே சொல்லப்பட்ட பொருள், அந்நூலை ஆசிரியரைக் கொண்டு செய்வித்தவன், அந்நூலின்குணம் ஆகிய காரணங்களாலும், இடுகுறியாலும் பெயர் அமையும், எ–று.

**(48)**

## நூல் யாப்பு

**49. தொகுத்தல் விரித்த றொகைவிரி [1]மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.**

**தொகுத்தல் விரித்தல் தொகை விரி மொழி பெயர்ப்பு
எனத் தகு நூல் யாப்பு ஈர் இரண்டு என்ப.**

ṭokuṭṭal viriṭṭal ṭokai viri moḻi peyarppu
enaṭ ṭaku nūl yāppu īr iraṇṭu eṉpa.

**என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

**Four ways in which a book may be composed**

There are four ways in which a work may be composed: by condensing what is already too profuse (abridgement); by enlarging what is already too condensed (paraphrase); by a union of both these ; and by translation (reproduction).

---

பாட வேறுபாடு.:–

1. மொழிப்பெயர்ப்பு

## மயிலை நாதர்

இ—ள்.: நூலியாப்பு இந்நாற் கூற்றதாம், எ—று.

## சங்கர நமச்சிவாயர்
## சிவஞான முனிவர்

*எ—னின், வாய்ப்பக்காட்டல் என்பதனால் போந்த சிறப்பில்லன வற்றுள் வழியின்வகை இத்துணையாம் என உணர்—ற்று*

இ—ள்.: நூல் யாக்கப்படும் யாப்பு தொகுத்து யாக்கப்படுவதூஉம், விரித்து யாக்கப்படுவதூஉம், தொகுத்தும் விரித்தும் யாக்கப்படுவதூஉம், மொழிபெயர்த்து யாக்கப்படுவதூஉம் என்று சொல்லத்தகும் இந்நான்கு கூற்றதாம் என்று சொல்லுவர் புலவர், எ—று.

*மேற்கூறிய பதினொன்றனுள் ஒன்றாகிய யாப்பினோடும் வெண்பா முதலிய யாப்பினோடும் இவற்றினுக்கு வேற்றுமை தோன்ற 'எனத் தகு நூல்யாப்பு' என்றார். சிறப்பில்லனவற்றுள் வழியின் வகை ஒன்றனையும் எடுத்தோதியது என்னை யெனின், இந்நூல் தொகைவிரிப்பட யாத்தமை தோன்றற்கு என்க. இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,*

*"வழியின் நெறியே நால்வகைத் தாகும்"*
*தொகுத்தல் விரித்தல் தொகைவிரி*
*மொழிபெயர்த் ததற்பட யாத்தலோ னைமர*
*பினவே"*

*என எடுத்தோதுமாறும் காண்க.*

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், நூல் யாப்பினது பகுதி இவையெனக் கூறுகின்றது.

இ—ள்.: **தொகுத்தல்**—தொகைச் செய்யுளாகவும், **விரித்தல்** – விரிவுச் செய்யுளாகவும், **தொகை விரி** – தொகையும் விரியும் கூடிய வகைச் செய்யுளாகவும், **மொழிபெயர்ப்பு** – முறை கூறிய தொகை வகை விரியிற் சொற்களைப் பெயர்க்கப்படும் மொழிபெயர்ப்புச் செய்யுளாகவும், **எனத் தகு நூல் யாப்பு** – இவ்வகை முறையாக நூற்கு உறுப்பாகிய யாப்பு, **ஈரிரண்டெ**ன்ப—நான்கு கூற்றதாம், எ—று.

மரத்தினது அடியே தொகையும் மரத்தினது, இலை, பூ, காய்,

கனி மேற்கோடுகள் இவை முதலாகிய யாப்பே விரிவும், அடியுங் கூடிய நடுவே தொகை விரியாகவும் கூறினார் அதன் வகை என்றுணர்க.

## விசாகப் பெருமாளையர்

**இது**, வழியின் வகையாகிய நூல் யாப்பினுக்குச் சிறப்புவிதி சொல்லுகின்றது.

**இ–ள்.: தொகுத்தல்** – விரிந்து கிடக்கின்றவைகளைத் தொகுத்துச் சொல்லுதலும், **விரித்தல்** – சுருங்கிக் கிடக்கின்றவைகளை விரித்துச் சொல்லுதலும், **தொகைவிரி** – தொகுத்தும் விரித்துஞ் சொல்லுதலும், **மொழிபெயர்ப்பு** – பதினெண் மொழியு ளொன்றனு ளிருக்கின்ற பொருளை மற்றொன்றுள்ளே திருப்பிச் சொல்லுதலும், **எனத் தகும்** – என்று சொல்லத் தகும், **ஈரிரண்டு** – நான்கு பிரிவை யுடைத் தாகும், **நூல் யாப்பு** – நூல் யாப்பானது, **என்ப**–என்று சொல்லுவர் புலவர், **எ–று.**

மலர்தலை யென்னுஞ் சூத்திரத்துள்ளே தொகை வகை விரி யாப்பென்று சொல்லியது, இந்நான்கு பிரிவினுள் இல்லையே யென்றால் நடுநின்ற வகை பின்னின்ற விரியைக் குறிக்கும் போது தொகையாகவும் முன்னின்ற தொகையைக் குறிக்கும் போது விரியாகவும் நிற்கையால் தொகை விரியே யாம்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, யாப்பிற்குச் சிறப்பு விதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.: தொகுத்தல்** – விரிந்து கிடந்ததைத் தொகுத்து முடித்தலும், **விரித்தல்** – தொக்குக் கிடந்ததை விவரித்து முடித்தலும், **தொகை விரி** – தொகுத்தும் விரித்தும் முடித்தலும், **மொழி பெயர்ப்பு** – ஒரு பாடை மொழியை மற்றொரு பாடை மொழியாகத் திருப்பி முடித்தலும், **என** – என்று, **தகு நூல் யாப்பு** – தக்க நூல் யாப்பானது, **ஈரிரண்டென்ப** – நால்வகைப்படு மென்று சொல்லுவர் புலவர், **எ–று.**

இதனுள் புலவரென்னும் பெயர்ப்பயனிலை குறைந்து நின்றது.

**உ–ம்.:–**

தொகுத்தலுக்கும் மொழிபெயர்த்தலுக்கும்: வான்மீகத்தை கம்பர் பன்னீராயிரமாக்கியது போல்வன, விரித்தலுக்கு: நாரத வாக்கியத்தை வான்மீகர் இருபத்தினாலாயிரங் கவிகளாக்கியது போல்வன, தொகைவிரியென்பதற்கு:

தொல்காப்பியத்துள் குற்றியலுகரப்புணரிய லென்றதை உயிரீற்றுப் புணரியலுள் அடக்கியும், அதனுட்சுருங்கிய கால இடைநிலைகளைத் 'தடறவொற்றின்னே' எனவும், 'ஆநின் றுகின்றுகிறு' எனவும், 'பவ்வமூவிடத்து' எனவும் விரித்துக் கூறிய நன்னூல் முதலிய போல்வன, பிறவுமிவ்வாறு காண்க.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

உரை :– **தொகுத்தல்** – விரிந்துள்ளதைத் தொகுத்துச் செய்தலும், **விரித்தல்** – சுருங்கியுள்ளதை விரித்து முடித்தலும், **தொகை விரி** – தொகுத்தும் விரித்தும் முடித்தலும், **மொழிபெயர்ப்பு** – (ஒரு பாஷையிலுள்ளதை) வேறொரு பாஷையிற் செய்வதும், **எனத்தகும்** – என்று சொல்லத்தக்க, **நூல்யாப்பு** – நூல் செய்யும்விதம், **ஈர் இரண்டு என்ப** – நான்கு என்று சொல்வர் (அறிவுடையோர்.)

**குறிப்பு :–**

தொகுத்தலுக்கும் மொழிபெயர்ப்புக்கும் உதாரணம் :– ஆரியத்தில் இருபத்தினாலாயிரம் கிரந்தமான வால்மீகி ராமாயணத்தைக் கம்பர் தமிழில் பன்னீராயிரம் செய்யுளாக இயற்றியது போல்வன. விரித்தலுக்கு உதாரணம் :– நாரதவாக்கியத்தை ஸ்ரீ வால்மீகி இருபத்து நாலாயிரம் கிரந்தமாக்கியது போல்வன. தொகைவிரிக்கு உதாரணம் :– தொல்காப்பியத்தில் குற்றியலுகரப் புணரியல் எனத்தனித்துக் கூறியதைப் பவணந்தி முனிவர் இந்நூலில் உயிரீற்றுப் புணரியலுள் அடக்கிக் கூறியதும், தொல்காப்பியத்துள் சுருக்கிக்கூறிய கால இடைநிலைகளை இந்நூலில் விரித்துக் கூறியதும் போல்வன.

**'மலர்தலை'** என்னுஞ் சூத்திரத்துள் **'தொகை வகை விரி'** என்ற தன்கண் உள்ள **'வகை'** இங்குக் கூறிய தொகுத்தல் விரித்தலுள் அடங்குமாறு உய்த்துணர்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **தொகுத்தல்** – விரிந்து கிடந்ததைத் தொகுத்துச் செய்தலும், **விரித்தல்** – தொக்குக் கிடந்ததை விரித்துச் செய்தலும், **தொகை விரி** – தொகுத்தும் விரித்துஞ் செய்தலும், **மொழி பெயர்ப்பு** – ஒரு பாடையில் உள்ள நூலை மற்றொரு பாடையிலே திருப்பிச் செய்தலும், **என** – என்று , **தகு நூல் யாப்பு ஈரிரண்டு என்ப** – தக்க நூல் யாப்பானது நால் வகைப்படும் என்று சொல்லுவர் புலவர், **எ–று.**

**"மலர்தலை"** என்னுஞ் சூத்திரத்துள்ளே **"தொகை வகை விரி" யாப் புஎன்று** சொல்லியது இந்நான்கு பிரிவினுள் இல்லையே யெனின், நடுயெனின்; நடு நின்ற வகை பின்னின்ற விரியைக் குறிக்கும் போது தொகையாகவும் முன்னின்ற தொகையைக் குறிக்கும் போது விரியாகவும் நிற்றலினாலே "தொகைவகைவிரி" யென்றது தொகை விரி யென்பதனுள் அடங்குமெனக் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– தொகுத்தல்** – விரிந்துகிடந்ததைத் தொகுத்துச் செய்தலும் – **விரித்தல்** – தொக்குக்கிடந்ததை விரித்துச் செய்தலும், – **தொகை விரி** – தொகுத்தும் விரித்துஞ்செய்தலும் – **மொழிபெயர்ப்பும்** – ஒரு பாடையிலிருந்து நூலை மற்றொருபாடையில் திருப்பிச் செய்தலும், – **என** – என்று, – **நூல் யாப்பு ஈரிரண்டு என்ப** – தக்க நூல் யாப்பானது நால்வகைப்படுமென்று சொல்லுவர் புலவர். **எ–று.**

தொகை விரி என்பது ஒன்றற்கொன்று மாறுபட (பரஸ்பரவிரோதமாய்) நிற்கலாமோ வெனின்; அவ்வாறன்று. சிலவற்றைத் தொகுத்தும், சிலவற்றை விரித்துஞ் செய்தலாலென்க.

"மலர்தலை" என்னுஞ் சூத்திரத்துள்ளே "தொகை வகைவரி" என்று சொல்லியது இந்நான்கு பிரிவினுள் இல்லையேயெனின், நடுநின்ற வகை பின்னின்ற விரியைத் குறிக்கும்போது தொகையாகவும் முன்னின்ற தொகையைக் குறிக்கும்போது விரியாகவும் அமைதலினாலே "தொகை வகைவிரி" என்றது தொகை விரியென்பதனுள் அடங்கியுளதாமென்க. மொழிபெயர்ப்புத் தனித்து வருதலுமன்றித் தொகுத்தல், விரித்தல், தொகைவிரி என்னு முப்பகுப்பினுளொவ் வொன்றோடும் கூடியும் வருமெனவுணர்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– தொகுத்தல்** – (விரிந்து கிடந்ததைத்) தொகுத்துச் செய்தலும், **விரித்தல்** – (தொக்குக் கிடந்ததை) விரித்துச் செய்தலும், **தொகைவிரி** – சிலவற்றைத் தொகுத்தும் சிலவற்றை விரித்துஞ் செய்தலும், **மொழிபெயர்ப்பு** – ஒரு பாஷையிலுள்ள நூலை மற்றொருபாஷையிற்

செய்தலும், **என**—என்று, **தகும் நூல் யாப்பு** – தக்க நூல் யாப்பானது, **ஈர் இரண்டு** – நால் வகைப்படும், **என்ப**—என்று சொல்வர் : (அறிவுடையோர்) ; **எ—று.** (நூல் யாப்பு – நூற்கட்டு)

தொகுத்தலுக்கும், மொழிபெயர்த்தலுக்கும் உதாரணம் – வடமொழியில் இருபத்தினாலாயிரஞ் சுலோகமான வால்மீகத்தைக் கம்பர் தென்மொழியிற் பன்னீராயிரஞ் செய்யுளாக்கியது போல்வன; பாரதமும் இது. விரித்தலுக்கு உதாரணம் – திருத்தொண்டர்தொகை யென்னும் பதிகத்தைச் சேக்கிழார் பெரியபுராணமாக விவரித்தது போல்வன. தொகைவிரிக்கு உதாரணம் – தொல்காப்பியத்திற் குற்றியலுகரப் புணரியலெனத் தனித்துக் கூறியதனை இந்நூலில் உயிரீற்றுப் புணரியலுள் அடக்கியும், தொல்காப்பியத்திற் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள கால இடைநிலைகளை இந்நூலில் விரித்தும் கூறியது போல்வன.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:— தொகுத்தல்** – விரிந்து கிடந்ததைத் தொகுத்துச் செய்தலும், **விரித்தல்** – சுருங்கிக் கிடந்ததை விரித்துச் செய்தலும், **தொகை விரி** – தொகுத்தும் விரித்துஞ் செய்தலும், **மொழிபெயர்ப்பு** – ஒரு பாடையில் உள்ள நூலை மற்றொரு பாடையிலே திருப்பிச்செய்தலும், **என** – என்று, **தகு நூல் யாப்பு ஈரிரண்டு என்ப** – தக்க நுல் யாப்பானது நால்வகைப்படும் என்று சொல்லுவர் புலவர். **எ—று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ—ரை.:** (விரிந்து கிடக்கின்றவைகளைத்) தொகுத்துச் சொல்லுதலும், (சுருங்கிக் கிடக்கின்றவைகளை) விரித்துச் சொல்லுதலும், தொகுத்தும் விரித்துஞ் சொல்லுதலும், (ஒரு பாவையிலிருக்கின்ற பொருளை) மற்றொன்றுள்ளே திருப்பிச் சொல்லுதலும் என்று சொல்லத்தகும் நூற்யாப்பானது நான்கு பிரிவை யுடைத்தாகும் என்று சொல்லுவர் புலவர். **எ—று.**

'மலர்தலை' என்னுஞ் சூத்திரத்துள்ளே தொகை வகை விரியாப்பு என்று சொல்லியது, இந் நான்கு பிரிவினுள் இல்லையே யென்றால் நடுநின்ற வகை பின்னின்ற விரியைக் குறிக்கும்போது தொகையாகவும், முன்னின்ற தொகையைக் குறிக்கும்போது விரியாகவும் நிற்கையால் தொகை விரியே யாம்.

## கா.நமச்சிவாய முதலியார்

**தொகுத்தல்** – (விரிந்து கிடக்கின்றவைகளைத்) தொகுத்துச் சொல்லுதலும், **விரித்தல்** – (சுருக்கிக் கிடக்கின்றவைகளை) விரித்துச் சொல்லுதலும், **தொகைவிரி** – தொகுத்தும் விரித்துஞ் சொல்லுதலும், **மொழிபெயர்பு** – ஒரு பாஷையிலிருக்கின்ற பொருளை மற்றொரு பாஷையில் திருப்பிச் சொல்லுதலும், **எனத்தகும்** – என்று சொல்லத்தகும், **ஈரிரண்டு** – நான்கு பிரிவை யுடைத்தாகும், **நூல்யாப்பு** – நூல் செய்தலானது, **என்ப** – என்று சொல்லுவர் (புலவர்).

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| தொகுத்தல் | – | நேமிநாதம் | முதலியன |
| விரித்தல் | – | பெரியபுராணம் | முதலியன |
| தொகைவிரி | – | நன்னூல் | முதலியன |
| மொழிபெயர்ப்பு | – | | நைடதம் |

முதலியன.

## மோசகு பொன்னையா

விரிந்து கிடந்ததைத் தொகுத்து முடித்தலும், தொக்குக் கிடந்ததை விரித்து முடித்தலும், தொகுத்தும் விரித்தும் முடித்தலும், வேறு மொழியிலிருந்து மொழி பெயர்த்து முடித்தலும், எனத் தக்க நூலமைப்பு முறைமை நான்கு வகைப்படும் என்பர், எ–று.

**(49)**

## *சிறப்பாயிரம் செய்தற்குரியோர்*

**50.** **தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்**
**தன்மா ணாக்கன் றகுமுரை காரனென்**
**றின்னோர் பாயிர மியம்புத [1]லியல்பே**

**தன் ஆசிரியன் தன் ஒடு கற்றோன்**
**தன் மாணாக்கன் தகும் உரைகாரன் என்று**
**இன்னோர் பாயிரம் இயம்புதல் இயல்பே**

ṭan̲ āsiriyan̲ ṭan̲ otu kar̲r̲ōn̲
ṭan̲ māṇākkan̲ ṭakum uraikāran̲ en̲r̲u
in̲n̲ōr pāyiram iyamputal iyalpē

---

**பாட வேறுபாடு.:–**

1. கடனே

## என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**Who must write the preface**

The fit person to write a preface are: the author's own teacher; his fellow-student; one of his own pupils; or a fit commentator.

## ஒப்புமைப் பகுதி

............ அதுநூல்
இயம்பு பாவினத்துரைப்பர் தன் குருமாணாக்கர்
காதலன் தன்னொடு கற்றோன் உரைபதிகம் சொலற்காம்
(சுவாமி.:8:2–3)

## மயிலைநாதர்

இ–ள்.: இவருள் ஒருவர் பாயிரம் 'சொல்லுத்லியல்பு, எ–று.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், இவ்விலக்கணங்களை யுடைய சிறப்புப்பாயிரம் கூறுதற்கு உரியார் இவர் என **உணர்–ற்று.**

**இ–ள்.:** ஒருவன் கூறிய நூற்கு இந்நால்வருள் ஒருவர் சிறப்புப்பாயிரம் கூறுதல் முறைமையாம், **எ–று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** சிறப்புப் பாயிரம் செய்வார் இவரெனக் கூறுகின்றது.

**இ–ள்.: தன்னாசிரியன்** – நூல் செய்தோன் தனது ஆசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு ஒருங்கொப்பக் கற்ற மாணாக்கரும், **தன் மாணாக்கன்** – தன்னிடத்திற் கற்ற சீடரும், **தகும் உரைகாரன்** – நூற்கு உரை செய்யத் தகும் உரைகாரனும், **என்றின்னோர்** – எனக் கூறப்பட்ட இப் பகுதியை உடையோர், **பாயிரம் இயம்புதல் கடனே** – சிறப்புப் பாயிரம் கூறுதல் முறையாம், **எ–று.**

---

பாட வேறுபாடு.:–

1. செய்தல்

## விசாகப் பெருமாளையர்

இது, முன் சொன்ன சிறப்புப் பாயிரஞ் செய்தற் குரியா ரிவரென்று சொல்லுகின்றது.

**இ–ள்.: தன்னாசிரியன்** – தன்னுடைய வாசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு பாடங் கேட்டவனும், **தன் மாணாக்கன்** – தன்னுடைய மாணாக்கனும், **தகுமுரைகாரன்** – தன்னூலுக்குத் தகுமுரையைச் செய்தவனும், **என்று** – என்று சொல்லப்பட்ட, **இன்னோர்** – இந்நால்வருளொருவர், **பாயிரம்** – சிறப்புப் பாயிரத்தை, **இயம்புதல்** – சொல்லுதல், **கடன்** – முறைமை யாகும் , **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** சிறப்புப் பாயிரஞ் செய்தற்கு உரியவ ரிவரென வுணர்த்துகின்றது.

**இ–ள்.:** ஒருவன் செய்த நூற்கு இந் நால்வருள் ஒருவர் சிறப்புப் பாயிரஞ் செய்வது முறையாம், **எ–று.**

தகுமுரைகாரன் – நூலுக்கு உரை செய்யத்தக்க புலவன்.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– தன் ஆசிரியன்** – தன்னுடைய ஆசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு கூடப் படித்தவனும், **தன்மாணாக்கன்** – தன்னுடைய சீஷனும், **தகும் உரைகாரன்** – தன்னூலுக்குத் தக்க உரை செய்பவனும், **என்ற இன்னோர்** – என்று சொல்லப்பட்ட இவருள் ஒருவர், **பாயிரம் இயம்புதல் கடன்** – சிறப்புப்பாயிரம் சொல்லுதல் முறைமையாம்.

குறிப்பு :–

> இந்நால்வரே இவன்பெருமையையும் இவனது நூலின்
> சிறப்பையும் நன்கு அறிவாராதலின் இவர்களைப்
> பாயிரம் செய்தற் குரியார் என்றார் என்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: தன் ஆசிரியன்** – தன்னுடைய ஆசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு பாடங் கேட்டவனும், **தன் மாணாக்கன்** – தன்னுடைய மாணாக்கனும், **தகும் உரைகாரன்** – தன்னூலுக்குத் தகும் உரையைச் செய்தவனும், **என்று இன்னோர்** – என்று சொல்லப்பட்ட இந் நால்வருளொருவர், **பாயிரம் இயம்புதல் கடன்** – சிறப்புப் பாயிரத்தைச் சொல்லுதன் முறைமை யாகும், **எ–று.**

தன்னொடு கற்றோனெனினும் ஒருசாலை மாணாக்கன் எனினும் ஒக்கும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். தன் ஆசிரியன்** – தன்னுடைய ஆசிரியனும், – **தன்னொடு கற்றோன்**, – தன்னொடுபாடங்கேட்டவனும், **தன்மாணாக்கண்** – தன்னுடைய மாணாக்கனும்,– **தகும் உரைகாரன் என்று** – தன்னூலொன்றற்காவது தகுமுரையைச் செய்தவனும், – **இன்னோர்** – ஆகிய இந்நால்வருளொருவர், – **பாயிரம் இயம்புதல் கடன்** – ஒருவருடைய நூலுக்குச் சிறப்புப்பாயிரத்தைச் சொல்லுதல் முறைமையாகும். **எ—று.**

> தன்னொடு கற்றோனெனினும், ஒருசாலை மாணாக்கன் எனினும், சகபாடி எனினுமொக்கும், ஒருவர் செய்த நூலின் நிறத்தையும், மனக்குறிப்பையும், வழி முதலானவைகளையும் தன்னாசிரியன் முதலான நால்வருமே நன்குணர வல்லராதலின் அவருளொருவரே பாயிரங்கூறுங் கடனுடையராயினரென்றறிக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியர்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.: தன் ஆசிரியன்** – தன்னுடைய ஆசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு பாடங் கேட்டவனும், **தன் மாணாக்கன்** – தன்னுடைய மாணாக்கனும், **தகும் உரைகாரன்** – (தான் செய்த நூலுக்குத்) தக்க உரை செய்தவனும், **என்ற இன்னோர்** – என்று சொல்லப்பட்ட இந்நால்வரில் ஒருவர், **பாயிரம்** – சிறப்புப் பாயிரத்தை, **இயம்புதல்** – சொல்லுதல், **கடன்** – முறைமை; **எ—று.**

## பவானந்தம் பிள்ளை

**இ—ள். தன் ஆசிரியன்** – தன்னுடைய ஆசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு பாடங் கேட்டவனும், **தன் மாணாக்கன்** – தன்னுடைய மாணாக்கனும், **தகும் உரைகாரன்** – தன் நூலுக்குத்தகும் உரையைச் செய்தவனும், **என்ற இன்னோர்** – என்று சொல்லப்பட்ட இந்நால்வரு ளொருவர், **பாயிரம் இயம்புதல் கடன்** – சிறப்புப்பாயிரத்தைச் சொல்லுதல் முறைமையாகும். **எ—று.**

> தன்னொடு கற்றோன் எனினும் ஒருசாலைமாணாக்கன் எனினும் ஒக்கும்.

## கா.நமச்சிவாய முதலியார்

**தன் ஆசிரியன்** – தன்னுடைய ஆசிரியனும், **தன்னொடு கற்றோன்** – தன்னோடு பாடங்கேட்டவனும், **தன் மாணாக்கன்** – தன்னுடைய மாணாக்கனும், **தகும் உரைகாரன்** – தன்நூலுக்குத் தகும் உரையைச் செய்பவனும், **என்ற** – என்று சொல்லப்பட்ட, **இன்னோர்** – இப்படிப்பட்டவர், **பாயிரம்** – சிறப்புப் பாயிரத்தை, **இயம்புதல்** – சொல்லுதல், **கடன்**– முறையாகும்.

## மோசசு பொன்னையா

ஒருவர் செய்த நூலுக்கு அவர்தம் ஆசிரியரும், அவரொடு பாடங் கேட்டவரும், அவர்தம் மாணாக்கருள் ஒருவரும், அந்நூலுக்கு ஏற்கும் உரை வகுப்போரும் என்னும் நால்வகையினருள் ஒருவர் சிறப்புப் பாயிரம் சொல்லுதல் முறைமையாகும், **எ–று.**

**(50)**

## *சிறப்புப்பாயிரம் பிறர் செய்தற்குக் காரணம்*

**51.** **தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்**
**தான்றற் புகழ்த றகுதி யன்றே**

**தோன்றா தோற்றித் துறை பல முடிப்பினும்**
**தான் தன் புகழ்தல் தகுதி அன்று ஏ.**

ṭōṉṟā ṭōṟṟiṭ ṭuṟai pala mutippiṉum
ṭāṉ ṭaṉ pukalṭal ṭakuṭi aṉṟu ē.

**என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

**An author must not praise himself**

(The reason why an author should not write a preface to his own work is, because) it is unbecoming in an author to praise himself, though he may be learned in all the sciences and be able to expatiate largely on them.

## ஒப்புமைப் பகுதி

**......... கல்விமுதிர்ந் திடினுந் தான்தனைப் புகழ்தலாகா.**

(சுவாமி.:8:3)

**கலைகள் யாவையும் கற்றுரை தெளிந்து**
**துலைநாச் சமனில் துணிநிலை புரியும்**
**வாய்மையும் பிறர்க்கவை மயர்வுற அளிக்கும்**
**தூய்மையும் சான்ற துணையிலன் எனினும்**
**ஒல்காப் பதினெண் உறுப்புடை நாற்பொருள்**
**பல்காப்பியம் பழிப்பற நலம்புணர்க்கவும்**
**முத்தமிழ்க் கல்வியும் உத்தம வாக்கின்**
**வித்தகக் கவிதையும் வேண்டினன் ஆகிலும்**
**தற்புகழ்தலும் பிறன் தன்னை இகழ்தலும்**
**பொற்பல ஆகும் புலன்உடை யோர்க்கே**

(மாற.அலங்.:62)

## மயிலை நாதர்

இ—ள்.: நூல் செய்தோன் பாயிரஞ் செய்தல் இயல்பன்று, **எ—று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** சிறப்பாயிரம் பிறர் கூறுதற்குத் காரணம் **உணர்—ற்று.**

இ—ள்.: தோன்றாத நுட்பங்களை யெல்லாம் தோற்றிப் பல துறைப்பட்டு விரிந்த நூலைச் செய்து முடித்தானாயினும் தன்னைத் தான் புகழ்தல் தகுதியன்றாம் ; ஆதலின், நூல்செய்தானது புகழாகிய சிறப்புப்பாயிரத்தைப் பிறர் கூறவேண்டும், **எ—று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** நூல் செய்தோன் பாயிரம் செய்தற்பாலன் அல்லானைக் கூறிகின்றது.

இ—ள்.: **தோன்றா தோற்றித்** – தோன்றாத இலக்கணங்கள் எல்லாம் தோன்றச் செய்து, **துறை பல முடிப்பினும்** – பல பல முகமாக ஓர் துறையை முடிப்பினும், **தான் தற்புகழ்தல்** – தன்னைத் தான் புகழ்வது, **தகுதி யன்றே** – நெறியன்று, எ—று.

## விசாகப் பெருமாளையர்

**இது,** சிறப்புப் பாயிரம் பிறர் செய்தற்குக் காரணஞ் சொல்லுகின்றது.

இ—ள்.: **தோன்றா** – தோன்றாத நுட்பங்களெல்லாம், **தோற்றி** – காட்டி, **துறைபல** – பல துறைப்பட்டு விரிந்த நூலை, **முடிப்பினும்** – செய்து முடித்தாலும், **தான்** – தானே, **தற்புகழ்தல்** – தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல், **தகுதியன்று** – தகுதி யன்றாம், **எ—று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, சிறப்புப் பாயிரம் பிறர் கூறுதற்குக் காரண முணர்த்துகின்றது.

**இ–ள்.: தோன்றா தோற்றி** – தோன்றாத நுட்பங்களை யெல்லாந் தோன்றச் செய்து, **துறை பல முடிப்பினும்** – பல துறைப்பட்டு விரிந்த நூலைச் செய்து முடிப்பானாயினும், **தான் தற்புகழுதல்** –தானே தன்னைப் புகழ்ந்து கொள்வது, **தகுதி யன்று** – தக்க தன்றாம், எ–று.

> துறை – வழி; அது, இங்கே ஆகுபெயராய் நூலை யுணர்த்தி நின்றது. நூல் செய்தோன் சிறப்புப் பாயிரஞ் செய்யின் தன்னைப் புகழ்ந்தவனாவா னென்பது கருத்து.

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– தோன்றா** – (பிறர்க்குத்) தோன்றாத நுண்ணிய பொருள்களை, **தோற்றி** – தோன்றச்செய்து, **துறைபல முடிப்பினும்** – பலதுறைகளும் தோன்றப் பெரிய நூலைச் செய்து முடித்தாலும், **தான் தன்புகழ்தல்** – தானே தன்னைப் புகழ்ந்து கொள்வது, **தகுதி அன்று** – தக்கதன்று.

குறிப்பு :–

> துறை – வழி ; இங்கு ஆகுபெயர். நூல் செய்தவனே சிறப்புப்பாயிரம் செய்து கொள்வானாயின், தற்புகழ்ச்சி செய்தவனாவன் ; ஆதலின் அதனைப்பிறர் செய்யவேண்டு மென்பதாயிற்று.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்** – தோன்றாத நுட்பங்களெல்லாங் காட்டிப் பலதுறைப்பட்டு விரிந்த நூலைச் செய்து முடிதாலும், **தான் தற்புகழ்தல்** – தானே தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் தகுதியன்றாம், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **தோன்றா** தோற்றி – தோன்றாது கரந்து கிடந்த நுட்பங்களை யெல்லாங் காட்டி, – **துறைபல முடிப்பினும்** – பலதுறைப்பட்டு விரிந்த நூலைச் செய்து முடித்தாலும், – **தான் தற்புகழ்தல் தகுதி அன்று** – தானே தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் தகுதியன்றும். எ–று.

நூலினது பெருமை விளங்கப் புனைந்துரைத்தலும், ஆசிரியனது பெருமை கூறுதலும் முதலாகச் சொல்லப் படும் அநேக பாகங்களை நூல்செய்தவனே கூறின் தன்னைத் தான் புகழ்ந்ததாக முடியுமாதலின் அது தகுதியன் றென்றவாறாம். ஆகவே பாயிரங்கூறுங் கடன் குறித்த பிறர்மேலதாயிற் றென்றுணர்க.

நூல்செய்தோனே பாயிரஞ்செய்ததுஞ் சிறுபான்மையுண்டு, பிரயோக விவேகத்திற்கு அதனாக்கியோரான சுப்பிரமணிய தீக்ஷிதர் பாயிரஞ் செய்ததறிக.

## வை. மு. சடகோபராஜனுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.: **தோன்றா** – (பிறர்க்குத்)தோன்றாத நுட்பமான பொருள்களை, **தோற்றி** – (தான்) தோன்றச் செய்து (காட்டி), **துறைபல முடிப்பினும்** – பல துறைகள் (அமையப் பெரிய நூலைச் செய்து) முடித்தாலும், **தான் தன் புகழ்தல்** – தானே தன்னைப் புகழ்ந்து கொள்வது, **தகுதி அன்று** – தக்கதன்றாம் ; **எ—று.**

> நூல் செய்தவனே சிறப்புப்பாயிரமும் செய்து கொண்டால் தற்புகழ்ச்சி செய்தவனாவ னாதலால், நூல் செய்பவனது புகழாகிய சிறப்புப் பாயிரத்தைப் பிறர் கூறவேண்டு மென்பதாம்.

## பவானந்தம் பிள்ளை

இ—ள்.:– **தோன்றா தோற்றித் துறை பல முடிப்பினும்** – தோன்றாத நுட்பங்களெல்லாம் காட்டிப் பலதுறைப்பட்டு விரிந்த நூலைச்செய்து முடித்தாலும், **தான் தற்புகழ்தல் தகுதி அன்று** – தானே தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் தகுதியன்றாம். **எ—று.**

## கா.நமச்சிவாய முதலியார்

**தோன்றா** – தோன்றாத நுட்பங்களையெல்லாம், **தோற்றி** – காட்டி, **துறை பல** – பலதுறைகள் அமைய, **முடிப்பினும்** – ஒரு நுலைச்செய்து முடித்தலும், **தான்** – நூலாசிரியன்தானே, **தற்புகழ்தல்** – தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல், **தகுதி அன்று** – தகுதியன்றாம்.

**மோசகு பொன்னையா**

பிறருக்குத் தோன்றாத நுட்பக் கூறுகளை யெல்லாம் தோன்றச் செய்து, பல துறைப்பட்டு விரிந்த நூலை ஒருவர் செய்து முடித்தாராயினும், தானே தன்னைப் புகழ்தலாகிய சிறப்புப் பாயிரஞ் சாற்றல் தக்கதன்றாம், எ–று.

தற்புகழ்தல் – தன்னை வியந்துரைத்தல்.

(51)

52. **மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்**
**[1]தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்**
**[2]மின்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்**
**தன்னை மறுதலை பழித்த காலையும்**
**தன்னைப் [3]புகழ்தலுந் தகும்புல வோர்க்கே.**

மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்
தன்னுடைய ஆற்றல் உணரார் இடையினும்
மின்னிய அவை இடை வெல் உறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தகும் புலவோர்க்கே.

mannutai manrattu ōlait tūkkinum
tannutaiya ārral uṇarār itaiyinum
minniya avai itai vel uṟu poḷutinum
tannai maṟutalai paḷitta kālaiyum
tannaip pukaḷtalum takum pulavōrkē.

**என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )**

## When a man may praise himself

But there are exceptions to the above rule; an author may be allowed to praise himself in an address to the king for support

பாடவேறுபாடு:–

1. தன்னிடை
2. மன்னிய
3. புகழ்வதும்

(in which he shows forth the benefits he has been the means of conferring upon mankind); before those who are not acquainted with him and are not aware of his worth; when defending himself before a college of literati, who, on account of his production, are antagonistic to him; and when challenged and railed at by a contemporary author.

## ஒப்புமைப் பகுதி

**வாதுவகை வரில் உணராரிடை வெல்லும் பொழுதில்**
**வழுத்தலுமாம் பதிகமன் றேனூற்டுமறு வுடைத்தே**

**(சுவாமி.:8:4)**

## மயிலைநாதர்

இ—ள்.: [1]நூல் செய்தோன் பாயிரஞ் செய்யிற் றன்னைப் புகழ்ந்தானாம்; ஆகவே தன்னைப் புகழ்தல் தகுதியன்றென்றார்; ஈண்டுச் சொன்ன [2]இடங்களினாயின் தன்னைப் புகழ்தலும் தகும், எ—று.

இவ்விரண்டு சூத்திரமும் [3]பனம்பாரம்

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், தற்புகழ்ச்சியும் ஒரோ வழிக் குற்றமன்று என்பது உணர்—ற்று.

இ—ள்.: இவ்விடங்களாயின், தன்னைப் புகழ்தலும் தகுதியாம் புலவோற்கு, எ—று.

புகழ்தலும் என்ற உம்மையான் இவ்விடங்களினும்
தன்னைப் புகழாமையே தகுதி என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், தன்னைத் தான் புகழ்வது இவ்விடத்தெனக் கூறுகின்றது.

---

பாடவேறுபாடு.:—

1. மேல் நூல்செய்தவன்
2. இடங்களிற்றன்னை.
3. பனம்பாரனார்;
   பனம்பாரனம்;
   பன்னிபாரம்.

**இ–ள்.: மன்னுடைய மன்றத்து ஓலைத் தூக்கினும்** – அரசுடைய அவைக்கண் செல்லும் ஓலைச் செய்யுளினும், **தன்னுடைய ஆற்றல் உணரார் இடையினும்** – தனது கல்விப் பெருமையை உணரார் இடத்தினும், **மன்னிய அவையிடை வெல்லுற பொழுதினும்** – ....., * **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னிடத்து எதிர்வாதி கல்வியெளிமை தோன்ற இகழ்ந்த காலையும், **தன்னைப் புகழ்தலும்** – இவ்விடங்களிற் றன்னைப் புகழ்ந்து கூறுதலும், **தகும் புலவோற்கே** – புலவோற்கு முறையாம், **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** தற்புகழ்ச்சியும் ஒரோ விடத்துக் குற்றமாகா தென்று சொல்லுகின்றது.

**இ–ள்.: மன்னுடை மன்றத்து** – அரசனது சபைக்கெழுதும், **ஓலைத் தூக்கினும்** – சீட்டுக்கவியிலும், **தன்னுடை யாற்ற லுணராரிடையினும்** – தனது வலிமையை யறியாதாரிடத்திலும், **மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்** – பெரிய சபையில் வாதஞ் செய்து வெல்லும் பொழுதும் – **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னை யெதிரி பழித்த காலத்திலும், **தன்னைப் புகழ்தலும்** – தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளலும், **புலவோற்கு**– புலவனுக்கு, **தகும்** –தகும், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** தன்னைப் புகழும் இடமுணர்த்துகின்றது.

**இ–ள்.: மன்னுடை மன்றத்து** – இராச சபையிலும், **ஓலைத் தூக்கினும்** – சீட்டுக் கவியிலும், **தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்** – தன்னுடைய கல்வியின் வலிமையைச் செருக்கினாலே அறியா திருந்தவ ரிடத்திலும், **மன்னிய அவையிடை வெல்லுற பொழுதினும்** – நிலைபெற்ற சபையிலே (பிறரொடு வாதித்து) வெற்றிகொள்ளுஞ் சமையத்திலும், **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தனக்கு விரோதியாகிய புலவன் தன்னைப் பழித்த இடத்திலும், **புலவோர்க்கு** – புலவர் கூட்டத்திற்கு, **தன்னைப் புகழ்தலுந் தகும்** – (தனித்தனி) தன்னைப் புகழ்ந்து கொள்ளுதலுந் தகும், **எ–று.**

> 'அஃதை தந்தை யடுபோர்ச் செழியர்' என்றாற்போல, தன்னை யென்னும் ஒருமையிற் புலவரென்னும் பன்மை வந்த பால்வழுவமைதி, இனிப் புகழ்தலுந் தகுமென்ற இழிவு சிறப்பும்மையால், இவ்விடங்களிலுந் தன்னைப் புகழவாகா தென்பது கருத்து.

---

* இப்பகுதி மூலநூலில் சிதைந்துள்ளது

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :–** **மன்னடை மன்றத்து** – அரசனது சபையிலும், **ஓலைத் தூக்கினும்** – சீட்டுக் கவியிலும், **தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்** – தன்னுடைய கல்வித் திறத்தை அறியாதாரிடத்தும், **மன்னிய அவையிடை** – பெரிய சபையில், **வெல்லுறு பொழுதினும்** – வாதஞ்செய்து வெல்லும் போதும், **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தனக்கு விரோதியான புலவன் தன்னை நிந்தித்த காலத்தும், **தன்னைப் புகழ்தலும்** – தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளுதலும், **புலவோற்கு** – புலவனுக்கு, **தகும்** – தகுதியாம்.

குறிப்பு :–
'புகழ்தலும்' என்றதின் இழிவும்மையால், இவ்விடங்களிலும் தன்னைப் புகழாமையே தகுதி என்று குறிப்பித்தபடி புலவோர்க்கு' என்னும் பாடத்தில் பால்வழுவமைதி.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்** – அரசனது சபைக்கெழுதுஞ் சீட்டுக்கவியிலும், **தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்** – தனது கல்வி வலிமையை அறியாதாரிடத்திலும், **மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்** – பெரிய சபையில் வாதஞ் செய்து வெல்லும் பொழுதும், **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னை எதிரி பழித்த காலத்திலும், **தன்னைப் புகழ்தலும் புலவோற்குத் தகும்** – தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளலும் புலவனுக்குத் தகும், **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்** – அரசனது சபைக் கனுப்புஞ் சீட்டுக்கவியிலும், – **தன்னுடை ஆற்றல் உணரார் இடையிலும்**– தனது கல்வி வன்மையை அறியாதாரிடத்திலும், **மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்** – பெரிய சபையில் வாதஞ்செய்து வெல்லும் பொழுதிலும், – **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னை எதிரி பழித்த காலத்திலும், – **தன்னைப் புகழ்தலும் புலவோற்குத் தகும்** – தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளலும் புலவனுக்குத் தகும். **எ–று.**

புகழ்தலும் தகும் என்னு மிழிவுசிறப்பும்மையால் இவ் விடங்களிலுந் தன்னைப் புகழாமையே நன்றென்பது கருத்து. மன்னுடை மன்றத்தும் ஓலைத் தூக்கினும் என்றிரண்டாக வுரைப்பாருமுளர்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்** – அரசனது சபைக்கு எழுதுகின்ற சீட்டுக்கவியிலும், **தன்னுடைய ஆற்றல் உணரார் இடையினும்**–தன்னுடைய (கல்வியின்) வலிமையை அறியாதவரிடத்திலும், **மன்னிய அவையிடை வெல்லுற பொழுதினும்** – நிலைபெற்ற சபையிற் (பிறரோடு வாதஞ் செய்து) சயிக்கும் பொழுதிலும், **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னை எதிரியாகிய புலவன் இகழ்ந்து பேசிய காலத்திலும், **தன்னை புகழ்தலும்** – தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளுதலும், **புலவோர்க்கு** – புலவனுக்கு, **தகும்** –; **எ–று.**

புகழ்தலும் என்ற இழிவுசிறப்பும்மையால், இவ்விடங்களிலும் தற்புகழ்ச்சி செய்யாமையே மேம்பட்ட தென்பது பெறப்படும்.

பாயிரம் நூற்கு இன்றியமையாத தென்பது.

## பவானந்தம்பிள்ளை

**இ–ள்.:– மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்** – அரசனது சபைக்கெழுதுஞ் சீட்டுக்கவியிலும், **தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்**– தனது கல்வி வலிமையை அறியாதாரிடத்திலும், **மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்** – பெரிய சபையில் வாதஞ் செய்து வெல்லும் பொழுதும், **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னை எதிரி பழித்த காலத்திலும், **தன்னைப் புகழ்தலும் புலவோற்குத் தகும்** – தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளலும் புலவனுக்குத் தகும். எ–று.

'புகழ்தலும்' என்ற இழிவு சிறப்பும்மையால் இவ்விடங்களிலும் தன்னைப் புகழ்ந்துகொள்ளலாகாது என்பது கருத்தாயிற்று.

## கா.நமச்சிவாய முதலியார்

**மன்னுடை மன்றத்து**– அரசனது சபைக்கு, **ஓலைத் தூக்கினும்** – (எழுதிவிடும்) சீட்டுக் கவியிலும், **தன்னுடை ஆற்றல் உணரா ரிடையினும்** – தனது (கல்வி) வலிமையை அறியாதா ரிடத்திலும், **மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்** – பெரிய சபையில் (வாதஞ்செய்து) வெல்லும் பொழுதும், **தன்னை மறுதலை பழித்த காலையும்** – தன்னை எதிரி பழித்த

காலத்திலும், **தன்னைப் புகழ்தலும்** – தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளலும், **புலவோற்கு** –புலவனுக்கு, **தகும்** – தகுதியாம்.

'**புகழ்தலும் தகும்**' என்ற இழிவுசிறப்பு உம்மையால் இவ்விடங்களிலும் தன்னைப் புகழாமையே சிறப்புடைத் தாம் என்பது கருத்து.

## மோசசு பொன்னையா

அரசவைக்கு எழுதுஞ் சீட்டுக்கவியிலும், தம் கல்வியாற்றலை அறியாதார் இடத்தும், நிலைத்த அவையில் வாதிட்டுப் பிறரை வெல்லுதற்கு அமைந்த காலையும், தம்மை உண்மைக்கு மாறாகப் பழித்த காலத்தும், புலவர் தம்மை வியந்துரைத்தலும் தகவுடைத்தாகும், எ–று.

**(52)**

**54. ஆயிர முகத்தா னகன்ற தாயினும்**
**பாயிர மில்லது பனுவ லன்றே.**

**ஆயிரம் முகத்தான் அகன்றது ஆயினும்**
**பாயிரம் இல்லது பனுவல் அன்றே.**

āyiram mukattāṉakaṉṟatu āyiṉum
pāyiram illatu paṉuval aṉṟē.

## என்றி பவார் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**No classic without a preface**

Although a work may contain a thousand beauties or ramifications without a preface it is not classical (it is incomplete).

## மயிலை நாதர்

**இ–ன்.:–** அளவிறந்த இடத்ததாய்ப் பரந்ததாயினும் பாயிரமில்லாதது நூலன்று, எ–று.

ஈண்டுப் பாயிரமென்றது சிறப்புப்பாயிர மென்றுணர்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** இருவகைப் பாயிரங்களும் நூற்கு இன்றியமையாதன என்பது **உணர்–ற்று.**

**இ–ள்.:–** ஆயிரம் உறுப்புக்களான் விரிந்த நூலாயினும் பாயிரம் இல்லாதது நூலன்று, **எ–று.**

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** நூற்குப் பாயிரம் இன்றியமையாமை யெனக் கூறுகின்றது.

**இ–ள்.:– ஆயிர முகத்தான்** – நுண்ணிதாய இலக்கணத்தோடு பல பல துறைகளினாலும், **அகன்றதாயினும்** – விரிவுகள் நூலாகச் செய்யினும், **பாயிரமில்லது** – பாயிரமின்மையுடைய நூல், **பனுவ லன்றே** – நூலன்று, **எ–று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** இருவகைப் பாயிரமும் நூலுக்கு இன்றியமையாச் சிறப்பின வென்பது சொல்லுகின்றது.

**இ–ள்.: ஆயிர முகத்தான்** – ஆயிர முறுப்புகளால், **அகன்ற தாயினும்** – விரிந்த தாயினும், **பாயிர மில்லது** – பாயிர மில்லாதது, **பனுவலன்று** – நூலன் றாகும், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** இருவகைப் பாயிரங்களும் நூலுக்கு இருந்தே தீர வேண்டுமென்ப துணர்த்துகின்றது.

**இ–ள்.:– ஆயிர முகத்தான்–** ஆயிர முகங்களோடு கூடி, **அகன்றதாயினும்** – விரிந்த நூலாயினும், **பாயிர மில்லது–** பாயிர மில்லாதது, **பனுவலன்று** – நூலன்றாம், **எ–று.**

## கா. கோபாலாசாரி – தி.கோ.ரங்காசாரி

**உரை :– ஆயிரம் முகத்தான்** – மிகப் பல உறுப்புகளால், **அகன்றதாயினும்** – விரிந்துள்ள நூலாயினும், **பாயிரம் இல்லது** – பாயிரம் இல்லாதது, **பனுவல் அன்று** – நூலாகாது.

குறிப்பு :–

பாயிரம் இன்றேல் நூல் கற்போன் நூற்பொருளை யறிவதில் இடர்ப்படுவான்; ஆதலின் பாயிரம் வேண்டிய தாயிற்று. இதுபற்றியே "பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு, நுண்பொருட்டாகிய நூலினிது விளங்கும்" என்று பிறர் கூறியதும் என்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– ஆயிரம் முகத்தான் அகன்றது ஆயினும்** – ஆயிர முறுப்புக்களால் விரிந்ததாயினும், **பாயிரம் இல்லது பனுவல் அன்று** – பாயிரமில்லாதது நூலன்றாம், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– ஆயிரம் முகத்தான் அகன்றது ஆயினும்** – ஆயிரம் பிரகாரங்களால் விரிந்ததேயாயினும், **பாயிரம் இல்லது பனுவல் அன்று** – பாயிரமில்லாதது நூலன்றாகும். எ–று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஆயிரம் முகத்தான்** – மிகப்பல வகைகளால், **அகன்றது ஆயினும்** – விரிந்த நூலாயினும், **பாயிரம் இல்லது** – பாயிரமில்லாதது, **பனுவல் அன்று** – நுலன்றாம்; எ–று. ஏ – தோற்றம்

இச் சூத்திரம் முன்னோர் செய்ததை மேற்கோளாகக் கொண்டது.

'எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க' என்பது இலக்கணம் என்னை? "ஆயிர முகத்தா னகன்ற தாயினும், பாயிரமில்லது பனுவலன்றே" என்றாராதலின். பாயிரமென்றது, புறவுரையை நூல் கேட்கின்றான் புறவுரை கேட்கின், கொழுச்சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு போல, அந்நூல் இனிது விளங்குதலின் புறவுரை கேட்டல் வேண்டும்; என்னை? பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு, நுண்பொருட் டாகிய நூல் இனிது விளங்கும்' என்றாராதலின், அப்பாயிரந்தான், தலையமைந்த யானைக்கு வினையமைந்த

பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாயிருத்தலின், அது கேளாக்கால், 'குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சிபுக்க மான்போலவும், மாணாக்கன் இடர்ப்படுமென்க என்பது, தொல்காப்பியம் நச்சினார்க்கினி யருரைத் தொடக்கம்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– ஆயிரம் முகத்தான் அகன்றது ஆயினும்** – ஆயிர முறுப்புக்களால் விரிந்ததாயினும், **பாயிரம் இல்லது பனுவல் அன்று** – பாயிரமில்லாதது நூலன்றாம். **எ–று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:–** ஆயிரம் உறுப்புக்களால் விரிந்ததாயினும், பாயிர மில்லாதது நூலன்றாகும். **எ–று.** ஏ–அசை.

## கா.நமச்சிவாய முதலியார்

**ஆயிரம் முகத்தான்** – ஆயிரம் உறுப்புக்களால், **அகன்றதாயினும்** – விரிந்ததாயினும், **பாயிரம் இல்லது** – பாயிரமில்லாதது, **பனுவல் அன்று** – நூலன்றாம்.

## மோசசு பொன்னையா

ஆயிரம் உறுப்புக்களைப் பெற்று விரிந்து அமைந்ததாக இருந்தாலும், பாயிரம் இல்லாதது நூலாகாது, **எ–று.**

**(53)**

54. மாடக்குச் சித்திரமு [1]மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோ ணல்லார்க் கணியும்போல் –
நாடிமுன்

ஐதுரையா நின்ற [2]வணிந்துரையை
யெந்நூற்கும் பெய்துரையா வைத்தார் பெரிது.

மாடக்குச் சித்திரமும் மா நகர்க்குக் கோபுரமும்
ஆடு அமைத்தோள் நல்லார்க்கு அணியும் போல் – நாடி
முன்
ஐது உரையா நின்ற அணிந்துரையை எந் நூற்கும்
பெய்து உரையா வைத்தார் பெரிது.

mātakkus siṭṭiramum mā nakarkkuk
kōpuramum
ātu amaiṭṭōḻ nallārkku aṇiyum pōl - nātimuṉ
aiṭu uraiyā niṉṟa aṇinṭuraiyai en nūṟkum
peyṭu uraiyā vaiṭṭār periṭu.

என்றி பவர் ( ஆங்கில மொழிபெயர்ப்பு )

**A preface is an ornament**

As painting to a stately edifice, as turrets to a great city, and as jewels to a fair damsel, so is a preface (an ornament) to a work.

ஒப்புமைப் பகுதி

பாவிற்கு அணிபோல் பனுவல் தெளிவுணர்ந்தோர்
நாவிற்கு வாய்மைபோல் நாரணனாம் – தேவிற்கு
வாய்த்த அருள்போல வாய்ந்ததே நூல்அகத்தாய்
ஏய்த்த பொருட் பாயிரம்

(மாற.அலங்.:64)

---

பாடவேறுபாடு:–

1. மாணகர்க்கு
2. வணிந்துரையே

## மயிலை நாதர்

**எ–ன்,** இஃது அச் சிறப்புப்பாயிரத்தைச் சிறப்பித்ததெனக் கொள்க.

அஃதேல் நூல் கேட்கப் புகுந்தார்க்குப் புறவுரை கேட்டுப் பயன் என்னையோ வெனின், கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு போலப் பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்குமென்பதனாலும் [1]சில வெழுத்தினானியன்ற நூற்கு இன்றியமையாத பாயிரமறியாதாய் [2]பலவெழுத்தினானாகிய நூல் யாங்ஙனம் அறிதியோ? பேதாய் என்று இகழப்படுதலானும் இவ்விருவகைப் பாயிரமும் வேண்டும் என்க.

> இப் பாயிரச் சூத்திரங்களை விரித்தெழுதிற் பரக்குமென் பதனானும் பெரும்பாலும் தாமே பொருள் விளங்கிக் கிடத்தாலானும் உரை விரித்தெழுதிற்றிலம் இவற்றை விளங்க விரித்துரைத்துக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** மேல் பாயிரமில்லது பனுவலன்று என்றார், அஃது அன்றாதற்குக் காரணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:** அறிவுடையோர், மாடம் முதலிய மூன்றற்கும் சித்திர முதலிய மூன்றும் போலக் கருதி, அழகிதாகிய பொருளை உணர்த்தா நின்ற இருவகைப் பாயிரங்களையும் உரைத்து, எவ்வகைப்பட்ட பெரிய நூல்கட்கும் முன்னர்ப் பெய்துவைத்தார் பெரும்பாலும்; ஆதலின் பாயிரமில்லது பனுவலன்றாம், எ–று.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** பல வகைச் சிறப்பினாலும் நிரம்பிய பாயிரம் கேட்க வேண்டுமெனக் கூறுகின்றது.

**இ–ள்.: மாடக்குச் சித்திரமும்** – மாடங்கட்கு எழுதிய சித்திரச் சிறப்புப் போலவும், **மாநகர்க்குக் கோபுரமும்** – பெரிய நகரங்களினின்ற

---

பாடவேறுபாடு.:–

1. சில்லெழுத்தினான்

2. பல்லெழுத்தினான்

கோபுரச் சிறப்புப் போலவும், **ஆடமைத்தோள் நல்லார்க்கு அணியும் போல்** – அழகு அமைத்த வேய் போன்ற தோளையுடைய மாதர்க்கு அணிந்த ஆபரணச் சிறப்புப் போலவும், **நாடி முன்** – எந்நூற்கும் ஆராய்ந்து நூல் முன்னாக, **ஐதுரையாய் நின்ற அணிந்துரையை** – ஆழகாகிய பொருளாய் நின்ற பாயிரத்தை, **எந்நூற்கும்** – எவ்வகைப்பட்ட நூற்கும், **பெய்துரையாய் வைத்தார் பெரிது** – அவ்வவ் நூற்குப் பொருள் கூறு முறையாக வைத்தார் பெருமையோடு, **எ–று.**

நூல் கேட்கின்னே புறவரைவு கேட்டுப் பயன் என்னையோ வெனின் கொழுச் சென்ற வழித் துன்னூசி இனிது செல்லுமாறு போலப் பருப்பொருட்டாகிய பாயிரம் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்கும் என்றலின்,

அப்பாயிரம் தோன்றலை அமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும் அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றா யிருத்தலின் இது கேளாக்காற் குன்று முட்டிய குரீஇ போலவும் குறிச்சி புக்க மான் போலவும் மாணாக்கன் இடர்படுமென்று உணர்க.

சில்லெழுத்தானியன்ற நூற்கு இன்றியமையாத பாயிரம் அறியாதாய் பல்லெழுத்தினானாய நூல் யாங்ஙனம் அறிதியோ பேதாய் என்று இகழ்ப்படுதலானும் இவ்விருவகைப் பாயிரமும் கேட்க வேண்டுமென்று உணர்க.

இனி இந்நூற்குச் சிறப்புப் பாயிரம் சொல்லுதும் மலர்தலையுலகின்....... இருந்தவத் தோனே. ஆக்கியோன் – பவணந்தி;

வழி – முன்னோர் நூலின் வழியே;

எல்லை – குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனு நான்கு எல்லையின்;

நூற்பெயர் – நன்னூற் பெயரின் வகுத்தனன்;

யாப்பு – தொகை வகை விரியிற் றருகென;

நுதலிய பொருள் – அரும் பொருள் ஐந்தையும் ;

கேட்போர் – சீயகங்கன் ;

பயன் – மாண் பொருள் முழுவதும்,

காலம் – சீயகங்கன் காலத்து;

களன் – சீயகங்கன் அவைக்கண்;

காரணம் – யாவரும் உணர்தல் எனப் பதினொருவகை இலக்கணத்தோடும் சிறப்புப் பாயிரம் வந்தது.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்னே நூலன்றென்றதற்குக் காரணஞ் சொல்லுகின்றது.

**இ–ள்.: மாடக்கு** – மாளிகைக்கு, **சித்திரமும்** – ஓவியமும், **மாநகர்க்கு** – பெரிய பட்டணத்திற்கு, **கோபுரமும்** – சிகிரியும், **ஆடு**– நாட்டியஞ் செய்கின்ற, **அமை**–மூங்கில் போன்ற, **தோள்** – தோள்களை யுடைய, **நல்லார்க்கு** – மங்கையருக்கு, **அணியும்** – ஆபரணமும், **போல்**– போல, **நாடி** –நினைத்து, **ஐது**–அழகிய பொருளை, **உரையா நின்ற** – சொல்லுகின்ற, **அணிந்துரையை** – இருவகைப் பாயிரங்களையும், **உரையா** – உரைத்து, **எந்நூற்கும்** – எவ்வகைப்பட்ட பெரிய நூலுக்கும் , **முன்**– முன்னே, **பெய்து** – சேர்த்து, **வைத்தார்** – ஆசிரியர் வைத்தார், **பெரிது**– மிகவும், **எ–று.**

## முகவை இராமானுச கவிராயர்

இது, பாயிரமில்லது பனுவலன்று என்றதற்குக் காரண முணர்த்துகின்றது.

**இ–ள்.: மாடக்கு** – மாளிகைக்கு, **சித்திரமும்** – சித்திர வேலையும், **மாநகர்க்குக் மாடத்துக்கு கோபுரமும்** – பெருமை தங்கிய நகரத்திற்குக் கோபுர வாயிலும், **ஆடு** – நடனஞ் செய்யும், **அமைத்தோள்** – மூங்கில் போன்ற தோள்களை யுடைய, **நல்லார்க்கு** – விலைமாதர்க்கு, **அணியும் போல்** – ஆபரணமும் போல, **நாடி**–நூலுக்குப் பாயிரஞ் சிறந்த தென்றெண்ணி, **ஐதுரையா நின்ற** – அழகிய பொருளை யுரைக்கின்ற, **அணிந்துரையை** – பாயிரத்தை, **உரையா**–உரைத்து, **எந் நூற்கும்** – எவ்வகைப்பட்ட நூல்களுக்கும், **பெரிது**– பெருமையை யுடையதாக, **முன் பெய்து வைத்தார்** – முதலிலே சேர்த்து வைத்தார் புலவர், **எ–று.**

'மாடத்துக்கு' என்பது, மாடக்கு என அத்துச் சாரியை குறைந்து நின்றது.

மாட முதலிய மூன்றிற்குஞ் சித்திர முதலிய மூன்றும் போல,

ஐதுரையா நின்ற வணிந் துரையை நாடி யுரையா

எந்நூற்கும் பெரிது முன் பெய்து வைத்தாரெனக் கூட்டிப் பெரிது என்பதைப் பெரிதாக வென முற்றெச்சமாக்குக.

## ஆறுமுக நாவலர்

இ—ள்.: **மாடக்குச் சித்திரமும்** – மாளிகைக்குச் சித்திரமும், **மாநகர்க்குக் கோபுரமும்** – பெரிய பட்டணத்திற்குக் கோபுரமும், **ஆடு அமைத் தோள் நல்லார்க்கு அணியும் போல் நாடி** – நடிக்கின்ற மூங்கில் போலந் தோள்களை யுடைய மங்கையர்க்கு ஆபரணமும் போல நினைத்து, **ஐது உரையா நின்ற அணிந்துரையை உரையா** – அழகிய பொருளைச் சொல்லுகின்ற பாயிரத்தை யுரைத்து, **எந் நூற்கும் முன் பெரிது பெய்து வைத்தார்** – எவ்வகைப் பட்ட பெரிய நூலுக்கும் முதலிலே பெரும்பாலுஞ் சேர்த்து வைத்தார் ஆசிரியர், எ—று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.: மாடக்கு, – மாளிகைக்கு, – சித்திரமும் – சித்திரங்களைப் போலவும், – மாநகர்க்கு – பெரிய பட்டணத்திற்கும், – கோபுரமும் – கோபுர வாயிலைப் போலவும், – ஆடு அமைத் தோள் நல்லார்க்கு – நிருத்தஞ் செய்கின்ற மூங்கில்போலுந் தோள்களையுடைய மங்கையருக்கு, – அணியும் போல்– ஆபாரணம் போலவும் நினைத்து, – ஐது உரையாநின்ற அணிந்துரையை உரையா – அழகிய பொருளைச் சொல்லுகின்ற பாயிரத்தை உரைத்து, – எந்நூற்கும் முன் பெரிது பெய்து வைத்தார்– எவ்வகைப்பட்ட மேலான நூலுக்கும் முதலிலே பெருமையாய்ச் சேர்த்து வைத்தார் ஆசிரியர். எ—று.

ஆடு என்பது நல்லாரென்னும் பெயர் கொண்டது.
நிருத்த மாதரென்பது கருத்து.
மாடத்துக்கு என்பது அத்துச்சாரியை குறைந்து மாடக்கு என நின்றது.
பெரிது – குறிப்புமுற்றெச்சம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.: **மாடக்கு** – மாளிகைக்கு, **சித்திரமும்** – சித்திர வேலையும், **மாநகர்க்கு** – பெரிய பட்டணத்துக்கு, **கோபுரமும்**–வாயிற் கோபுரமும், **ஆடு**– நாட்டியஞ் செய்கின்ற, **அமைதோள் நல்லார்க்கு** – மூங்கில் போலுந்

தோள்களையுடைய மகளிர்க்கு, **அணியும்** – ஆபரணமும், **போல்** – போல, **நாடி**–(நூலுக்குப் பாயிரம் இன்றியமையாச் சிறப்புடைய தென்று) எண்ணி, **ஐது உரையாநின்ற அணிந்துரையை** – அழகிய பொருளைச் சொல்லுகின்ற பாயிரத்தை, **உரையா** – உரைத்து, **எ நூற்கும்** – எவ்வகைப்பட்ட நூல்களுக்கும், **முன்**–முதலில், **பெரிது**–பெரும்பாலும், **பெய்து வைத்தார்** – சேர்த்து வைத்தார்கள், (அறிவுடையோர்); **எ–று.**

மாடக்கு=மாடத்துக்கு.
ஆடு நல்லார் என இயையும்;
நாட்டியப் பெண்களென்றபடி.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** மாடக்குச் சித்திரமும் – மாளிகைக்குச் சித்திரமும், மாநகர்க்குக் கோபுரமும் – பெரிய பட்டணத்திற்குக் கோபுரமும், ஆடு அமைத் தோள் நல்லார்க்கு அணியும் போல் நாடி – நடிக்கின்ற மூங்கில் போலுந் தோள்களையுடைய மங்கையருக்கு ஆபரணமும் போல நினைத்து, ஐது உரையாநின்ற அணிந்துரையை உரைணா – அழகிய பொருளைச் சொல்லுகின்ற பாயிரத்தை யுரைத்து, எந்நூற்கும் முன்பெரிது பெய்து வைத்தார் – எவ்வகைப்பட்ட பெரிய நூலுக்கும் முதலிலே பெரும்பாலுஞ் சேர்த்து வைத்தார் ஆசிரியர். எ–று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**பொ–ரை.:** மாளிகைக்குச் சித்திரமும், பெரிய பட்டினத்திற்குக் கோபுரமும், நாட்டியஞ் செய்கின்ற மூங்கில்போன்ற தோள்களையுடைய மங்கையருக்கு ஆபரணமும் போல நினைத்து, அழகிய பொருளைச் சொல்லுகின்ற இருவகைப் பாயிரங்களையும் எவ்வகைப் பட்ட பெரிய நூலுக்கும் உரைத்து, முன்னே (ஆசிரியர்) பெரும்பான்மையும் சேர்த்துவைத்தார். **எ–று.**

மாடத்துக்கு என்பது மாடக்கு என அத்துச்சாரியை குறைந்து நின்றது.

ஆடு நல்லார் என இயையும்; நல்லார் என்றது நாட்டியப் பெண்களை.

## கா.நமச்சிவாய முதலியார்

**மாடக்கு** – மாளிகைக்கு, **சித்திரமும்** – சித்திரமும், **மாநகர்க்கு** – பெரிய நகரத்திற்கு, **கோபுரமும்** – கோபுரமும், **ஆடு** – நாட்டியஞ் செய்கின்ற, **அமைதோள் நல்லார்க்கு** – மூங்கில் போன்ற தோள்களையுடைய மங்கையருக்கு, **அணியும்** – ஆபரணமும், **போல்** – போல, **நாடி** – நினைத்து, **ஐது** – அழகாக, **உரையாநின்ற** – சொல்லுகின்ற, **அணிந்துரையை** – பாயிரத்தை, **உரையா** – உரைத்து, **எந்நூற்கும்** – எவ்வகைப்பட்ட பெரிய நூலுக்கும், **முன்** – முன்னே, **பெரிது பெய்து** – மிகவும் சேர்த்து, **வைத்தார்** – (ஆசிரியர்) வைத்தார்.

மாடத்துக்கு என்பது மாடக்கு என அத்துச்சாரியை குறைந்துநின்றது.

## மோசகூ பொன்னையா

மாளிகைக்கு ஓவியமும், பெருநகருக்கு வாயில் மாடமும், அசையும் மூங்கில் போலுந் தோளுடைய நங்கையர்க்கு அணிகலமும் போல் எண்ணி, முன்னர் அழகை எடுத்தியம்பும் பாயிரத்தையும் நூலின்முன் சேர்த்துச் சிறப்பிக்க வைத்தனர் பண்டையோர், **எ–று.**

மாடக்கு – மாடத்துக்கு: அத்துச்சாரியை தொக்கது.

**(54)**

**நன்னூல் உரைவளம்**

**பாயிரம் முற்றும்**

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை-ஒப்பனையியல் | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்றுகாதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| Essays and Tributes on Tirukkural (1886-1986) | 100.00 |
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமூகவியல் பார்வை | 30.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| சங்க அகப்பாடல்கள் தோழி கூற்று | 170.00 |

---

**692 நன்னூல் உரைவளம் – 2 (பாயிரம் – 2) 75.00**